# கொடும்பாளூர் வேளிர் வரலாறு



சைவ ஞானபானு, சைவத் தமிழ்மணி
சேவாரத்னா
வித்துவான் **வே.மகாதேவன்**

# கொடும்பாளூர் வேளிர் வரலாறு

சைவஞானபானு, சைவத் தமிழ்மணி
சேவாரத்னா
வித்துவான் **வே. மகாதேவன்** எம்.ஏ., எம்.ஃபில்.,
(புலவர்)

**அருள் பதிப்பகம்**
66, பெரியார் தெரு, எம்.ஜி.ஆர். நகர்,
சென்னை - 600 078.
பேசி: 044 - 6538 3000

முதற் பதிப்பு : மார்ச் 2009

நூலின் பெயர்: கொடும்பாளூர் வேளிர் வரலாறு
(மாதந்தோறும் மணிவிழா நூல் மலர்
மலர் எண் - 3)

**விலை : ரூ. 90/-**

மொத்த பக்கங்கள் : 16+160 = 176
எழுத்து : 11 புள்ளி

ISBN : 819076583-3

கணினி அச்சு :
நந்தா கணினியகம், சென்னை - 92.

அச்சிட்டோர் :
ஜூபிடர் ஆப்செட் பிரிண்டர்ஸ், சென்னை - 24.

எனை ஈன்றெடுத்த பெற்றோர்

பேராசிரியர் கா.ம. வேங்கடராமையா

திருமதி அன்னபூரணி

பொற்பாத கமலங்களுக்கு



சமர்ப்பணம்

# செந்தமிழ்க் கலாநிதி

நினைவில் வாழும் தமிழ் அறிஞர் திரு. கா.ம. வேங்கடராமையா அவர்கள் திருப்பனந்தாள் காசிவாசி சுவாமிநாத சுவாமிகள் செந்தமிழ்க் கல்லூரியின் முதல் முதல்வராக 30 ஆண்டுகளுக்கு மேல் பணியாற்றியவர். பணி ஓய்வுக்குப் பிறகும் தமிழ் சமஸ்கிருதம் மற்றும் பிறமொழிகள் ஆய்வு நிறுவனத்திலும், அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திலும், தமிழ்ப் பல்கலைக்கழகத்திலும், திருவனந்தபுரம் பன்னாட்டுத் திராவிட மொழியியல் கழகத்திலும் தமிழ்த் தொண்டு ஆற்றியவர் ஆவார்.

தமிழ், ஆங்கிலம் ஆகிய இரு மொழிகளிலும் பெரும்புலமையும் சமஸ்கிருதம் மற்றும் தெலுங்கு மொழி அறிவும் நிரம்பப் பெற்றிருந்தவர்.

கல்வெட்டு, வரலாற்றுத் துறைகளிலும், சங்க நூல்கள், பக்தி நூல்கள் மற்றும் இலக்கண நூல்களிலும் பெரும் புலமையாளராக விளங்கிப் பல சாதனைகள் படைத்தவர். இவ்வகையில் பல நூறு தமிழறிஞர்களை உருவாக்கிய தமிழ்ப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

தமிழ் கற்பதைக் குறைவாகக் கருதிய மிகப் பலருக்கு நல்லறிவுரைகள் கூறித் தமிழ்க் கல்வி கற்பித்த தயவாளர் இவர். தம் மக்கள் நால்வரையும் தமிழ்ப் புலவர்கள் ஆக்கி அதனால் ஆனந்தம் அடைந்தவர். இவ்வகைக்குத் திரு. கா.ம.வே. அவர்களின் துணைவியார் திருமதி அன்னபூரணி அவர்கள் மிகவும் ஊக்கம் அளித்துதவினார்கள்.

தமிழின் அருமை, பெருமைகளை வெளிநாட்டினரும் உணரும் வண்ணம் ஒலிபெயர்ப்பு, மொழி பெயர்ப்பு நூல்களும், மிக விரிவான தமிழகக் கையேட்டு நூலும் வெளியிட்டுத் தமிழை உயர்த்திப் பிடித்தவர்.

இலக்கியக் கேணி, கல்லெழுத்துக்களில், சோழர்கால அரசியல் தலைவர்கள், கல்லெழுத்துக்களில் தேவார மூவர், ஆய்வுப் பேழை முதலிய 20க்கும் மேற்பட்ட அரிய நூல்களை ஆக்கித் தந்து தமிழன்னையை அலங்கரித்தவர்.

தஞ்சை மராட்டிய மன்னர்களின் வரலாற்றை, அக்காலச் சமுதாய வரலாற்றுடன் ஒருசேர ஆய்ந்து முழுமையாக வெளியிட்டவர். மராட்டியர்களின் மோடி ஆவணங்கள் அனைத்தையும் பதிப்பித்தவர்.

திருக்குறள் உரைக்கொத்து - ஆங்கில மொழி பெயர்ப்பு - ஆராய்ச்சி உரைகளுடன் திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடத்தின் மூலம் வெளியிட்டுத் தமிழ் ஆர்வலர்களால் நன்கு அறியப்பட்டவர். திருக்குறள் ஜைனர் உரையைப் பதிப்பித்தவர்.

இவரது கண்டிப்பான நிர்வாகத் திறன், நேரம் தவறாமை, நல்லொழுக்கம், பக்தி, மற்றவருக்கு உதவும் பண்பு, நன்றி மறவாமை ஆகியவை இவரிடம் கற்ற பல்லாயிரம் புலவர்களிடமும் படிந்தன.

தெலுங்கராகப் பிறந்து, தமிழுக்காகவே வாழ்ந்து, தமிழாகவே விளங்கிய இப்பெருமகனாரைத் திருப்பனந்தாள் காசித்திருமடம் ஆதரித்தது. அத்திருமடம் வாயிலாகப் பலப்பல தமிழ் நூல்கள் வெளிவர உதவிய பெருமையும் இவரைச் சார்ந்தது.

சிவநெறிச் செல்வர், கல்வெட்டாராய்ச்சிப் புலவர், செந்தமிழ்க் கலாநிதி, தமிழ்மாமணி முதலிய பல பட்டங்களைச் சைவ ஆதீனங்களும், தமிழ்ச் சங்கங்களும் இவருக்கு வழங்கிச் சிறப்பித்தன.

இவரின் நூற்றாண்டு விழா 4.4.2010 முதல் 4.4.2011 வரை தமிழ் ஆர்வலர்களால் தமிழகத்தில் பல்வேறு இடங்களில் சிறப்புறக் கொண்டாடப்பட உள்ளது.

செந்தமிழில் சைவத்தில் சீர்த்த அறிஞராய்
வந்தஎங்கள் வேங்கடரா மையாவைச் - சந்ததமும்
போற்றிப் புகழ்ந்து புரையற்ற தொண்டுபல
ஆற்றிப் பணிவோம் அமைந்து.



ஸ்ரீகாசிமடம் அதிபர்
ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமி தம்பிரான் சுவாமிகள் அவர்கள்

கயிலை மாமுனிவர்
திருவளர்திரு. காசிவாசி
முத்துக்குமாரசுவாமித் தம்பிரான்
சுவாமிகள்

அதிபர் காசித் திருமடம்
திருப்பனந்தாள் - 612 504
தஞ்சை மாவட்டம்

சிவ சிவ

# வாழ்த்துரை

வானம் சேர்மதி சூடிய மைந்தனை
நீநெஞ் சேகெடு வாய்நினை கிற்கிலை
ஆனஞ்சு ஆடியை அன்பிலா லந்துறைக்
கோன்எம் செல்வனைக் கூறிட கிற்றியே

- திருநாவுக்கரசர்

வரலாறு மெய்ப்பிக்கப்படுவது இலக்கியம், கல்வெட்டு, செப்பேடு, நாணயம், அகழ்வாய்வு ஆகியவற்றால்தான் 'குடஓலை முறையும்', 'திருப்பதியம் விண்ணப்பிக்கும் பிடாரர்' பற்றிய செய்தியும் உலகுக்குத் தெரிந்தது. கல்வெட்டுகளாலேயே புதியன அறிதலும், பழையதில் தெளிவு நிலையும், ஐயம் அகலும் அமைப்பும் நிகழ்ந்ததை வல்லார் அறிவர்.

கல்வெட்டுகள், இலக்கியங்கள் ஆகியவற்றின் நிலைக் களனில் 'கொடும்பாளூர் வேளிர் வரலாறு' என்ற நூலை வித்துவான் வே. மகாதேவன் எழுதி வெளியிடுவதறிந்து மகிழ்ச்சி.

'தான் நாட்டித் தனாது நிறுத்தல்' எனும் தந்திர உத்தியைக் கைக்கொண்டு தமிழக வரலாற்றுக் களத்தில்

*மூவேந்தர்களுடன் பின்னிப் பிணைந்து பல போர்கள், அறச் செயல்கள் நிகழ்த்திய கொடும்பாளூர் வேளிர் வரலாற்றைப் புலரும் பயில ஏற்ற வடிவில், உள்ளடக்கத்தில் தந்துள்ள 'புலவரின்' எதிர்காலத் தொடர்பணிகள் சிறக்கவும், நூல் பலர்க்கும் சுவைதரும் படைப்பாய் மலரவும், செந்திற்கந்தன் சேவடிகளைச் சிந்தித்து வாழ்த்துகிறோம்.*

கணைநீடெரி மாலர வம்வரை வில்லா
இணையாளயில் மூன்றும் எரித்த இறைவர்
பிணைமாமயி லுங்குயில் சேர்மட அன்னம்
அணையும் பொழில் அன் பிலாலந் துறையாரே

- திருஞானசம்பந்தர்

**- சிவ சிவ**

# அணிந்துரை

**முனைவர் குடவாயில் பாலசுப்ரமணியன்**

வரலாறு எழுதுதல் என்பது முற்காலத்து ஆவணச் சான்றுகளைப் பற்றிக்கொண்டு பல்லாண்டுகள் பின்நோக்கிப் பயணிக்கும் ஒரு சுகானுபவமாகும். அப்பயணத்தில் இதமளிக்கும் தடங்களைவிட, கரடுமுரடான வழித்தடங்களும், வழுக்குப்பாறைகளும், தடம் தெரியாத காடுகளும், சுடுகின்ற பாலை வழிகளும்தான் எதிர்கொள்ளும். கற்பனைச் சிறகுகளை விரித்துப் பறக்க இயலாது. அத்தனையும் கடந்து விருப்பு வெறுப்பற்ற கண்ணோட்டத்தோடு பழமைக் காட்சிகளைக் காணும்போதுதான் உண்மை வரலாறு தெரியும். தான் கண்ட காட்சிகளை மிகையின்றி எழுதுதல்தான் வரலாறு. அவ்வாறு பல ஆண்டுகள் பின்னோக்கிப் பயணித்து புலவர் வே. மகாதேவன் அவர்களால் எழுதப்பெற்றதே "கொடும்பாளூர் வேளிர் வரலாறு" என்னும் இந்த அற்புத நூலாகும்.

சங்ககால இருக்குவேளிர், இடைக்கால இருக்கு வேளிர், மூவர் கோயில் கல்வெட்டின் கால ஆய்வு, பல்லவர் கால சிற்றரசு நிலை, சோழர்கால இருக்குவேளிர் நிலை, வேளிர் குலத்தின் ஒரு கிளை மரபு, இருக்குவேளிரின் அரசியல் என ஏழு பகுதிகளாகப் பகுத்துக்கொண்டு ஒவ்வொரு இயலையும் மிக ஆழமாகவும், நுட்பமாகவும் ஆராய்ந்து தன் கருத்துக்களை எளிமையாகவும், தெளிவாகவும் ஐயத்துகிடமின்றி நிறுவியுள்ள பாங்கு பாராட்டுதற்குரியதாகும்.

சங்ககால இருக்குவேளிர் தம் குலம், அவர்தம் குலமுன்னவர்கள் பற்றிய செய்திகளை, கபிலரின் பாடல்கள் வழி விளக்கும் ஆசிரியர் புறநானூறு, அகநானூறு, மதுரைக் காஞ்சி, பட்டினப்பாலை ஆகியவை கூறும் செய்திகள் அடிப்படையில் அவர்கள் ஆண்ட நிலப்பகுதியைத் தெளிவாக வரையறுத்துக் காட்டியுள்ளார். சிலப்பதிகாரம், பெரியபுராணம் போன்ற நூல்கள் கூறும் செய்திகளையும், தேனி மாவட்டக் கல்வெட்டுக் கூறும் செய்தியையும் தொகுத்து இடைக்காலத்தில் வேளிர் நிலை பற்றித் தெளிவுறக் காட்டியுள்ளார். மூவர் கோயில் கல்வெட்டுக்களைத் துல்லியமாக ஆராய்ந்த நூலாசிரியர்

முன்னை வரலாற்று அறிஞர்களின் கருத்துக்களை நடுவுநிலையோடு மேலும் தெளிவுற நோக்கி கி.பி. 710க்கும் 966க்கும் இடைப்பட்ட காலத்தில் கொடும்பாளூரில் திகழ்ந்த இருக்குவேளிர் அரசர்களைப் பட்டியலிட்டுக் காட்டியுள்ள பாங்கு அவர்தம் நுண்மாண் நுழைபுலத்திற்குச் சிறந்த எடுத்துக்காட்டாகும்.

இதுபோன்றே பல்லவர்கால இருக்குவேளிர் நிலைபற்றியும், சோழர்கால இருக்குவேளிர் பற்றியும் அவர்தம் கிளை மரபு சிற்றரசர்கள் பற்றியும், இருக்குவேளிர் அரசியல் வரலாறு பற்றியும் மிகத் தெளிவாக வரைந்துள்ள பாங்கு பாராட்டுதற்குரியதாகும்.

இருக்குவேளிர் யதுவம்சகேது எனப் பட்டம் புனைந்தவர்களாயினும் அவர்கள் கள்ளர் மரபிற்குரியவர்கள் என்பதைத் திருப்பழனக் கல்வெட்டு மூலம் திரு. வே. மகாதேவன் எடுத்துக் காட்டியுள்ளார். 'இருங்கோளவேள்' என்ற பட்டம் தஞ்சை, திருச்சி, புதுக்கோட்டை பகுதிகளில் வாழும் கள்ளர் இனமக்களின் ஒரு பிரிவினரின் பட்டப் பெயராக இன்றளவும் திகழ்வது சிந்திக்கத் தக்கதாகும். இந்நூல் மூலம் தமிழக வரலாற்றின் ஒரு பகுதி வெளிச்சம் பெற்றுள்ளது என்பது மிகையன்று.

# முன்னுரை

பேரன்புடையீர்,

வணக்கம்!

நீண்டி நெடிய வரலாறு தமிழகத்துக்கு உண்டு. முடியுடை வேந்தர் மூவரும் தமிழக வரலாற்றுக்கு நிலைக்களன்களாக இருந்தவர்கள். இம்மூன்று வேந்தர்களும் தம்முள் அடிக்கடி போரிட்டு வந்தவர்கள். தன் குடைக்கு நிலப்பகுதி முழுமையையும் கொண்டுவர வேண்டும்; தனி அரசு நடத்த வேண்டும் என்று சிந்தித்துச் செயலாற்றிய பெருவீரர்கள்.

மூவேந்தரின் பெருமையும் பலமும் சிறப்பதற்குக் காரணமாக இருந்தது அவர்களுக்கு அமைந்த துணை வலிமையே ஆகும். போரிட வேண்டிய ஒரு மன்னன் தன் வலிமையையும் மாற்றான் வலிமையையும் இருதிறத்திலும் அமைந்த துணை வலிமையையும் ஆராய வேண்டும் என்பார் வள்ளுவர்.

மூவேந்தர் தம் வலிமை அவர்தம் துணை வலிமையால் சிறந்தது. பேரரசர்களுக்குத் துணை வலிமையாக அமைந்தவர்கள் அவர்களுக்கு விசுவாசமாய் இருந்த சிற்றரசர்களே ஆவர். மூவேந்தருக்குப் பெண் கொடுக்கும் உரிமை படைத்தவர்களாக இருந்த பதினென் வேளிர் இச்சிற்றரசர்களுள் சிறப்பிடம் பெற்றவர்கள்.

கொடும்பாளூர் பகுதியைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட இருக்குவேளிர் மரபும் அவர்தம் கிளை மரபினரும் முதல் ஆதித்த சோழன் காலம் தொடங்கி ராஜராஜ சோழன் வரை சோழர் வரலாற்றோடு பின்னி பிணைந்திருந்த நிலையைக் கல்வெட்டுக்கள் அறிவிக்கின்றன. இம்மரபினரைப் பற்றி ஆராய்ச்சியாளரிடம் இருந்த பல்வேறு கருத்துக்களை ஆய்ந்து அம்மரபினரைப் பற்றி விரிவாக வெளிப்படுத்த வேண்டும் என்ற எண்ணத்தின் வெளிப்பாடாக இந்த நூல் அமைந்திருக்கிறது.

வரலாற்றுப் பேரறிஞர்களான நீலகண்ட சாஸ்திரியார், சதாசிவ பண்டாரத்தார், டாக்டர் மா. ராஜமாணிக்கனார் ஆகிய அறிஞர் பெருமக்களின் கருத்துக்களின் அடிப்படையில் அமைக்கப்பட்டுள்ள நூலே இது.

இந்த நூலுக்கு ஆசியுரை வழங்கியருளிய ஸ்ரீகாசிமடம் அதிபர் ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமி தம்பிரான் சுவாமிகள்

அவர்களுக்கு என் மனம் மொழி மெய்களாலான வணக்கங்களைத் திசைநோக்கி உரித்தாக்குகிறேன்.

இந்த நூலுக்கு அணிந்துரை வழங்கிய கல்வெட்டு ஆராய்ச்சியாளர் திரு. குடவாயில் பாலசுப்பிரமணியன் அவர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்த நூலினைச் சிறந்த முறையில் அச்சிட்டு அளித்த சென்னை - 24இல் உள்ள ஜுபிடர் ஆப்செட் பிரிண்டர்சுக்கு நன்றி அறிதலை உரித்தாக்கிக்கொள்கிறேன்.

நூலைச் சிறந்த முறையில் பதிப்பித்துத் தர ஆலோசனைகள் வழங்கிய பதிப்புத் திலகம் திரு. வெள்ளையாம்பட்டு சுந்தரம் அவர்களுக்கு என் நன்றி அறிதலை உரித்தாக்கிக்கொள்கிறேன்.

சிறந்த முறையில் பதிப்பித்த அருள் பதிப்பகத்தாருக்கு நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

எனது மணிவிழாவை முன்னிட்டு மாதம் தோறும் மலர்கின்ற நூல் மலர் வரிசையில் மூன்றாவது மலராக இந்த நூல் வெளியிடப்படுகிறது.

எனக்குத் தோன்றாத் துணையாக இருந்து என்னை வழிநடத்தி வாழ்வு தந்துவரும் ஸ்ரீகாஞ்சி காமகோடி பீடம் ஜகத்குரு சங்கராசார்ய சுவாமிகள் அவர்கள் திருவடிக் கமலங்கள் என் தலைமேலன.

என் ஆய்வுப் பணிகளை சிறந்த முறையில் மேற்கொள்ள ஊக்குவிக்கும் தினமலர் திரு. ஆர்.ஆர். கோபால்ஜி அவர்களுக்கும், திரு. திருப்பூர் கணேசன் அவர்களுக்கும் என் நன்றி அறிதலை உரித்தாக்குகிறேன்.

எனக்கு மணிவிழா என்றவுடன் நிறைய நூல்களை எழுதி வெளியிடுக என்று ஆலோசனை சொல்வதோடு நிறுத்திக் கொள்ளாமல் ஆணையும் இட்ட மும்பை பிரமுகர் திரு. வி. சங்கர் அவர்களுக்கு நன்றி செலுத்தும் கடப்பாடுடையேன் ஆவேன்.

இந்த நூலில் குறைகள் இருப்பின் சுட்டிக்காட்டி எனது எழுத்துப் பணிக்குச் செம்மை சேர்க்குமாறு பணிவுடன் வேண்டிக் கொள்கிறேன்.

நன்றி!

அன்பன்

**வே. மகாதேவன்**

# பொருளடக்கம்

## முதற் பகுதி

# சங்ககால இருக்கு வேளிர்

**சங்ககால மன்னனான இருங்கோவேண்மான் காலத்திய நிகழ்ச்சிகளை விரிவாகக் கூறும் பகுதி இது**

சேரர், பாண்டியர், சோழர், செப்பேடுகளில் அமைந்த 'ப்ரஸஸ்தி' என்னும் வடமொழிப் பகுதி அக்குல முன்னோர் பற்றி அறிவிக்கின்றது. இலக்கியப் பகுதிகளும் அச் செய்திகளை உறுதி செய்கின்றன. சேரர்கள் அக்கினி குலத்தினர்; பாண்டியர்கள் சந்திர குலத்தினர்; சோழர்கள் சூரிய குலத்தினர் என்பது சாசனங்களும் இலக்கியங்களும் உணர்த்தும் உண்மை. கொடும்பாளூர்க் கல்வெட்டு இருக்கு வேளிரை 'யதுவம்ஸத்தவர்' என்று குறிப்பிடுகிறது. **'யதுவம்ஸகேது'** என்னும் சிறப்புப் பெயரைச் சமராபிராமன் என்ற கொடும்பாளூர்ச் சிற்றரசனுக்கு உரியதாக்குகிறது. பூதிவிக்கிரமகேசரியை **'யாதவன்'** என்றே குறிப்பிடுகிறது. யதுகுலக்கண்ணபிரான் மரபினர் யாதவ வம்சத்தவர் ஆவர். (யதுகுலம் சந்திரகுலத்தின் கிளை மரபுகளில் ஒன்று.)

### இருங்கோவேள் பற்றிய புறப்பாடல்கள்

பறம்பு மலைப் பகுதியை ஆண்டவன் பாரி. அவனை வெல்ல முடியுடை வேந்தர் மூவரும் முயன்றனர். வெல்லவொண்ணாத வேந்தர் மூவரும் வஞ்சனையால் அவனை மாய்த்தனர். பாரியின் மகளிரை மணம் செய்விக்கும் பொறுப்பைப் பைந்தமிழ்ப் புலவன் கபிலன் ஏற்றுக் கொண்டான். குறுநில வேந்தர்களைத் தேடிச் சென்றான். மணம்புரிந்து கொள்ளுமாறு வேண்டினான். சிற்றரசர்கள் மூவேந்தர்களுக்கு அஞ்சி மறுத்தனர்.

பொய்யாவாய்மொழிக் கபிலர் பாரிமகளிர் இருவரையும் 'விச்சிக்கோன்' என்னும் குறுநில மன்னனிடம் அழைத்துச் சென்றார். பாரி மகளிரை மணம் புரிந்து

*கொள்ளுமாறு வேண்டினார். அவன் மறுத்தான். பின்னர் 'இருங்கோவேள்' என்ற அரசனை அடைந்து, பாரிமகளிரை மணம்புரிந்து கொள்ளுமாறு வேண்டவே அவனும் மறுத்தான். இந்தச் செய்திகளைக் கபிலரருளிய புறநானூற்றுப் பாக்களின் வாயிலாக அறியலாம்.*

*கபிலர் இருங்கோவேளைப் பற்றிப் பாடிய புறப் பாடல்கள் இவ்வொரு வரலாற்று நிகழ்ச்சியைக் காட்டுவதுடன் இருங்கோவேளிர் குலம் பற்றியும் அவர்தம் குல முன்னவர் பற்றியும் குறிப்பிடுவனவாகவும் அமைந்துள்ளன. அப்பாடல்கள் பின்வருமாறு:*

வெட்சிக் கானத்து வேட்டுவர் ஆட்டக்
கட்சி காணாக் கடமா நல்லேறு
கடறுமணி கிளரச் சிதறுபொன் மிளிரக்
கடிய கதழும் நெடுவரைப் படப்பை
வென்றி நிலைஇய விழுப்புகழ் ஒன்றி
இருபாற் பெயரிய உருகெழு மூதூர்க்
கோடுபல அடுக்கிய பொருள்நுமக்கு உதவிய
நீடுநிலை அரையத்துக் கேடும் கேள்; இனி
நுந்தை தாயம் நிறைவுஉற எய்திய
ஒலியற் கண்ணிப் புலிகடி மாஅல்
நும்போல் அறிவின் நுமருள் ஒருவன்
புகழ்ந்த செய்யுட் கழாஅத் தலையை
இகழ்ந்ததன் பயனே; இயல்தேர் அண்ணல்
எவ்வித் தொல்குடிப் படீஇயர்; மற்றுஇவர்
கைவண் பாரிமகளிர் என்றஎன்
தேற்றாப் புன்சொல் நோற்றிசின் பெரும;
விடுத்தனன் வெலீஇயர்நின் வேலே; அடுக்கத்து
அரும்புஅற மலர்ந்த கரும்கால் வேங்கை
மாத்தகட்டு ஒள்வீ தாய துறுகல்
இரும்புலி வரிப்புறம் கடுக்கும்
பெரும்நல் வைப்பின் நாடு கிழவோயே

*இருங்கோவேள் பாரிமகளிரைக் கொள்ளானாகக் கபிலர் பாடியது - புறப்பாட்டு எண். 202*

இவர்யார் என்குவை யாயின் இவரே
ஊருடன் இரவலர்க்கு அருளித் தேருடன்
முல்லைக்கு ஈத்த செல்லா நல்லிசைப்
படுமணி யானைப் பறம்பின் கோமான்
நெடுமாப் பாரி மகளிர்; யானே
தந்தை தோழன் இவர்என் மகளிர்
அந்தணன் புலவன் கொண்டு வந்தனனே.
நீயே
வடபால் முனிவன் தடவினுள் தோன்றிச்
செம்பு புனைந்து இயற்றிய சேண்நெடும் புரிசை
உவரா ஈகைத் துவரை ஆண்டு
நாற்பத்து ஒன்பது வழிமுறை வந்த
வேளிருள் வேளே; விறல்போர் அண்ணல்;
தார்அணி யானைச் சேட்டிருங் கோவே;
ஆண்கடன் உடைமையில் பாண்கடன் ஆற்றிய
ஒலியல் கண்ணிப் புலிகடி மாஅல்;
யான்தர இவரைக் கொள்மதி; வான்கவித்து
இருங்கடல் உடுத்த இவ்வையகத்து அரும்திறல்
பொன்படு மால்வரைக் கிழவ; வெண்வேல்
உடலுநர் உட்கும் தானைக்
கெடல் அரும்குரைய நாடுகிழவோயே

*பாரிமகளிரை இருங்கோவேள் உழைக்கொண்டு சென்ற கபிலர் பாடியது. புறப்பாட்டு எண். 201*

*இப்புறப்பாடல்களால் அறியப் பெறும் உண்மைகளைக் காண்போம்.*

***முன்னோர் பற்றிய குறிப்புகள்***

**கன்னடத்தில் இருந்து வந்தவர்**

*இருங்கோவேளின் முன்னோரைக் கபிலர்,*

நீயே
வடபால் முனிவன் தடவினுள் தோன்றிச்
செம்பு புனைந்து இயற்றிய சேண்நெடும் புரிசை
உவரா ஈகைத் துவரை ஆண்டு
நாற்பத்து ஒன்பது வழிமுறை வந்த
வேளிருள் வேள்

*என்று குறிப்பிடுகிறார்.*

"வடபால் முனிவனுடைய ஓமகுண்டத்தில் தோன்றி, நாற்பத் தொன்பது தலைமுறைகள் தொன்றுதொட்டு வந்த வேளிர்களுள் இருங்கோவேளும் ஒருவன்; துவரை நகரில் இருந்து தென்னாடு வந்தவன்" என்பது கபிலர் தரும் தகவல்.

துவரை நகரைப் பேரரண் வாய்ந்த நகரமாகக் கபிலர் குறிப்பிடுகிறார். 'துவராபதி', 'துவரை' எனக் குறிப்பிடப் படும் இந்த நகரம் மைசூரைச் சேர்ந்த 'துவாரசமுத்திரம்' என்னும் நகரம் ஆகும். பன்னிரண்டாம் நூற்றாண்டுக்குரிய கல்வெட்டுப் பகுதியில்,

> **துவரை மாநகரில் இருந்து போந்த தொன்மைபார்த்துக் கிள்ளிவேந்தன் நகரில் தென்கவிர் நாடு தன்னில் நிகழ்வித்த நிதியாளர்**

என்ற வரிகள் 'துவரை' நகரில் இருந்து வேளிர்கள் வந்தனர் என்பதனைக் காட்டும் கல்வெட்டுப் பகுதியாகும்.[1]

நச்சினார்க்கினியர் தம் தொல்காப்பிய உரையில் வேளிரைப் பற்றிய சுவையான சில செய்திகளைக் தந்துள்ளார். துவரை நகரில் பதினெட்டு அரசரும், பதினெண்வேளிரும் இருந்தனர். அவர்களைப் பல இடங்களுக்கும் சென்று அகத்தியனார் ஸ்தாபித்தார் - என்பது நச்சினார்க்கினியரின் கருத்து. இதனை,

> **'மலயமாதவன் நிலங்கடந்த நெடுமுடி அண்ணல் உழை நரபதி யருடன் கொணர்ந்த பதினெண்வகைக் குடிப் பிறந்த வேளிர்.'**

என்ற தொடர் காட்டும்.

தேவரெல்லாம் கூடி "யாம்சேர இருத்தலின் மேருத் தாழ்ந்து தென்திசை உயர்ந்தது. இதற்கு அகத்தியனாரே ஆண்டு இருத்தற்கு உரியவர்" என்று அவரை வேண்டிக் கொள்ள,

அவரும் தென்திசைக்கட் போதுகின்றவர்.

1. South Indian Inscriptions. Vol. VII Ins. No. 1044.

அ) கங்கையாருழைச் சென்று காவிரியாரை வாங்கிக் கொண்டு

ஆ) பின்னர் யமதக்கினியாருழைச் சென்று அவர் மகனார் திரணதூமாக்கினியாரை வாங்கிக்கொண்டு

இ) புலத்தியனாருழைச் சென்று அவருடன் பிறந்த குமரியார் உலோபாமுத்திரையாரை அவர் கொடுப்ப நீரேற்றுப் பெயர்ந்து

ஈ) **துவாரபதிப் போந்து நிலங்கடந்த நெடுமுடியண்ணல் வழிக்கண் அரசர் பதினெண்மரையும் பதினெண் குடிவேளிர் உள்ளிட்டாரையும்** அருவாளரையும் கொண்டு போந்து

உ) காடு கெடுத்து நாடாக்கிப் பொதியின் கண் இருந்து, இராவணனைக் காந்தருவத்தால் பிணித்து

ஊ) இராக்கதரை ஆண்டு இயங்காமைவிலக்கித்

எ) திரணதூமாக்கினியாராகிய தொல்காப்பியனாரை நோக்கி "நீர் சென்று குமரியாரைக் கொண்டு வருக" எனக் கூற அவரும், 'எம்பெருமாட்டியை எங்ஙனம் கொண்டு வருவல்' என்றார்க்கு, 'முன்னாகப் பின்னாக நாற்கோல் நீளம் அகல நின்று கொண்டு வருக' என அவரும் அங்ஙனம் கொண்டு வருவழி வையை நீர் கடுகிக் குமரியாரை ஈர்த்துக் கொண்டு போகத் தொல்காப்பியனார் கட்டளை இறந்து சென்று ஒர்வெதிர்ங் கோலை முறித்து நீட்ட அதுபற்றி ஏறினார்; அது குற்றமென்று அகத்தியனார் குமரியாரையும் தொல் காப்பியனாரையும் "நீர் சுவர்க்கம் புகாப்பீர்" எனச் சபித்தார்; "யாங்கள் ஒரு குற்றமும் செய்யாது இருக்க எங்களைச் சபித்தமையால் எம்பெருமானும் சுவர்க்கம் புகாப்பீர்" என அவர் அகத்தியனாரைச் சபித்தார்.

என்னும் தொல்காப்பியப் பாயிர உரைப் பகுதியாலும் அறியலாம்.

டாக்டர் உ.வே. சாமிநாத ஐயரவர்கள் விசுவபுராண சாரம் என்னும் தமிழ் நூலின் பதிகத்தில் 15ஆம் செய்யுளில் **"சம்புமா முனிவன் வேள்வித் தழல் தருமரபில் வந்தோன்"** எனவும் ஏகம்பரநாதருலாவில் **"சம்புகுலத்தொருவன்"** எனவும் வருதலால் இதில் வடபால் முனிவன் எனக் குறித்திருப்பது அச்சம்பு முனிவனோ என்று ஊகித்துள்ளார்.[3]

**புலிகடிமால்**

கபிலர் இருங்கோவேளை 'ஒலியற்கண்ணிப் புலிகடிமால்' என்று இவ்விருபுறப் பாடல்களிலும் குறிப்பிட்டுள்ளார். இதனால் புலிகடிமால் என்னும் சிறப்புப் பெயர் இவனுக்கு இருந்ததனை உணரலாம்.

'புலிகடிமால்' என்ற தொடர் புலியைக் கொன்றவன் என்னும் பொருளைத் தருகிறது. கன்னட நாட்டிலும் ஒரு குடியினர் புலியைக் கொன்ற இனத்தவராகக் குறிப்பிடப் படுகின்றனர். அதனை ஒட்டிய கதைகள் பல வழங்குகின்றன. 'ஹொய்சள' அரசர் தோற்றம் பற்றிய கதைகள் இவை.

**கதை : 1**

முன்னொரு காலத்தில் 'சளன்' என்னும் யாதவ வம்ச அரசன் ஒருவன் சஂகிய மலைகள் (Western Ghats) பகுதியில் வேட்டையாடிக் கொண்டிருந்தான். வேட்டையாடும் போது முனிவர் ஒருவர் தவம்புரிந்த இடத்திற்கருகே முயல் ஒன்று புலியை எதிர்த்துப் போர்புரிவதைக் கண்டான்; அதிர்ச்சியில் ஆழ்ந்தான். புலியால் தொல்லை வரும் என்று அறிந்த முனிவர் புலியைக் கண்டு "சளனே! புலி கொல்க!" (அதம் ஹொய் சள) என்று அந்த அரசனுக்குக் கட்டளை இட்டார். அரசன் உடை வாளால் புலியைக் கொன்றான். அதுமுதல் ஹொய்சளன் என்ற பெயர் ஏற்பட்டது என்று மைசூர் மாநில பேலவாடி தளவட்டம் பேலவாடிக் கோவில் கல்வெட்டுக் கூறுகிறது.

3. புறநானூறு - உ.வே.சா. குறிப்புரை. வரி - 8, புறம் - 201

**கதை : 2**

ஹொன்னாவரம் கேசவப் பெருமாள் கோவில் கல்வெட்டு முயல் புலியை எதிர்த்த செய்தியைத் தவிரப் பிற செய்திகளைச் சொல்கிறது.

**கதை : 3**

அரிசிக் கரை வீரவல்லாள தேவனின் கல்வெட்டுச் சில மாறுபாடுகளுடன் இக்கதையைத் தருகிறது. சளன் என்பவன் முனிவன் ஒருவனுடைய மந்திர வலிமைக்காக அவனை வணங்கினான்; சசகபுரம் அரசினை வழங்குவதற்காக மந்திரச் செயல்கள் புரியப் பெற்றன. இதனை அழிக்க வாசந்திகா தேவி புலி உருவத்தினை எடுத்து வந்தாள். அப்புலியைக் கொன்ற ஹொய்சள வேந்தன் இப் பெயரினைப் பெற்றான் எனக் கூறுகிறது.

**கதை : 4**

**'தபங்கர்'** என்ற முனிவர் காட்டில் தவம் புரிந்தார். ஒரு புலி அவர் மேல் பாய நெருங்கியது. அதனைக்கண்ட முனிவர் வேட்டையாடி கொண்டிருந்த 'சளன்' என்ற அரசனை நோக்கி 'ஹொய்சள' என்று கூறினார். அப்புலியைத் தன் அம்பால் எய்து கடிந்தான். 'ஹொய்சளன்' எனப்பட்டான் என்பது ஒரு கதை.

**கதை : 5**

சசகபுரத்தை அடுத்த காட்டில் உள்ள 'வாஸந்திகா தேவி' என்ற குலதேவதையைச் சளன் வணங்கப் போனான்; வழியில் புலியினாலே தடுக்கப்பட்டு வருந்தினான். கோவிலில் இருந்த பெரியவர் 'ஹொய்சள' என்று சொல்லி இரும்புத் தடி ஒன்றைத் தந்தார். அவன் தடியால் புலியைக் கடிந்து ஹொய்சளன் ஆனான்.

*கதை : 6*

*முனிவனின் கட்டளைப்படிப் புலியைக் கொன்ற 'சளன்' 'ஹொய்சளன்' ஆனான். முனிவர் சளனைப் பாராட்டினார். சளனுக்குப் பொருள்தருமாறு பொது மக்களுக்குக் கட்டளை இட்டார். ஒவ்வொருவரும் தலைக்கு ஒரு பணம் (4 அணா 8 பைசா) தந்தனர். ஐந்தே ஆண்டுகளில் சளன் பெரும் செல்வந்தனானான். இடிந்து கிடந்த துவாரசமுத்திரக் கோட்டையைச் செப்பனிட்டான். பேரரசனானான்.*

*கன்னட மொழியில் ஹொய் என்றால் எறி என்று பொருள். 'ஹொய்சள' என்ற தொடருக்குச் 'சளனே எறிக' என்பது பொருள். மைசூர் மாநிலக் காடூர் மாவட்ட முட்கேரே தாலுகாவில் உள்ள சிற்றூரில் வாசந்திகா கோயில் உள்ளது என்றும் இது ஜைனத் தொடர்புடையது என்றும் ஹொய்சளர் தோற்றம் பற்றிய எல்லாக் கதைகளும் புலியுடன் தொடர்பு கொண்டுள்ள என்றும் வரலாற்று அறிஞர் கூறுவர்.[4] ஹொய்சள இனத்தின் முதலரசன் சளன் கி.பி. 1007இல் வாழ்ந்தவன் என்பர்.*

*ஹொய்சளர் கன்னட நாட்டில் துவாரசமுத்திரத்தில் கோட்டையைச் செப்பனிட்டுப் பதினொன்றாம் நூற்றாண்டின் தொடக்கம் முதல் வாழ்ந்த - புலிகடிந்த மரபினருக்குரிய பேரரசர்.*

*'இருங்கோவேள்' துவரை நகரில் இருந்து வந்தவன் புலிகடிமால் எனப்பட்டவன். இவன் சங்க காலத்தவன்.*

*கன்னட நாட்டில் ஒரு மரபினரின் இரண்டு கிளைகளுள் இருங்கோவேள் மரபினரின் முன்னோர் தமிழகத்துக்கு வந்தவராகவும், ஹொய்சளரை அங்கேயே இருந்தவராகவும் கொள்ளலாம்.[5]*

---

4. The Struggle for Empire, Page 226.

5. *மதுரை நாயக்கர் வரலாறு - அ.கி. பரந்தாமனார், பக். 14.*

**வேறொரு கருத்து**

இவ்வாறு பொருள் கொள்ளாது வேறோரடிப் படையில் ஔவை சு. துரைசாமிப் பிள்ளையவர்கள் தம் புறநானூற்றுக் குறிப்புரையில் வரைந்துள்ளார். 'வடபால் முனிவன் தடவினை' ஓமகுண்டமாகவோ - புலி கடிந்த செயலைப் புலியைக் கொன்றதாகவோ அவர் கொள்ளவில்லை.

மேற்குத் தொடர்மலைப் பகுதியினர் நான்கு பக்கமும் மலைமுடிகள் சூழ்ந்த இடத்தைத் தடவென்றும் கோட்டமென்றும் கூறுகிறார்கள். முனிவன் தடவு என்றது முனிவன் ஒருவன் இருந்த மலைமிசை இடைநிலப் பகுதியாகும். அந்த நிலத்தில் இருந்த அரசன் - வேளிர்குலத்தவன் அப்பகுதியின் கிழக்கில் இருந்த 'புலிநாடு', 'பன்னாடு' என்று வழங்கும் கன்னட நாட்டு வேந்தனை வென்றதுபற்றிப் புலிகடிமால் எனப்பட்டான் எனக் கொள்வது நேரிது. ஆந்திர அரசன் சாதவாகன வம்சத்தவன் 'புலிமா' எனப் பட்டான். சாதவாகன அரசன் புலிமாவை வென்றது பற்றி 'இருங்கோவேள்' 'புலிகடிமால்' எனப்பட்டான் என்றும் கொள்ளலாம் என்பர்.

சாதவாகனர் ஆட்சி கி.மு. மூன்றாம் நூற்றாண்டிலேயே தொடங்கியது. அப்பொழுதே துவராபதி நகரம் சிறப்புப் பெற்று இருந்தது. ஸ்ரீபுலுமாயி புலிமாயி எனச் சாதவாகனர் பெயர் காணப்பட்டாலும் கன்னட மொழியில் அது 'புலிமெய்' என்று வழங்கும் என்றும், 'புலி போலும் மெய் வலிமை உடையவன்' என்பது இதன் பொருள் என்றும் ஆய்வாளர் கூறுவர். ஹொய்சளர்க்கு ஆயினும் இது பொருந்தும் என்று அவர் கூறுவர். சளனும் இருங்கோவேளும் புலிமாயினை வென்று இப் பெருமை பெற்றனர் என்பது ஆராய்ச்சிக்கு இடமானதாகும். இவ் வேளிர்கள் வேளஹத்தி(Belgam)ல் இருந்து கங்கநாடு கொங்கு நாடுகளின் வழியாகத் தொண்டை நாட்டை அடைந்தனர் இவர் மரபினரே கொடும்பாளூர்ச் சிற்றரசர் என்பர்.

**இருங்கோவேள் வரலாறு**

இருங்கோவேளைப் பற்றிப் புறநானூறு, அகநானூறு, மதுரைக் காஞ்சி, பட்டினப் பாலை ஆகிய நூல்கள் குறிப்பிடுகின்றன.

தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனைப்[6] பேராற்றல் படைத்த வேந்தர் சிலர் எதிர்த்தனர்.

முடியுடை வேந்தர்களான சேரனும் சோழனும் ஒரே அணியில் நின்றனர்.

சோழ நாட்டுக் குறுக்கையைத்[7] தலைநகராகக் கொண்டு ஆண்ட திதியனும், சேலத்தின் வடபகுதிக்கும் கங்கநாட்டுள் ஒரு பகுதிக்கும் தலைவனாக இலங்கியவனும் (இடைக்காலத்து நிகரிலி சோழ மண்டலம்) 'அதிகமா' எனக் கன்னடக் கல்வெட்டுக்களில் கூறப்பெறும் 'அதிகமான்' மரபினனுமாகிய எழினியும்,[8] 'எருமைநாடு' என்று கல்வெட்டுகளில் கூறப்படும் மைசூர்ப் பகுதியினான 'எருமையூரன்' என்னும் சிற்றரசனும்,[9]

நெஞ்சத் தடத்தப்பிய சாந்தின் இனமணம் கடுக்கும் கொடும்பைச் சிற்றரசரின் முன்னோன் ஆன இருங்கோ வேண்மானும், இயல்தேர் பொருநனும் ஆகிய குறுநில மன்னர் ஐவரும் பெருநில வேந்தருக்கு உதவியாய் இருந்தனர்.

முடியுடை வேந்தர் இருவரும், குறுநில வேந்தர் ஐவரும் ஆக எழுவரும் கூடிப் பாண்டியன் நெடுஞ்

6. புறநானூறு, பாடல் எண். 19, 23, 78

7. விருதராசபயங்கர வளநாட்டுக் குறுக்கை நாடு (250+1914) பிற்காலத்து வழக்காறு. வீரட்டத் தலங்களுள் ஒன்று.

8. E. Pigraphica Indica Vol. VI p. 331

9. See. E. Pigraphica Carnatica Vo. X cu.20. A.RE 1907. p 1. 211 of 1910. எருமி நாடு. சித்தன்னவாசல் தாமிளி கல்வெட்டு

செழியனை எதிர்த்தனர். ஆலங்கானத்தில் அரும் போர் நிகழ்ந்தது. பாண்டியன் நெடுஞ்செழியன் வென்றான்.

கொய்சுவல் புரவிக் கொடித்தேர்ச் செழியன்
ஆலங்கானத்து அகல்தலை சிவப்பச்
சேரல், செம்பியன், சினம்கெழுதிதியன்,
போர்வல்லி யானைப் பொலம்பூண் எழினி
நாரறி நறவின் எருமை யூரன்
**தேம்கமழ் அகலத்துப் புலர்ச்சாந்தின்**
**இருங்கோவேண்மான்** இயல்தேர்ப் பொருநன்என்று
எழுவர் நல்வலம் அடங்க ஒருபகல்
முரைசொடு வெண்குடை அகப்படுத்து உரைசெலக்
கொன்று

வாகை சூடினான். இச்செய்தியினை இலக்கியங்களும் செப்பேடுகளும் புலப்படுத்துகின்றன. இதனால்தான் இப்பாண்டியன் 'தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்' என்னும் பெயர் பெற்றான்.[10]

'இருங்கோவேள்' பாண்டியன் நெடுஞ்செழியனிடம் போரிட்டுத் தோற்றதோடல்லாமல் சோழன் கரிகாற் பெருவளத்தானையும் எதிர்த்தான். கரிகாற்பெருவளத்தான் இருங்கோவேளை அடக்கி ஒடுக்கினான்.

மாத்தானை மறமொய்ம்பில்
செம்கண்ணால் செயிர்த்து நோக்கிப்
புன்பொதுவர் வழிபொன்ற
**இருங்கோவேள் மருங்குசாயக்**
காடு கொன்று நாடாக்கிக்
குளம் தொட்டு வளம்பெருக்கி

என்னும் பட்டினப்பாலை அடிகளால் இதனை அறியலாம்.

10. 'ஆலம்கானத்து அமர்வென்றும்' 'தலையாலங்கானத்தில் தன் ஒக்கும் இருவேந்தரை கொலைவாளில் தலைதுமியக் குறைத் தலையின் கூத்து ஒழித்தும்' என்று பாண்டியர் பட்டயங்கள் குறிக்கும். - S.I.I. Vol. III 26.

### அரையத்தின் அழிவு

*கழாஅத்தலையார் என்பார் சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதன், சோழன் வேற்பஃறடக்கை நற்கிள்ளி, சேரமான் பெருஞ்சேரலாதன், சோழன் கரிகாற் பெருவளத் தான் ஆகிய அரசர் காலத்து இருந்த அருந்தமிழ்ப் புலவர். இக்கழாத் தலையார் இருங்கோவேள் மரபினனின் முன் னோன் ஒருவனிடம் சென்றார்; அவ்வரசன் புலவரை மதிப் புடன் போற்றியிருக்க வேண்டும். வரவேற்றுப் பரிசுகள் வழங்கி இருக்க வேண்டும். மாறாகப் புலவரை இகழ்ந்தான். அதன் பயனாக இருங்கோ வேண்மானுக்குரிய நகரமாகிய 'அரையம்' என்னும் நகரம் அழிந்தது. அந்தக் குற்றமுள்ள குடியிலே தங்கி அழிக என்று குறிப்பிடுகிறார் கபிலர்.*

*அரையத்தைப் பற்றிய குறிப்பினைக் கபிலர் பாடல் தருகிறது. பெருநகரமாக இருந்த அரையம் பேரரையம், சிற்றரையம் என்று இரண்டு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டு இலங்கியது; மலைநிலத்து அமைந்திருந்தது; பாதுகாப்புப் பொருந்திய பழைய ஊர்; பலகோடியாக அடுக்கப்பட்ட பொன்னை இருங்கோவேள் மரபினருக்கு அளித்த ஊர் என்று இப்பாடல் குறிப்பிடுகிறது. இந்த அரையம் அழிந்தமையின் தற்போது அடையாளம் சுட்டுதற்கியலாது. மைசூர்ப்பகுதியில் இருந்த ஊர். பிறநாட்டவனாக இருந்தமையினால் அவ்வரசன் புலவனை அவமதிக்க நேர்ந்து, அரையம் அழிந்தது எனக் கருதலாம்.*

### இருங்கோவேள் ஆண்ட பகுதி

**ஓம்பாஈகை மாவண்கிள்ளி**
**புனலம் புதவின் மிழலை**

*என்னும் புறப்பாடல் பகுதி வேள்எவ்வி மிழலைக் கூற்றத்தை ஆண்டதாகக் கூறுகிறது. மிழலைக் கூற்றம்[11] கீழக் கூறு, நடுவில் கூறு, மேற் கூறு என முப்பிரிவுகளாகப் பகுக்கப்பட்டு இருந்தது. 'மிழலைக் கூற்றத்து ஒக்கூர்'*

*11.* South Indian Inscriptions Vol. VIII Ins. No. 247, 448. I bid IV No. 372.

'மிழலைக் கூற்றத்து மணமேற்குடி' என்றும் மிழலைக் கூற்றத்துத் தென்கூற்றுப் பொன்பற்றி நடுவிற் கூற்றுப் புல்லுகுடி என்றும் கல்வெட்டுக்கள் குறிப்பிடுகின்றன. இச்சான்றுகளால் தஞ்சை அறந்தாங்கித் தாலூகாவும், புதுக்கோட்டைத் திருமெய்யம் தாலுகாவும் மிழலைக் கூற்றத்து இன்றைய பகுதிகள். இருங்கோவேள் இப் பகுதியினை ஆண்டான் என்பது வரலாற்றறிஞர் கருத்து.[12]

புறநானூற்றுப் பாடற்பகுதி 'இருங்கோவேண்மான் அருங்கடிப்பிடவூர்' என்று குறிப்பிடுவதனால் இருங்கோ வேட்குப் பிடவூர் உரியதொரு நகரம் என்பது புலனாகும். பிடவூர் சோழநாட்டு வைப்புத் தலங்களில் ஒன்று. திருச்சி மாவட்ட முசிறி வட்டத்தைச் சேர்ந்த 'திருப்பட்டூர்' திருப்பிடவூர் என்ற பெயருடன் விளங்கியதனைக் கல் வெட்டுக்கள் புலனாக்குகின்றன.[13] இப்பகுதியும் இருங்கோ வேளின் ஆட்சிக்குரியதாக இருந்தமை வெளிப்படை.

பொன்வளம் மிகுந்த மலைப்பகுதியை இருங்கோ வேள் ஆண்டதாகக் கபிலர் கூறுமாறு 'பொன்படு மால்வரை கிழவ' என்றதனால் புலனாகிறது. பொன்வளம் மிக்க இம் மலைத் தொடர் புதுக்கோட்டைச் சீமை மலை நாட்டுக்கு மேற்கே இருந்த கோடை மலைத் தொடரே என ஆய் வாளர் கூறியுள்ளனர்.[14] இருங்கோவேள் புதுக்கோட்டை, திருச்சி மாவட்டப் பகுதிகளை ஆண்ட சங்ககால அரசன்.

**கொடும்பாளூர்வேளிரின் முன்னோன்**

இருங்கோவேளே கொடும்பாளூர்ச் சிற்றரசர்களில் முன்னோன்[15] என்பதனைத் திரு. சதாசிவபண்டாரத்தார், முதலான அறிஞர்கள் புலப்படுத்தியுள்ளனர். இதனால் சங்க காலம் முதல் கொடும்பாளூர் வேளிர் சிறப்புற்றிருந்தமை புலனாகும்.

---

12. பாண்டியர் வரலாறு - சதாசிவ பண்டாரத்தார் - ப.24.
13. புறநானூறு பா. 395. Ins. No. 591 of 1907 - 08.
14. புறநானூறு, ஔவை.சு.து. உரை - பா. எண். 202
15. A.R.E. 1908 part II para.95.

## இரண்டாம் பகுதி

# இடைக்கால இருக்கு வேளிர்

**இராஜசிம்ம பல்லவனுக்கு முற்பட்ட 'இருக்கு வேளிர் வரலாறு' கூறும் பகுதி - சிலப்பதிகாரம், பெரியபுராணம் தேனிமலை கல்வெட்டுச் செய்திகள் தொகுக்கப்பட்டுள்ளன.**

கொடும்பாளூரின் வரலாறு இலக்கிய ரீதியாக மட்டும் அறியப்பெறும் காலமும் ஒன்று உண்டு. சிலப்பதிகாரம், பெரியபுராணம் தரும் குறிப்புகளைக் கொண்டு இலக்கிய அளவிலே மட்டும் வேளிர் வரலாறு அறியப்படுகிறது.

### 1. சிலம்பில் கொடும்பை

இளங்கோவடிகள் பூம்புகாரில் இருந்து மதுரைக்குச் செல்லும் வழியினைச் சிலப்பதிகாரத்தில் மிக அழகாக விளக்கி உள்ளார். மாங்காட்டு மறையவன் கவுந்தி அடிகளிடம் மதுரைக்குச் செல்வதற்கு உரிய மூன்று வழிகளைச் சொல்லுகிறான். அந்த மூன்று வழிகளும் பிரியும் இடத்திற்கு அருகில் உள்ள ஊர் கொடும்பை என்று சிலப்பதிகாரம் குறிப்பிடுகிறது. கொடும்பை என்பது கொடும்பாளூரின் மரூஉப் பெயர் ஆகும்.

### 'கொடும்பை நெடுங்குளம்'

"புகாரில் இருந்து மதுரையை நோக்கிச் செல்பவன் பாலையில் நெடுந்தூரம் செல்ல வேண்டும். பின் 'கொடும்பை நெடுங்குளக் கோட்டகம் புக்கால்' சிவபெருமான் ஏந்திய சூலம்போல மூன்று வழிகள் பிரியும்" என்று மாங்காட்டு மறையவன் மூலமாக மதுரைச் செந்நெறியை இளங்கோ இயம்புகிறார்.

சிலப்பதிகாரப் பழைய உரை, 'கொடும்பாளூர் நெடுங்குளக் கரைக்கு உட்புறமாகப் புகுந்து சென்றால்' என உரை கூறுகிறது. அடியார்க்கு நல்லார், 'கொடும்பாளூர்

நெடுங்குளம் என்ற இரண்டு ஊர்க்கும் பொதுவாகிய ஏரியைக் கடந்தால்' என்று உரை கூறுகிறார்.

கொடும்பாளூரைத் தாண்டி மதுரைத் தொடர்பைத் தடுக்கும் வகையில் ஓர் ஏரி அல்லது குளம் குறுக்கே இருந்தது. இது கடத்தற்கு அரியதாக இருந்தது. இக் குறிப்பை, 'நீந்திப்புக அரியது என்பது தோன்றப் புக்கால் எனக் கூறினார்' என்ற அடியார்க்குநல்லார் உரையடியால் அறியலாம். எனவே நீர் அரண் வாய்ந்த நகரமாகக் கொடும்பாளூர் இருந்தது என்ற ஒரே குறிப்பு மட்டும் சிலம்பால் அறியப் பெறும். வேறு குறிப்புக்கள் கிடைத்தில.

கொடும்பாளூர் அரசர் பற்றி ஏனைய இலக்கியங்களில் குறிப்புக்கள் இல்லை. பெரியபுராணம் இடங்கழிநாயனார் கொடும்பாளூர் அரசமரபினர் எனப் புகழ்கிறது.

## 2. இடங்கழிநாயனார்

### இருக்குவேளிர் மரபினர்

இடங்கழிநாயனார் கோனாட்டுக் கொடும்பாளூரைச் சேர்ந்தவர். இருக்குவேளிர் குல அரசர்.

எழுந்திரைமா கடல்ஆமை இருநிலமா மகள்மார்பில்
அழுந்துபட எழுதும்இலைத் தொழில்தொய்யில் அணியினவாய்
செழுந்தளிரின் புடைமறைந்த பெடைகளிப்பத் தேமாவின்
கொழுந்துணர்கோ திக்கொண்டு குயில்நாடு கோனாடு.

முருகுஉறு செங்கலமது மலர்துதைந்த மொய்யளிகள்
பருகுஉறு தென்திரை வாவிப்பயில் பெடையோடு இரைஅருந்தி,
வருகுறு தண்துளிவாடை மறைய மாதவிச் சூழல்
குருகு உறங்கும் **கோனாட்டுக் கொடிநகரம் கொடும்பாளூர்**

அந்நகரத்தினில் இருக்கும் வேளிர்குலத்து அரசளித்து
மன்னியபொன் அம்பலத்தி மணிமுகட்டில் பாக்கொங்கின்
பன்னுதலைப் பசும்பொன்னால் பயில் பிழம்புஆம் மிசைஅணிந்த
பொன்நெடும் தோள் ஆதித்தன் புகழ்மரபில் குலமுதல்வர்

இடங்கழியார் எனஉலகில் ஏறுபெரு நாமத்தார்...

என்று சேக்கிழார் கூறுகிறார். இப்பாடல்களால் இருக்குவேளிர் பற்றியும் அவர்தம் நாடுபற்றியும் அறியப்பெறும் கருத்துக்கள்.

1. சோலைவளம் நிரம்பியது கோனாடு.

2. இந்தக் கோனாட்டின் தலைநகரமாகக் கொடிநகரம் ஆக விளங்குவது கொடும்பாளூர் நகரம் ஆகும். "கோனாட்டுக் கொடிநகரம் கொடும்பாளூர்" என்று சேக்கிழார் குறிப்பதனைக் '**கொடிமாடத் தண்கொடும்பை**' என்னும் செந்தலைக் கல்வெட்டுப் பாடலுடன் ஒப்பிட்டு நோக்குதல் வேண்டும்.

3. கொடும்பாளூரில் இருந்து ஆண்ட வேளிர்குலத்தவர் இடங்கழியார் ஆவார். 'இருக்குவேளிர்மன்' என்ற நம்பியாண்டார் நம்பியின் வாக்கால் இவர் இருக்குவேளிர் குலத்தவர் என்பது புலனாகும்.

4. கொங்கு நாட்டில் இருந்து கொணர்ந்த பொன்னால் பொன் வேய்ந்த ஆதித்தனுடைய மரபு வழியில் அவதரித்த முதல்வர் என்று பெரியபுராணம் கூறுகிறது. இங்குச்,

> **'சிங்கத் துருவனைச் செற்றவன் சிற்றம்பலம்முகடு**
> **கொங்கிற் கனகம் அணிந்த ஆதித்தன் குலமுதல்வன்**

என்னும் திருத்தொண்டர் திருவந்தாதிச் செய்யுளையும் இத்துடன் ஒப்பிட்டு நோக்குதல் வேண்டும்.

முதல் ஆதித்தசோழன் (871-907) கொங்கு மண்டலத்தை வென்றான். இச்செய்தியைக் கொங்குதேச ராசாக்கள் சரித்திரமும் உறுதி செய்கிறது. முதற் பராந்தக சோழன் கல் வெட்டுக்கள் அங்குக் காணப்பெறுவதும் இவ்வெற்றியைக் காட்டும்.[1] கொங்கு வெற்றியால் பெற்ற பொன்னால் சிற்றம்பலம் பொன்வேய்ந்தான் ஆதித்தன்

1. சோழர் வரலாறு, பக். 31-32

என்று இப்பாடல்கள் காட்டுகின்றன. 'இடங்கழியார்' இருக்கு வேளிர் குலத்தவர். அவர் எவ்வாறு சோழர் குலத்துக்கு முன்னவர் ஆக முடியும்? நம்பியாண்டார் நம்பியின் காலத்தில் சோழரும் வேளிரும் மிக நெருங்கிய மணவினைப் பிணைப்பு உடையவர் ஆக விளங்கினர். இதனை எண்ணிய நம்பியாண்டார்நம்பிகள் மகள் வழி முறைமையில் ஆதித்தனின் குல முதல்வர் என்பதனை மேற் கண்டவாறு குறிப்பிடுகிறார் எனலாம். எது எப்படி ஆனாலும் சோழருடன் இவ்வேளிர்க்கு இருந்த உறவு நெருக்கத்தைப் பெரிய புராணமும் திருத்தொண்டர் திருவந்தாதியும் காட்டுகின்றன எனலாம்.

**இடங்கழியார் காலம்**

'ஆதித்தன் குலமுதல்வன்' எனவும் 'பொன்நெடும் தோள்ஆதித்தன் புகழ் மரபில் குலமுதல்வர்' எனவும் குறிக்கப் பெறுவதனால் முதல் ஆதித்தனுக்கு முற்பட்டவர் இடங்கழியார்.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் தாம் பாடியருளிய திருத் தொண்டர்தொகையில் இடங்கழியாரைக் குறிப்பிடுவர். 'இடங்கழியார் நந்திவர்மன் காலக் கொடும்பாளூர்வேளிர் அரசர் ஆவார்' என்று டாக்டர் மா. இராசமாணிக்கனார் கூறுகிறார்.[2]

டாக்டர் மா. இராசமாணிக்கனாரும், டாக்டர் மீனாட்சியும், மயிலை சீனி வேங்கடசாமியும் சுந்தரரை மூன்றாம் நந்திவர்மன் காலத்தவர் என்று கூறுவர்.[3] எனவே இராசமாணிக்கனார் இடங்கழியாரைச் சிறிது முற்பட்ட வராகக் காட்டுகிறார்.

சுந்தரர் மூன்றாம் நந்திவர்மன் காலத்தவர் என்பவர் தம் கருத்துக்களை மறுத்து 'இராஜசிம்ம பல்லவனே

2. பெரிய புராண ஆராய்ச்சி, பக். 334

3. பல்லவர் வரலாறு, பக். 181-183.

ாடவர்கோன் கழற்சிங்கன்' என்பதனைத் திரு. க. 'வள்ளை வாரணனார் அவர்கள் புலப்படுத்துவர்.[4] சுந்தரர் ழாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும் எட்டாம் ாற்றாண்டின் முற்பகுதியிலும் வாழ்ந்தவர். எனவே )டங்கழியார் கி.பி. 650க்குச் சிறிது முற்பட்டவர் ஆவார்.

திருநாவுக்கரசர், திருஞானசம்பந்தர் திருப்பதியங்களில் ஓடங்கழியார் குறிக்கப்படாததானால் அவர்கட்குப் பிற்பட்டவர்.

இடங்கழிநாயனாரைக் கி.பி. 660க்கும் 840க்கும் ஓடைப்பட்ட நாயன்மார்களில் ஒருவராகத் திருப் பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரி முன்னாள் முதல்வரும் கல்வெட்டாராய்ச்சிப் புலவருமான திரு. கா.ம. வேங்கடராமையா அவர்கள் நாயன்மார் ஆராய்ச்சித் தொகுப்பு[5] என்ற கட்டுரையில் கூறி இருப்பது மேற்கோடற்கு உரியது ஆகும்.

**இடங்கழிநாயனார் வரலாறு**

கொடும்பாளூர் அரசர் இடங்கழியார் பெரும்புகழ் படைத்தவர். சிவபக்தர். புறச் சமயத்தை நினையாதவர். சிவனடியார்கள் விரும்பும் பணிகளைப் புரிபவர். ஆலய வழிபாடு ஓங்கப் பாடுபட்டவர்.

இடங்கழியாரின் ஆட்சிக் காலத்தில் ஒரு சிவனடியார் சிவனடியார்களுக்கு அமுது செய்வதற்கு உரிய நெல் கிடைக்கப் பெறாமல் தவித்தார். இடங்கழியார்க்கு உரிய நெற் பண்டாரத்தில் இரவில் புகுந்தார். புகுந்து நெல் முகக்கும் காலத்துக் காவலர் கையில் சிக்கினார்.

அரசர் அடியவரை விசாரித்தார். காரணம் அறிந்து மனம் இளகினார். "இவரல்லவோ பண்டாரம்" என்று எல்லாப் பண்டாரங்களையும் சிவனடியார்களுக்குக்

4. பன்னிரு திருமுறை வரலாறு Part I, சுந்தரர் காலம்.
5. பெரியபுராணம், ஸ்ரீகாசிமடம் வெளியீடு.

கொடுத்துச் சிவநெறி புரந்து இறைவன் திருவடியடைந்தார் என்று பெரியபுராணம் கூறுகிறது.

**வரலாறு காட்டும் சிற்பங்கள்**

'இவரல்லவோ எனக்குப் பண்டாரம்' என்று கூறி விடுவித்த இடங்கழியார் எல்லாப் பண்டாரங்களையும் முகந்துகொள்க என்று பறையறிவித்தார். இந்த செய்தியைக் காட்டுகின்ற சிற்பங்கள் தாராசுரத்திலும், திருப்பனந் தாளிலும் உள்ளன. இச்சிற்பத்துள் இடங்கழிநாயனார் அழகிய முடியமைப்புடன் அமர்ந்த நிலையில் வடிக்கப் பட்டுள்ளார். தாராசுரம் சிற்பத்தின் கீழ், 'இடங்கழி யாண்டார்' எனக் கல்வெட்டுக் குறிப்பு உள்ளது.

இடங்கழி நாயனார் சிறந்த சிவனடியார் கோனாட் டுத் தலைவர் கொடும்பாளூர் அரசர்[6] என்பது அன்றி, வெற்றிச்செயல் முதலான பிற குறிப்புக்கள் கிடைத்தில.

**தேனிமலை இருக்குவேள் கல்வெட்டு**

திருமையம் வட்டம் தேனிமலையில் ஆண்டார் மடத்துக்கு நேரே ஒரு கல்லில் உள்ள சாசனம் 'இருக்குவேள்' என்ற அரசனைக் குறிப்பிடுகிறது. இவன் கொடும்பாளூர்ச் சாசன வேந்தர்கட்கு முற்பட்டவன் ஆதல் கூடும். 'மலயத்துவான்' என்னும் முனிவன் தேனூர் மலையில் தவம் செய்தான். இருக்குவேள் இவனை வணங்கிப் பள்ளிச் சந்தமாக நாலேகால் நிவந்தம் தந்ததாகக் கல்வெட்டுக் கூறுகிறது.[7]

சிலப்பதிகாரம் தரும் குறிப்புகள், இடங்கழியார் காலத்துக்குப்பின்பு கொடும்பாளூர் அரசர் பரம்பரை ஓரளவு புலன் ஆகிறது. சுமார் கி.பி. 650ஐ ஒட்டி ஆளத் தொடங்கிய அந்த அரசர்களைப் பற்றிக் கொடும்பாளூர் மூவர் கோவில் கல்வெட்டுக் கூறுகிறது.

6. A.R.E. year 1909 part II paragraph 85. The cholas. vol. I 150 F.N.
7. Ins. Text No. 9 of Pudukkottai State Inscription.

மூன்றாம் பகுதி

# மூவர் கோயில் கல்வெட்டின் கால ஆய்வு

**கொடும்பாளூர் மூவர் கோயிலில் பூதிவிக்கிரம கேசரி என்ற அரசனுடைய வடமொழி (கிரந்த எழுத்துக்) கல்வெட்டு ஒன்று உள்ளது. இது கொடும்பாளூர் வேளிரின் மரபினைக் கூறுகிறது. இந்தக் கல்வெட்டின் காலத்தையும், கல்வெட்டில் கண்ட வேந்தரின் காலத்தையும் பற்றி அறிஞர் பெருமக்களின் பல்வேறு கருத்துக்களைத் தொகுத்து ஆராயும் பகுதி இது.**

## மூவர் கோயில் கல்வெட்டின் காலஆய்வு

*கொடும்பாளூர் வேளிரின் மரபினைக் கூறுச் சாசனம் ஒன்று கொடும்பாளூர் மூவர் கோவிலில் உள்ளது. இது வடமொழிக் கல்வெட்டாகும். கிரந்த எழுத்தில் வெட்டப் பெற்றுள்ளது. தொடக்கமும் இறுதியும் சிதைவுற்று விட்டது. இதனைப் 'பூதி விக்கிரமகேசரி' என்ற அரசன் செதுக்குவித்துள்ளான்.*

*கொடும்பாளூர் வேளிரின் மரபினைக் கூறும் இந்தச் சாசனத்தைக் கி.பி. 907-8இல் படி எடுப்பித்து முதன் முதலாகத் திரு. வெங்கய்யா ஆராய்ச்சி செய்தார். பின்னர்த் திரு. நீலகண்ட சாத்திரியார் மொழி பெயர்த்தார். மயிலை. சீனி வேங்கடசாமி அவர்கள் தமிழில் மொழி பெயர்த்துள்ளார். மொழிபெயர்ப்புப் பின்வருமாறு.*

## கல்வெட்டின் மொழிபெயர்ப்பு

.............. நாதகஜயூதஹர: புராஸீத் 1

*யானைகளின் நிரைகளைக் கவர்ந்தவன் முன்பிருந்தான்*

தத்வம்ச்ய: பரவீரஜின் - மளவஜித் ஸ்ரீவீரதுங்கோமுதோ
ஜாதே(த)ாஸ்மாத் அதிவீர இத்யநுபமஸ் தஸ்மாதபூத் ஸங்கக்ருத்

அஸ்மாத் ஶ்ரீ ந்ருபகேஸரீ விவத்ருதே யோ பால ஏவோரகை:
தத்ஸூனு: பரதுர்க்கமர்த்தன இதி க்யாதஸ் ஸ வாதாபிஜித். 2

*மழவர்களை வென்ற பரவீரஜித் அந்த வம்சத்தைச் சேர்ந்தவன். அவனுக்கு அனுபமனான (இணையற்ற) அதிவீரன் பிறந்தான். அவனுக்கு ஸங்கக்ருத் பிறந்தான். அவனுக்கு வாதாபியை வென்ற பரதுர்க்க மர்த்தனன் என்று புகழ்வாய்த்நவன் மகனானான்.*

தஸ்ய ஸமராபிராம புத்ர ஸீத்ராமதேஜஸ.
அதிராஜமங்கலாஜெள யோ நிஜகான சளுக்கிம் 3

*அவனுக்கு இந்திரனை ஒத்த வலிமைவாய்ந்த ஸமராபிராமன் மகன். அவன் அதிராஜமங்கலப்போரில் சளுக்கியரைக் கொன்றான்.*

தஸ்யாச்யுதஸ்ய கமலேவ ஸரஸ்வதீவ
பத்மோத்பவஸ்ய கிரிஜே(வ) ஹரஸ்ய ஸாக்ஷாத்
ப்ரேயஸ்யபூத் அனுபமேதி யதார்த்தநாம்நா
ஶ்ரீசோளராஜதுஹிதா யதுவம்சகேதோ 4

*யது வம்சத்தின் கொடி போன்ற அவனுக்கு அச்யுதனுக்குத் திருமகள் போலவும் தாமரையில் தோன்றிய ப்ரஹ்மாவிற்கு ஸரஸ்வதியைப் போலவும் சிவனுக்குப் பார்வதியைப் போலவும் அனுபமா என்று பொருளோடி யையந்த பெயர்கொண்ட சோழ அரசனின் மகள் மனைவியாக இருந்தாள்.*

தஸ்யாமஸ்ய பபூவ பூதிரபராம்மீனாம்மளாக்யாம் ததன்
ஶ்ரீமான் விக்ரமகேஸரீதி ஸமரே லப்தான்யநாமா ந்ருப:
காவேரீவாரி சோணம் ஸமக்ருதருதிரை: பல்லவஸ்ய த்வஜின்யா:
யோ வீரோ:(ரோ) வீரபாண்ட்யம் வ்யஜயத ஸமரே
வஞ்சவேளந்தகோபூத் 5

*அந்தச் சோழர் மகளிடத்தில் அவனுக்குப் பூதி மீனாமழவன் (தென்னவர்கோன்?) என்னும் பெயரோடு ஓர் அரசன் தோன்றினான். அவன் போர்களில் விக்ரமகேஸரி என்னும் மற்றொரு பெயரை அடைந்தான். அவன் பல்லவர்*

*படைகளின் குருதி கொண்டு காவேரி நீரைச் சிவப்பாக்கினான். அவன் போரில் வீரபாண்டியனை வென்றான். வஞ்சிவேளுக்குக் காலனானான்.*

மத்காரீ(த்தாரி) ஸாமஜா(ன்) ஹத்வா வஸன் விக்ரமகேஸரீ
கொடும்பாளுப்-புராதீந்த்ர-மாளிகா-விவரோதரே. 6

*அவன் மதம் பிடித்த எதிரியின் யானைகளை அழித்துக் கொடும்பாளூரில் உள்ள இந்திர (கிழக்கு?) மாளிகையின் இடை வாழ்கிறான்.*

வித்வத்கல்பதரௌ க்ஷிதீச்வரகரத்வந்த்வாம்புஜேந்தௌ புவம்
யஸ்மின் சாஸதி மேதிநீ(ம்) ஜயரமாஸ்ரீகீர்த்திவாக்வல்லபே
தைக்ஷ்ண்யம் நேத்ரயுகே பு(ப்ரு*)வோஸ்சலநதா கேசேஷு
கார்ஷ்ண்யம் தநௌ
தந்வி(ந்வீ*)நாந் தநுதாபவத் ஸ்தநயுகே சாந்யோந்ய(ஸம்பா) தநம்.
7

*அறிஞர்களுக்குக் கற்பக மரம் போன்றவனும் தாமரையையும் சந்திரனையையும் கரங்களாக உடையவனும் வெற்றிமகள், செல்வம், புகழ், கல்வி முதலானவற்றிற்குத் தலைவனானவனுமான அம்மன்னன் இந் நிலத்தைக் காக்கும்போது அழகிய பெண்களின் கண்களில் கொடுங்கூர்மையும், புருவங்களில் வளைவும், கூந்தலில் கருமையும் இரு கொங்கைகளில் நெருக்கத்தால் மோதலும் உண்டாயின. (மக்களிடையே கொடுங்கூர்மை, வளைவு, கருமை, மோதல் இவை இல்லை என்பது கருத்து.)*

தஸ்யாபூத் தேவ்யௌ கற்றளிவரகுணஸமாஹ்வயே ஸத்யௌ
கற்றளிரபவத் ஜனனீ பராந்தகாதித்யவர்ம்மணோ கம்ரகம்ராணம்..
8

*அவனுக்குப் பதிவ்ரதைகளான கற்றளி, வரகுணை என்பவர் தேவிகளாக இருந்தனர். அவர்களில் கற்றளி பராந்தகன் ஆதித்யன் என்னும் அழகிய புதல்வர்களுக்குத் தாயானாள்.*

ஆத்ரேயகோத்ரஜ: ஸ்ரீமான் மாதுரோ(ந)கேந்த்ர(வேத) பாரக:

வித்யாராசே: தபோராசேஸ் சிஷ்யோ ச்ரஹ்ரு(பூ)ன்
மல்லிகார்ஜ்ஜுன:.

*ஆத்ரேய கோத்ரத்தில் பிறந்தவரும் மதுரைை சேர்ந்தவரும் வேதத்தின் கரையைக் கண்டவரும் கல் நிதியும் தவத்தின் நிதியுமானவரின் சிஷ்யருமா மல்லிகார்ஜுனர் இருந்தார்.*

(ஸ்தாநா(நாம்*))த்ரயம் உத்தாப்ய ப்ரதிஷ்டாப்ய மஹேச்வரம்
ஸ்வநாம்னா ப்ரியயோர் நாம்னா ஸோதாத் (தேவோ*)
ப்ருஹன்மடம்.

*அந்த அரசன் தன் பெயராலும் தன் மனைவிι பெயராலும் மூன்று கோவில்களை எழுட மஹேச்வரனைப் ப்ரதிஷ்டை செய்து பெரிய மடத்ι அவருக்கு அளித்தான்.*

தஸ்மை காலமுகாக்யான-யதிமுக்யாய யாதவ:.
ப்ராதாதேகாதச-க்ராம-விநிபந்தம் ப்ருஹன்மடம் 11

*காளாமுகர் என்று அறியப்பட்ட அந்தத் துறவிகளில் சிறந்தவருக்கு யாதவனான அரசன் பதினோரு சிற்றூர்களை உள்ளடக்கிய பெரிய மடத்தை அளித்தான்.*

*ஐம்பது தபோதனர்களுக்கு உணவளிக்கவும் சிவபெருமானுக்கு நைவேத்யம், வாசனை திரவியம், புஷ்பம், அக்ஷதை, தூபம், தீபம், தாம்பூலம் முதலியவை வழங்கவும் குருவுக்கு அவ்வரசன் பெரிய மடத்தை அளித்தான்.*

**சாசன அரசர்கள்**

*கொடும்பாளூர்ச் சாசனத்தால் அறியப் பெறும் அரசர்களை வரிசைப்படுத்துவோம்.*




**கால ஆராய்ச்சி**

கொடும்பாளூர்க் கல்வெட்டை வெட்டிய பூதி விக்கிரமகேசரி எந்தக் காலத்தைச் சேர்ந்தவன் என்பதில் கருத்து வேறுபாடுகள் பல காணப்படுகின்றன.

திருவாளர்கள் வெங்கய்யா, ஹீராசு பாதிரியார், டாக்டர் ஆரோக்கிய சாமி, டாக்டர் மா. இராச மாணிக்கனார், மயிலை சீனி. வேங்கடசாமி, எட்வர்டு, நீலகண்ட சாத்திரியார், எஸ்.ஆர். பாலசுப்பிரமணியம், கே.வி. சுப்பிரமணிய ஐயர், டாக்டர் மீனாட்சி, எம்.எஸ். கோவிந்த சாமி முதலான அறிஞர் பலர் ஆராய்ந்துள்ளனர்.

கொடும்பாளூர்க் கல்வெட்டை வெட்டிய பூதிவிக்கிரம கேசரி, 9ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவன். 7ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவன் என்ற இரண்டு விதங்களில் இவர்களுடைய கருத்துக்களை அடக்கி

விடலாம் - இடையில் கேள்விகள் மற்றும் ஐயங்கள் பல எதிர்ப்படுகின்றன.

**ஹீராசு பாதிரியார்**

கொடும்பாளூர் மூவர் கோயில் கல்வெட்டை வரைந்த பூதிவிக்கிரம கேசரியை ஏழாம் நூற்றாண்டின் இடைப் பகுதியினன் என்று ஹீராசு கூறுகிறார். அவ்வாறு கருதற்குச் சில காரணங்களைக் காட்டுகிறார்.

**கருத்து 1** : சமராபிராமன் 'அதிராஜமங்கலத்தில்' சாளுக்கியனை வென்றான் என்று கொடும்பாளூர்க் கல்வெட்டுக் கூறுகிறது.

பூதிவிக்கிரமகேசரியைப் பத்தாம் நூற்றாண்டின் தொடக்கத்தவராகக் கொண்டால் சமராபிராமன் ஒன்பதாம் நூற்றாண்டினன் ஆகிறான். ஒன்பதாம் நூற்றாண்டில் சாளுக்கியர் வலிமைகுன்றி இருந்தனர். இராட்டிரகூடரே வலிமையுடன் விளங்கினர். இந்த நிலையில் சாளுக்கியரை அவன் வெற்றி பெற்றிருக்க இயலாது.

முதல் நரசிம்மவர்மன் (630-668) சாளுக்கிய வேந்தன் புலிகேசியை முறியடித்தான். வாதாபி நகரையும் கைப்பற்றினான். கூரம்பட்டயமும், உதயசத்திரமங்கல பட்டயங்களும் இப்போர் சூரமாரம் பரியலம், மணி மங்கலம் என்னும் இடங்களில் நிகழ்ந்ததாகக் குறிப்பிடு கின்றன. சமராபிராமன் பெற்ற இச் சாளுக்கிய வெற்றி நரசிம்மவர்மன் காலத்தில் - அவனுக்கடங்கிய சிற்றரசனாகச் சாளுக்கிய புலிகேசியை வென்றமையாகும். அதிராஜராஜ மங்கலம் முதல் பரமேசுவரவர்மனின் கூரம்பட்டயம் குறிப்பிடும் மணிமங்கலம் என்று கருதுவர். சமராபிராமன் இளவரசு நிலையில் பெற்ற வெற்றியாகக் கொள்வர் இவர்.

**கருத்தை ஒட்டிய சிந்தனை**

1. சாளுக்கியர் பத்தாம் நூற்றாண்டில் வலிமைகுன்றித் தான் நிலவினர். பூண்டோடு அழியவில்லை.

2. முதல் நரசிம்மவர்மனுடன் சேர்ந்துகொண்டு தன் தந்தை சமராபிராமன் புலிகேசியை வென்றிருந்தால் 'பூதிவிக்கிரமகேசரி', "என் தந்தையால் சாளுக்கிய அரசன் புலிகேசி வெல்லப்பட்டான்" என்று இந்தப் பெரிய வெற்றியை வெளிப்படையாகக் குறித்திருப்பான். பொதுவாக இவ்வாறு குறித்திரான்.

3. 'அதிராஜமங்கலத்தை மணிமங்கலம்' என்கிறார் திரு. ஈராசு பாதிரியார்.

'மணிமங்கலம்' எது என்று நோக்குவோம்.

காஞ்சிபுரத்தில் இருந்து வடக்கு நோக்கித் தோற்றோடும் ஒருவன் மணிமங்கலம், சூரமாரம், பரியலம் ஆகிய ஊர்களை முறையே கடக்க வேண்டும்.

"மணிமங்கலம் காஞ்சிக்கருகில் உள்ளவூர்; சித்தூர் மாவட்டம், காளத்தி வட்டம், 'சூரமாலா', 'சூரமாரம்' ஆகலாம்; கடப்பை மாவட்டம் பொரதட்டூரு வட்டம் 'பைதேவா' 'பரியலம்' ஆகலாம்" என்று வரலாற்று அறிஞர்கள் புலப்படுத்தியுள்ளார்கள்.

மணிமங்கலம் காஞ்சிக்கு இருபது கல் தொலைவில் அதே பெயருடையதாய் உள்ள ஊர் என்பது வரலாற்று ஆய்வாளர்களுக்கு ஒப்ப முடிந்த கருத்து. செங்கை மாவட்டம் காஞ்சி வட்டத்தில் வண்டலூரர்ப் புகைவண்டி நிலையத்தின் மேற்கே ஆறுகல் தொலைவில் மணிமங்கலம் அமைந்துள்ளது.

1. 'மணிமங்கலம்' எனவும் வடமொழியில் 'ரத்ன க்ருஹாரா' 'ரத்னக்கிராமா' எனவும் குறிக்கப்படும் இவ்வூர்

லோகமாதேவிச் சதுர்வேதிமங்கலம்

ராஜமாதேவிச் சதுர்வேதிமங்கலம்

பாண்டியனை வெந்கண்ட சோழச் சதுர்வேதிமங்கலம்

கிராம சிகாமணிச் சதுர்வேதிமங்கலம் என்றெல்லாம் பலவாறாக அழைக்கப்பட்டதனைக் கல்வெட்டுக்கள் காட்டுகின்றன. ஆனால் அதிராஜமங்கலம் என்று இவ்வூர் அழைக்கப் பட்டமைக்குச் சான்று ஏதும் இல்லை.

2. திருமுனைப்பாடி நாட்டுத் திருவதிகை நரசிம்மவர்மன் காலத்தில் 'அதிரையமங்கலம்' என்று அழைக்கப்பட்டு வந்த ஊர். நாவுக்கரசரின் திருப்பதியங்கள் இதனைப் புலனாக்கும். கல்வெட்டுகள் அதிராஜமங்கலம் அதிராஜமங்கல்யபுரம் அதியரைய மங்கல்யபுரம் என்றெல்லாம் திருவதிகையைக் குறிப்பிடுகின்றன.

ஆதலினால் 'மணிமங்கலம்' அதிராஜமங்கலமன்று என்பது வெள்ளிடைமலை.

**கருத்து 2 :**

வாதாபிப் போரை அடிப்படையாகக் கொண்டு பூதிவிக்கிரமகேசரியின் முன்னோர் காலத்தை ஹீராசு பாதிரியார் பின்வருமாறு கணித்துள்ளார். அதுபின்வருமாறு:

கி.பி. 630 - பரதுர்க்கமர்த்தனின் ஆட்சியின் தொடர்ச்சி.

கி.பி. 640-42 - பரதுர்க்கமர்த்தனின் இறப்பு; சமராபிராமனின் ஆட்சித் தொடக்கம்.

கி.பி. 665 - 67 - சமராபிராமனின் ஆட்சி இறுதி. பூதிவிக்கிரம கேசரியின் இளவரசு நிலை.

**கருத்தை ஒட்டிய சிந்தனை**

ஹீராசுப் பாதிரியாரின் கருத்துப்படிப், பரதுர்க்க மர்த்தனன் பல்லவ அரசன் மகேந்திரவர்மனின் இறுதிக் காலத்திலும், முதல் நரசிம்மவர்மனின் ஆட்சியின் இடைப்

பகுதி வரையிலும் இருந்தவன் ஆகிறான்; இவனுடைய மகன் சமராபிராமன் நரசிம்மவர்மன் காலத்தவனாகிறான்; பூதிவிக்கிரமகேசரி நரசிம்மவர்ம பல்லவன் காலத்துக்குப் பிற்பட்டவன் ஆகிறான்.

கொடும்பாளூர்க் கல்வெட்டுப் பரதுர்க்கமர்த்தனனையும், சமராபிராமனையும் 'வாதாபி' வென்றவன்; சாளுக்கியனை வென்றவன் என்று குறிப்பிடுகிறது. இந்த வாதபிச் - சளுக்கி வெற்றிகளை நரசிம்மவர்மனின் வாதாபிப் படை எடுப்பில் கலந்துகொண்டு பெற்ற வெற்றியாக ஹீராசு கருதினார். இந்தக்கருத்தின் அடிப்படையில் பரதுர்க்கமர்த்தனனின் வயது முதிர்ந்த நிலையிலும், சமராபிராமனின் இளமைப்பருவத்திலும் இவ்வெற்றி செயல்கள் நிகழ்ந்ததாகக் கருதி இக்காலத்தை ஹீராசு பாதிரியார் கணித்துள்ளார்.

நரசிம்மவர்மன் காலத்திய வாதாபிப் போரில் சமராபிராமனும், பரதுர்க்கமர்த்தனனும் கலந்து கொண்டிருக்கவியலாது என்பது விளக்கப்பட்டுள்ளது.

**கருத்து 3 :**

ஹீராசு பாதிரியார் கொடும்பாளூர்க் கோவிலைக் கட்டிய கல்வெட்டை அமைத்த 'பூதிவிக்கிரம கேசரி' என்ற கொடும்பாளூர் வேளிர்குல அரசன் கி.பி. ஏழாம் நூற்றாண்டின் இடைப்பகுதியினன் என்பர்.

பூதிவிக்கிரம கேசரி பல்லவருடனும் பாண்டியனுடனும் போரிட்டு வென்றான். பன்னிரண்டு ஆழ்வார்களுள் ஒருவராகிய திருமங்கையாழ்வார் 'கோச்செங்கணான்' என்னும் சோழ அரசனைப் பாராட்டியுள்ளார். சோழன் கோச்செங்கணான் தென்னகத்துக்கும் வடநாட்டிற்கும் தலைவன்; தென்னாட்டு வேந்தர்களையும் குடகு, கொங்கு அரசர்களையும் புறங்கண்டு அழித்தவன் என்று திருமங்கையாழ்வார் குறிப்பிட்டுள்ளார். இக்கோச்

செங்கணான் ஏழாம் நூற்றாண்டின் இடைப் பகுதியைச் சேர்ந்தவன். கோச்செங்கணானின் காலத்தில் தான் சோழப் பேரரசு எழுச்சி பெற்றது. மணவினைத் தொடர்பு முதலிய வற்றால் கோச்செங்கணானுக்கு அடங்கிய சிற்றரசனாக இருந்தே பல்லவரையும் பாண்டியரையும் வஞ்சி வேளிரையும் வென்றான் என்று ஹீராசு பாதிரியார் கூறுவர்.

**கருத்தை ஒட்டிய சிந்தனைகள்**

'கோச்செங்கணானின் காலம் ஏழாம் நூற்றாண்டின் இடைப்பகுதி. பூதிவிக்கிரம கேசரி இச்சோழனின் காலத்தவன் என்கிறார்' அறிஞர் ஹீராசு. சோழன் கோச்செங்கணானின் காலம் பற்றியே சில ஐயங்கள் எழுகின்றன.

1) சோழன் கோச்செங்கணானின் காலம் எது? என்பது முடிவடையாத பிரச்சனை. வினாக்குறி.

திரு. சதாசிவ பண்டாரத்தாரும், திரு. கே.என். நீலகண்ட சாஸ்த்திரியாரும் கோச்செங்கணான் சங்க காலத்தில் வாழ்ந்தவன் என்று சான்றுகள் தந்து நிறுவுகிறார்கள்.

டாக்டர் மா. ராசமாணிக்கனார் கோச்செங்கணான் ஐந்தாம் நூற்றாண்டினன் என்று ஆராய்ந்துரைக்கிறார்.

2) கோச்செங்கணான் ஏழாம் நூற்றாண்டைச் சேர்ந்தவன் என்றால் அந்நூற்றாண்டுக்கு உரிய பல்லவ பாண்டிய அரசர்களின் கல்வெட்டுக்கள் கிடைப்பதைப் போல இவ்வேந்தனின் கல்வெட்டுக்கள் ஒன்றுகூடக் கிடைக்கவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

3) கோச்செங்கணானின் காலத்தை நிறுவ இன்னும் அதிகம் ஆதாரங்கள் வேண்டும். கோச்செங்கணானின் காலத்தில்தான் பூதிவிக்கிரம கேசரி வாழ்ந்தான் என்று எப்படிச் சொல்ல முடியும்? கோச்செங்கணானின் காலத்தை

அடிப்படையாகக் கொண்டு பூதிவிக்கிரமகேசரியின் காலத்தை நிர்ணயிப்பது அஸ்திவாரமில்லாத கருத்துக்களின் மீது அமைக்கப்பட்ட கட்டடமாகத்தான் அமையும்.

Fr. Heara's view that Bhuti Vikramakesari was a contemporary of Kochenganan is based on slippery ground for the date of is still debated எனத் திரு. எம்.எஸ். கோவிந்தசாமி அவர்கள் கூறுவது ஈண்டு நினைவில் நிறுத்தத்தக்கதாகும்.

**கருத்து 4 :**

கொடும்பாளூர் மரபினரின் காலத்தைக் கணிக்கும் போது கட்டடக்கலை நுட்பம் பற்றிய கடுமையான மறுப்பு எழுகிறது. பூதிவிக்கிரமகேசரி கட்டிய மூவர் கோவில் மிகப் பிற்காலத்ததாகத் தென்படுகிறது; கோவிலின் அமைப்பு; சிற்பநுட்பங்கள் கட்டட அமைப்பு முறைகள் பல்லவர் காலத்தைவிடச் சோழர் காலத்துக்கும், ஏழாம் நூற்றாண்டை விட ஒன்பதாம் நூற்றாண்டுக்கும் உரியனவாக உள்ளன. உண்மையில் நோக்குங்கால் கொடும்பாளூர்க் கோவில்களைத் தொல்லியல் புதிர் என்றோ தொல்லியல் இயல் நிகழ்ச்சி என்றோ குறிப்பிட லாம். (Archaeological puzzle of Archeaological Phenomenon)

விமானம் பத்தாம் நூற்றாண்டுக்குரியதாயின் சதுர வடிவமான குடை போன்ற விமானத்தின் உச்சியில் உள்ள தூபிமாடம் முன்னேற்றமுள்ளதாக இருக்கும்; கொடும் பாளூர்க் கோவிலமைப்பு முன்னோடி இல்லாதது; விளைவுகளும் இல்லாதது. தென்னிந்தியக் கட்டடக்கலை யமைப்பிலேயே தனிமைப்படுத்தப்பட்டது. கொடும்பாளூர் கலையமைப்புப் பின்பற்றப்பட்டிருப்பின் விளைவுகள் தோன்றியிருக்கும். பூதிவிக்கிரம கேசரியோ அவனுடைய சிற்பியோ அல்லது இருவருமோ கொண்டிருந்த அதிக அளவு கலையறிவு மேம்பாட்டால் இது விளைந்தது. தனிமைப்படுத்தப் பெற்ற, பின்பற்றுவாரில்லாத பாணியாக இதனைக் கூறலாம்.

**கருத்தை ஒட்டிய சிந்தனை**

சோழர் கலைப்பாணி வல்லுநரான திரு. எஸ்.ஆர். பாலசுப்பிரமணியம் அவர்களும் கே. வெங்கடரங்கராசு அவர்களும் இக்கருத்துக்களை மறுத்துள்ளனர். மூவர் கோவில் விமானம் பற்றிய ஹிராசு பாதிரியாரின் கருத்துப் பொருத்தமன்று; கொடும்பாளூர் கோயில் விமானம் அறிவு மேம்பட்ட கலைவல்லுநரின் தனிமைப்படுத்தப்பட்ட, தனித்தன்மை வாய்ந்த ஒன்றாயினும் முன்மாதிரிகளையும் உடையது. (8ஆம் நூற்றாண்டிலோ அதை ஒட்டியோ அமைந்த) காளியாப்பட்டி, கொடும்பாளூர், ஏனாதி, திரு கட்டளை, திருப்பூர், விசலூரிலும் பட்டடக்கல் சங்கமேஸ் வரர் கோவிலிலும் உள்ள சிகரங்களால் இதனை அறியலாம்.

**பாதிரியார் பகராத கருத்து**

பூதிவிக்கிரமகேசரி 'வீரபாண்டியன்' என்னும் பாண்டிய அரசனை வென்றதாகக் கொடும்பாளூர்க் கல்வெட்டுக் கூறும். 'வீரபாண்டியன்' யார் என்று ஹீராசு குறிப்பிடவில்லை என்பது உணரவேண்டிய தொன்றாகும்.

**டாக்டர் ஆரோக்கியசாமி அவர்கள்**

திருமிகு. டாக்டர் ஆரோக்கியசாமி அவர்கள் தாம் எழுதிய Early History of the Vear Basin என்னும் தமது நூலில் இவ்வேளிரின் காலத்தைக் கணித்துள்ளார். அதுவருமாறு:

| | |
|---|---|
| பெயரில்லாத முதல் அரசன் - | 435 - 465 |
| பரவீரஜித் - | 465 - 495 |
| வீரதுங்கன்- | 495-525 |
| அதிவீரன் - | 525 - 555 |
| அநுபமா - (சங்ககிருத்) | 555 - 585 |
| நிருபகேசரி - | 585 - 615 |

பரதுர்க்கமர்த்தனன் - 615 - 645

சமராபிராமன் - 645 - 675

பூதிவிக்கிரமகேசரி - 675 - 705

பராந்தகவர்மன் - 705 - 735

ஆதித்யவர்மன் - 735 - 765

விக்கிரமகேசரியின் கொடும்பாளூர்ச் சாசனம் பற்றிய இவருடைய கருத்து ஹீராசு பாதிரியாருடன் ஒப்புமை உடையதாகிறது. அவர் குறிக்கத்தவறிய கருத்தைப் புலப் படுத்துகிறார். பூதிவிக்கிரமகேசரியுடன் போரிட்டுத் தோற்ற வீரபாண்டியன் அரிகேசரிவர்மன் (கி.பி. 670-710) என்று சுட்டுகிறார்.

**கருத்தை ஒட்டிய சிந்தனை**

ஹீராசு பாதிரியாரின் கருத்துத் தளத்திலேயே இவர் கருத்தும் காலமும் அமைந்துள்ளமையின் அதே ஐயங்களால் இக்கருத்துக்கள் ஏற்றுக்கொள்ளவியலாததாகின்றன. பாண்டியன் அரிகேசரிவர்மன் வீரபாண்டியன் என்று அழைக்கப் பட்டமைக்குச் சான்று எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை.

**திரு. மயிலை சீனி வேங்கடசாமி**

(நரசிம்மவர்மன், பக்கம் 183-200)

திரு. மயிலை சீனி வேங்கடசாமி அவர்கள் 'நரசிம்ம வர்மன்' பற்றி விரிவாக எழுதிய அரிய நூலில் பின்னிணைப் பில் கொடும்பாளூர்ச் சாசனம் பற்றிப் புதிய கருத்துக்கள் சிலவற்றைப் புலப்படுத்தியுள்ளார்.

**கருத்து 1**

பூதிவிக்கிரமகேசரியின் முன்னோன் 'நிருபகேசரி' பாம்புகளோடு வளர்ந்தான் என்று கொடும்பாளூர்ச்

சாசனம் கூறுகிறது. ஒருவன் பாம்புகளோடு வளர முடியுமா? பாம்பு என்றாலும் நாகம் என்றாலும் பொருள் ஒன்றேயாகும். தென்னிந்தியாவில் நாகர் என்னும் இனத்தவர் இருந்தார்கள். அவர்களுக்குப் பாம்பு அல்லது நாகம் அடையாளச் சின்னம். பல்லவ அரசரில் ஒருவன் நாக அரசியையே மணம் செய்துகொண்டு அரசு உரிமை பெற்றான். 'வீரகூர்ச்சவர்மன்' என்னும் பல்லவ அரசன் நாகர் மகளை மணந்து அரசுரிமை பெற்றான் என்று வேலூர்ப்பாளையப் பட்டயம் கூறுகிறது. நாகர் சம்பந்தம் உள்ளதால் 'நாகர்' என்ற பெயர் பல்லவருக்கும் உண்டு என்றும் தெரிகிறது.

தேம்பொழில் குன்றுஎயில் தென்னவனைத்
திசைப்பச் செருமேல் வியந்து அன்றுசெய்த
பாம்புடைப் பல்லவர்கோன் பணிந்த
பரமேச்சுர விண்ணகரம் இதுவே

என்னும் திருமங்கை ஆழ்வார் வாக்கால் பல்லவர்க்குப் பாம்புக் கொடி உண்டென்று தெரிகிறது.

பல்லவராச்சியத்துக்கு அருகில் கொடும்பாளூர் வேளிர் இருந்தனர். நட்பின் காரணமாகச் சங்ககிருத் நிருபகேசரி யைப் பல்லவரிடம் வளரவிட்டமையையே சாசனம் பாம்பு களோடு வளர்ந்தான் என்று குறிப்பிடுகிறது. பல்லவ னோடு பகைமை கொண்டவனாக இருந்தவன் பூதிவிக்கிரம கேசரி. அந்த பகைமை காரணமாக நிருபகேசரி பல்லவரோடு வளர்ந்தான் என்று சொல்லாமல் பாம்புகளோடு வளர்ந் தான் என்று அவன் குறிப்பிட்டவனாதல் வேண்டும் என்பர்.

**கருத்தை ஒட்டிய சிந்தனைகள்**

பாம்புகளுடன் வளர்ந்தான் என்பதற்கு நாக மரபினருடன் வளர்ந்தான் என்று பொருள் கொள்கிறார் சீனி. வெங்கடசாமி. பல்லவர் பாம்புக்கொடியுடையவர் என்கிறார். தென்னகத்தில் பல்லவர் மட்டுமன்று; இன்னும் பல நாகர் மரபுகளும் உண்டு.

1. கங்கர்கள் நாகமரபினைச் சேர்ந்தவர்கள். நாகமரபுப் பெண்களையே மணம் செய்து கொண்டவர்கள். நாகத்தையே கொடியாகவும் கொண்டவர்கள்.

2. சூட்டு நாகரும், சாளுக்கியரும் கதம்பரும் நாகமரபுக்கு உரிய அரசர்களேயாவர். ஆனால் சூட்டு நாகர் முதல் நந்திவர்மன் காலம் முதல் வரலாற்றில் இருந்து மறைந்து விட்டனர்.

'முதலாம் நந்திவர்மன் சிவபெருமான் அருளால் வன்மைமிக்க நாக அரசனை நடனம் செய்வித்தான்' என்று வேலூர்ப்பாளையப்பட்டயம் கூறுகிறது. இதனால் நாகமரபினன் ஒருவனுக்கும் பல்லவனுக்கும் இருந்த பகைமை உணர்வு புலனாகும்.

'பல்லவனோடு வளர்ந்தான்' என்று சாசனம் கூற வில்லை. பாம்புக்கொடியை உடையவனோடு வளர்ந்தான் என்றும் சாசனம் வெளிப்படையாகக் கூறவில்லை.

பல்லவர் சாசனங்களின் மூலமாகவோ கொடும்பாளூர்க் கல்வெட்டுக்களின் மூலமாகவோ நரசிம்ம வர்மன் காலத்துக்கு முன்பு பல்லவரோடு கொடும்பை வேளிருக்கு நெருக்கம் இருந்தமை புலனாகவில்லை.

'பாம்புக் கொடியை உடையவனோடுதான் வளர்ந் தான்' என்றால் அந்த நாக அரசன் யார்? 'பல்லவன்தான்' என்பதற்கு என்ன சான்று? நாகமரபுக்குரிய பிற வம்சத்த வரோடு ஏன் வளர்ந்திருக்கக் கூடாது. எனவே பல்லவ அரசனோடு வளர்ந்தான் என உறுதியாகக் கூறவியலாது.

பல்லவன் என்று பெயர் குறிக்காமைக்குப் பூதிவிக்கிரம கேசரி பல்லவரிடம் கொண்டிருந்த பகைமையே காரணம் என்பர். பூதிவிக்கிரமகேசரி பகைமை கொண்டிருந்தான்; பல்லவர் வழிவழிப் பகைவர்; பல்லவர்க்கெதிரான நாக வம்சத்தவருடன் நிருபகேசரி வளர்ந்தான் என்று ஏன் கூறலாகாது என்பது சிந்தனைக்குரியது.

**கருத்து 2**

'சாளுக்கிய மன்னன் புலிகேசியை மூன்று வேந்தர்கள் ஒன்று கூடித் தோற் கடித்தனர்' என்று கர்நூல் சாசனம் கூறுகிறது. அம்மூவர் யார் முதலாமவன் பல்லவ வேந்தன் நரசிம்மவர்மன்; இரண்டாமவன் இலங்கை மன்னன் மானவன்மன்; மூன்றாவது வேந்தன் கொடும்பாளூர்ப் பரதுர்க்கமர்த் தனனும் சமராபிராமனும் ஆவர். (இருவரும் ஒரே வம்சத்தவர் ஆதலின் ஒருவராகக் கொள்க) என்று கூறியுள்ளார்.

**கருத்தை ஒட்டிய சிந்தனை**

நரசிம்மவர்மனுக்கும், இரண்டாம் புலகேசிக்கும் நடந்த போரினைக் கர்நூல் செப்புப் பட்டயம் விவரிக்கிறது. முதலாம் விக்கிரமாதித்தனால் வெளியிடப்பட்ட கர்நூல் பட்டயம் சாளுக்கியப் புலகேசி மூன்று அரசர்களால் வெல்லப்பட்டான் என்று கூறுகிறது. "என் தந்தையை நரசிம்மவர்ம பல்லவன் மட்டும் தனித்துப் போரிட்டு வெல்லவில்லை; மூன்று அரசர்களாகப் போரிட்டு வென்றார்கள்" என்று புலிகேசியின் வீரத்ைத உயர்த்திக் காட்ட முயல்கிறான் விக்கிரமாதித்தன்.

**மூன்று வேந்தர்கள் யார்?**

முதலாமவன் நரசிம்மவர்ம பல்லவன். இரண்டாவது அரசன் இலங்கை வேந்தன் மானவன்மன்.

மூன்றாமவன் யார்? என்பது பிரச்சனைக்குரிய விஷயம்.

மயிலை சீனி வேங்கடசாமி அவர்கள் முதல் நரசிம்ம வர்மன் என்னும் நூலில், மூன்றாவது அரசன் கொடும் பாளூர் அரசன் (அரசர்) கொடும்பாளூர் மன்னன் பரதுர்க்கமர்த்தனனும் அவன் மகன் சமராபிராமனும் ஆவர் என்பர். (பக்க எண். 22)

இவ்வாறு நரசிம்மவர்மன், மானவன்மன், கொடும்பாளூர்ச் சிற்றரசன் (தந்தை மகன் இருவரும்) ஆகிய மூன்று அரசர்களும் சேர்ந்து புலகேசியை வென்றனர் (பக்க எண். 6) என்று எழுதியுள்ளார். விரல்விட்டு எண்ணினால் நான்கு பேர் ஆதலைக் கண்டு இனத்தின் பேரால், சமராபிராமனையும் பரதுர்க்கமர்த்தனனையும் ஒருவராக்கு கிறார். 'ஒரே இனத்தவர் என்பதனால் இருவரையும் ஒருவராகக் கொள்க' என அமைதி கூறுகிறார்.

கர்நூல் சாசனம் மூன்று இன அரசர்களால் வெல்லப்பட்டதாகக் கூறவில்லை; மூன்று அரசர்களால் வெல்லப்பட்டதாகவே கூறுகிறது. ஓரினத்தார் என்பதனால் இருவரை ஒருவராக்குதல் யாண்டுமில்லை.

டாக்டர் மா. இராஜமாணிக்கனார் மூன்றாவது அரச னாகப் பீமவர்மன் மரபினைச் சேர்ந்த ஓராசனைக் கூறு கிறார். மூன்றாம் சிம்மவர்மனின் மகன் 'சிம்மவிஷ்ணுப் பல் லவன்'. இவனுடன் பிறந்தவன் பீமவர்மன். இந்தப் பீமவர்ம பல்லவன் வழிவந்தவனே புலகேசியோடு போரிட்ட மூன் றாவது அரசனாக இருக்கலாம் என்கிறார் டாக்டர் மா.ரா.

பீமவர்மனின் மரபினராகப் புத்தவர்மன். ஆதித்யவர்மன், கோவிந்தவர்மன், இரண்யவர்மன் முதலிய அரசர்கள் அறியப்படுகிறார்கள். இவர்கள் காஞ்சிப் பல்லவர்களுக்கு இயலும்போதெல்லாம் படை கொடுத்து உதவி - நட்புக் கொண்டு உறுதுணையாக இலங்கியவராதல் உறுதி. பல்லவப் பேரரசர்க்கும் பீமவர்மன்' மரபினர்க்கும் இருந்த தொடர்புக்குச் சான்றுகள் பல உள்ளன.

1. பீமவர்மன் மரபினர் காஞ்சிப் பல்லவர்க்கு உறுதுணையாகப் பல்லவரின் மாகாணத் தலைவராகத் தெலுங்கப் பகுதியை ஆட்சி செய்தவர்கள்.

2. அ) பீமவர்மன் சிம்மவிண்ணப் பல்லவனின் தம்பி; ஆகையினால் உறவு நெருக்கம் உடையவன் ஆகிறான்.

ஆ) சிம்மவிஷ்ணு மரபினரும் ஆந்திரப் பகுதியில் இளவரசு நிலையில் இருந்திருக்கின்றனர்.

இ) சிம்மவிஷ்ணுவுக்குப் பின்னால் புத்தவர்மன் என்னும் பீமவர்மன் மரபினன் அரசன் ஆனான் என்ற காசாக் குடிப்பட்டயப் பகுதியும் நோக்கத்தக்கது.

3. இருமரபினரின் உறவு நெருக்கத்தையும் வைகுந்தப் பெருமாள் கோயில் சிற்பங்களும், கல்வெட்டும் தெளிவாகக் காட்டுகின்றன. பல்லவமல்லன் என்பவன் பீமவர்மன் மரபினன். இரண்யவர்மனின் மகனாகிய இவனே இரண்டாம் நந்திவர்மன்.

பல்லவப் பேரரசு அரசன் இல்லாமல் அல்லல் உற்றது. கடிகையாரும் மூலப் பிரகிருதியாகும். அமைச்சரும் இரண்யவர்மனைச் சென்று கண்டனர். தமது நாட்டுக்கு வேந்தன் வேண்டும் என வேண்டினர். இரண்யவர்மன் 'ஸ்ரீமல்லன், இரணமல்லன், சங்கிராம மல்லன், பல்லவ மல்லன் என்னும் நால்வர் மக்களை நோக்கி, 'யார் காஞ்சிக்கு வேந்தனாகப் போகின்றீர்?' என்று கேட்டான். முதல் மூவரும் விரும்பவில்லை. இளையவனாகிய பல்லவ மல்லன் நான் போவேன் என்று தொழுதான். பல்லவ மல்லனோடு தந்தையும் பிறரும் காஞ்சிக்கு வந்தனர். தரணி கொண்ட போசரும், காடகமுத்தரையரும், நகரத்தாரும் வரவேற்றனர். பல்லவமல்லனுக்கு அபிடேகம் செய் வித்தனர். 'நந்திவர்மன்' என்னும் அபிடேகப் பெயரை அளித்து அரசன் ஆக்கினர் என்ற செய்திகளைக் காஞ்சிபுரம் வைகுந்தப் பெருமாள் கோவிலில் உள்ள சிற்பமும், சிற்பக் கல்வெட்டுகளும் நிறுவுகின்றன.

பல்லவ நாடு இன்னல் உற்றபோது இரண்யவர்மனை உதவி வேண்டினர்; இரண்யவர்மனின் மகனை, அமைச்சர்களும், காடகமுத்தரையரும், நகரத்தாரும் இன்புடன் வரவேற்றுத் தங்கள் அரசனாக ஏற்றுக் கொண்டனர் என்னும் குறிப்புப், பீமவர்மன் மரபினரொடு

காஞ்சிப் பல்லவர்க்கு இருந்த உறவுப் பிணைப்பையும், பல்லவநாடு அல்லலுற்றபோது உதவி வந்த பாண்மையாளர் - உதவி புரிவர் என்று காஞ்சி அரசியல் ஆயத்தாரால் கருதும் உரிமையும் மரபும் உடையவர் என்பதனைப் புலப் படுத்துகிறதல்லவா?

பல்லவனோடு பேரளவு தொடர்புடையவன் பீமவர்மன் மரபினர்; புலிகேசி படை எடுத்தபோது பீமவர்மன் மரபினரே படையுடன் வந்து உதவி இருத்தல் வேண்டும் என்னும் டாக்டர் மா.ரா. கருத்தே வலிமையுடையது. இவ்வளவு நெருக்கம் முதலியன இல்லாத கொடும்பாளூர்ச் சிற்றரசராகிய சமராபிராமனும் பரதுர்க்கமர்த்தனனும் இப்போரில் கலந்து கொண்டிருக்க இயலாது.

கருத்து 3

சமராபிராமன் பல்லவ அரசர் நரசிம்மவர்மன், பர மேசுவரவர்மன், இரண்டாம் மகேந்திரவர்மன் காலத்தவன். இவன் சோழ அரசன் மகள் அநுபமையைத் திருமணம் செய்து கொண்டிருக்கிறான்.

வேளிர்கள் சேர, சோழ, பாண்டியர் என்னும் முடியுடை வேந்தர் மூவருக்கும் பெண்ணை மணம் செய்து கொடுப்பர், மூவேந்தர்கள் வேளிருக்குத் தம் குலமகளிரை மணம் செய்து கொடுக்க மாட்டார்கள். பொருளதிகார உரையில் நச்சினார்க்கினியர் 'முடியுடை வேந்தருக்குப் பெண்கொடை கொடுப்பவர் வேளிர்' என்ற உண்மையைப் புலப்படுத்தியுள்ளார்.

சோழர்கள் பல்லவர்க்கு அடங்கி இருந்தனர். கொடும்பாளூர் வேளிர் சுதந்தரராகப் பல்லவ பாண்டியர்க்கு அடங்காமல் வாழ்ந்தனர். பல்லவர்க்கு நண்பராக இருந்தனர். எனவேதான் நேரெதிரிடையாகப் பல்லவனின் கீழடங்கிய சிற்றரசனாக இருந்த சோழன் தன்

மகளைச் சமராபிராமனுக்கு மணம் செய்வித்தால் போலும்' என்பார் மயிலை சீனி வேங்கடசாமி அவர்கள்.

**கருத்தை ஒட்டிய சிந்தனை**

மூவேந்தர் பெண்கோடற்கு உரியவர் வேளிர் என்பது உண்மையே. ஆயினும் வேளிர் மூவேந்தரின் குலப் பெண்டிரைக் கோடலாகாது என்பதற்கு இலக்கண இலக்கியக் குறிப்புக்கள் எங்கும் இல்லை.

தமிழக அரசியலில் மணவினையினால் விளைந்த விளைவுகள் மிகப்பல. கீழைச் சாளுக்கியருக்கும் சோழருக்கும் இருந்த மணவினைத் தொடர்பு, பல்லவ - ராஷ்ட்டிரகூடர் மணவினைத் தொடர்பு, சோழர் ஹொய்சளர் மணவினைத் தொடர்பு ஆகியவற்றால் அவ்வக்குலத்தினர் பெற்ற அரசியல் ஆதாயங்கள் பல. ஆதாய நோக்குடன் திருமணத் தொடர்புகள் அமைந்தமையினால் சோழன் கொடும்பாளூர்ச் சிற்றரசனுக்குப் பெண் கொடுத்தான். கொடும்பாளூர் வேளிருக்குப் பெண் கொடுத்த ஒரே காரணத்தால் சோழன் சிற்றரசு நிலையில் இருந்தான் என்று எவ்வாறு சொல்ல முடியும். அநுபமா எந்தச் சோழனின் மகள்?

கொடும்பாளூர் வேள் சமராபிராமன் சோழர்களுக்குப் பெரிதும் உதவினான். கொடும்பாளூர் வேளிர்தம் குல உயர்வுக்காகப் பாடுபட்டமைக்குப் பரிசாக - பாராட்டாக இனியும் உதவிபுரியும் நெருக்கத்தை ஏற்படுத்திக் கொள்ளப் பெண் கொடுத்தவன் ஆதல் உறுதி - 'அநுபமா' முதல் பராந்தகனின் மகள் ஆதல் கூடும்.

**திரு. எஸ்.எம். எட்வர்டு**

திரு. எஸ்.எம். எட்வர்டு அவர்கள் சிறிதளவு மாறுபட்ட ஒரு கருத்தினைக் கூறுகிறார். கொடும்பாளூர்ச் சாசனம் விக்கிரம கேசரியின் குருவினைப் பற்றியும் குறிப்பிடுகிறது. பெருமைக்குரிய மல்லிகார்ச்சுனர் ஆத்திரேய

கோத்திரத்தினர்; மதுரையைச் சேர்ந்தவர்; வித்யராசி (Vidyarasi)யின் மாணவர் என்று கொடும்பாளூர்க் கல்வெட்டுக் கூறுகிறது. திரு. எஸ்.எம். எட்வர்டு தகடூர்க் கல்வெட்டு ஒன்றில் 'வித்யாராசி' என்னும் இதே பெயரால் சைவக் குருமகனார் குறிப்பிடப்படுவதனைச் சுட்டிக் காட்டுகிறார். இத்தகடூர்ச் சாசனம் கி.பி. எட்டாம் நூற்றாண்டுக்குப் பிற்பட்டதல்ல எனவே பூதிவிக்கிரம கேசரியும் எட்டாம் நூற்றாண்டை ஒட்டியவன் ஆதல் உறுதி எனப் புலப்படுத்தியுள்ளார்.

**கருத்தை ஒட்டிய சிந்தனை :**

'தகடூர்க் கல்வெட்டு எட்டாம் நூற்றாண்டுக்கு உரியது' - என்பவர் கருத்து மிகவும் ஐயத்திற்கு உரியது ஆகும் கன்னடச் சொற்றொடர்களாகிய பரெடொன் வன்னிபோம் பன்னிபொம் (Boredon Vannipom Pannipom) என்பன போன்றவற்றின் அமைதிகொண்டு - பழங் கன்னடச் சொற்றொடர் ஆட்சிகளைக் கொண்டு மொழியி யல் ஆராய்ச்சியின் அடிப்படையில் காலம் கணிக்கப் பட்டுள்ளது. இவ்வகையில் மட்டும் கல்வெட்டின் காலத்தை முழுமையாகக் கணித்தல் இயலாது.

**திரு. கே.வி. சுப்பிரமணிய ஐயர்**

பூதிவிக்கிரம கேசரி சுமார் 898 - 913 வரை ஆண்ட அரசன். பூதிவிக்கிரமகேசரியின் தாயும், சமராபிராமனின் மனைவியும் ஆகிய அநுபமா சோழஅரசன் குமராங் குசனின் மகள்.

பூதிவிக்கிரமகேசரியின் மகன் பூதிபராந்தகன், பூதிஆதித்தபடாரன் ஆன செம்பியன் இளங்கோவேள் என்பவன் எனக் கூறியுள்ளார் - கி.பி. 800 - 1000 வரை வாழ்ந்த வேளிரை வரிசைப்படுத்தியுள்ளார் திரு. கே.வி.எஸ். அவர்கள்.

**கருத்தை ஒட்டிய சிந்தனை**

*பல்லவன் அபராஜிதனே பூதிவிக்கிரமகேசரியால் வெல்லப்பட்ட பல்லவன் என்று கே.வி.எஸ். ஐயர் கூறுவர். 'பல்லவன்' என்று கொடும்பாளூர்க் கல்வெட்டு இலேசாகப் பெயர் கூறாமல் கூறுவதே பல்லவன் பேரரசனல்ல என்பது காட்டும் உண்மை.*

*அநுபமா - என்றொரு மகள் குமராங்குசனுக்கு இருந்திருக்க இயலாது - அநுபமா முதல் பராந்தகன் மகள்.*

*வீரபாண்டியன் என்று ஓர் அரசன் ஆதித்தன் காலத்தவன் என்கிறார். அப்படி ஒருவன் இன்மையைப் பின்னர் விளக்குவோம்.*

*ஏனைய கே.வி.எஸ். ஐயரின் முடிவுகள் பெயர் ஆராய்ச்சியின் அடிப்படையில் அமைந்தவையே ஆகும்.*

**திரு. வெங்கையா அவர்கள்**

A.R.E. year 1908 part II para 85

*திருமிகு. வெங்கய்யா அவர்கள் கொடும்பாளூர் மூவர் கோவில் சாசனம் பற்றிய தமது கருத்துக்களை 1908ஆம் ஆண்டு வெளியிடப்பட்ட கல்வெட்டு ஆண்டு அறிக்கை யில் இரண்டாம் பாகத்தில் வெளியிட்டு உள்ளனர். 85-92 பத்திகளில் சாசனச் செய்திகளை விவரிக்கிறார்.*

*"விக்கிரமகேசரி வீரபாண்டியனை வென்றவன் எனக் கல்வெட்டுக் கூறுகிறது; இவ்வீரபாண்டியன் ஆதித்ய கரிகாலனால் வெல்லப்பட்ட வீரபாண்டியன் ஆவான். ஆதித்ய கரிகாலன் மதுராந்தக உத்தம சோழனுக்கு முன்பு, 969-70க்கு முன்பு ஆண்டவன். விக்கிரமகேசரி பத்தாம் நூற்றாண்டின் இடைப்பகுதியினன். இவன் தாய் அநுபமை சோழன் மகள் எனவே இவனும் சோழர் தொடர்பால் வீரபாண்டியனை வென்றான். இக்காலக் கணிப்புச் சரியானதாயின் முன்னோரின் வாதாபிப் படை எடுப்பு*

முதல் நரசிம்மவர்மனின் ஏழாம் நூற்றாண்டு வாதாபிப் படை எடுப்புக்குப் பெரிதும் பிற்பட்டது."

"சோழ நாட்டுக் கல்வெட்டுக்கள் விக்கிரமகேசரி மரபினரைக் குறிப்பிடுகின்றன. திருச்சி மாவட்டம் திருப்பாலத்துறை இராகேசரிவர்மன் கல்வெட்டுக்கள் இரண்டும் (258 and 273 of 1903) திருச்செந்துறைப் பரகேசரி வர்மனின் கல்வெட்டு ஒன்றும் (306 of 1903) 'தென்னவன் இளங்கோவேள் ஆன மறவன்பூதியார்' என்பவரைக் குறிப்பிடுகின்றன. (273 of 1903) இவன் மனைவி கற்றளிப் பிராட்டி எனக் குறிப்பிடுகிறது. பூதியும், கற்றளிப் பிராட்டியும் விக்ரமகேசரியும் அவன் மனைவியும் ஆவர். 'வரகுணா' எனப்படும் இவனுடைய மற்றோர் மனைவி குறிக்கப்படும் பரகேசரிவர்மனின் கல்வெட்டால் இவன் செம்பியன் இருக்குவேள் என்னும் பெயர் பெற்றிருந்தமை புலனாகும் (337 of 1904) பூதிவிக்கிரமகேசரி, முதலாம் பராந்தகனின் மதுரை வெற்றிக்குப் பின்னால் மதுராந்தக இருக்குவேளாயினாயின ஆச்சன்விக்கிரமகேசரி என்று அழைக்கப்பட்டோ அழைத்துக்கொண்டோ இருக்கலாம்.

"அந்த நல்லூர் ஆலயம் கட்டிய 'செம்பியன் இருக்கு வேளாயின பூதிபராந்தகன்' (*349, 358, 359* of *1903*) பூதியின் மகன் பராந்தகன் ஆகலாம். நங்கவரம் சிவன் கோயில், மறவஈஸ்வரக் கிருஹம் (*386* of *1903*) அல்லது திருமறவன் ஈஸ்வரம் (*332* of *1903*) எனப்படும். பூதிவிக்கிரமகேசரியின் பெயர்களுள் மறவன்பூதி (*258, 273* of *1903*) என்பதும் ஒன்றாகையினால் இக்கோயிலும் விக்கிரமகேசரியால் கட்டப்பட்டதாகலாம். இது கொடும்பாளூர்ச் சிற்றரசர்கள் மறவர் கால்வழித் தொடர்பு உற்றிருந்தனர் எனக் கருத இடமளிக்கிறது.

**திருமிகு. நீலகண்ட சாஸ்திரியார்**

பூதிவிக்கிரமகேசரியின் காலம் பற்றிய திரு. வெங்கய்யாவின் கருத்தினைத் திருநீலகண்ட சாத்திரியார் வழிமொழிந்து உரைத்துள்ளார்.

"விசயாலய சோழன் காலம் முதல் சோழர்க்கும் கொடும்பாளூர் வேளிர்க்கும் இருந்த நெருங்கிய தொடர்பை நோக்கும் காலத்துப் பூதிவிக்கிரம கேசரி இரண்டாம் பராந்தகனின் காலச் (956-70) சிற்றரசன் என்பது புலனாகிறது.

பூதிவிக்கிரமகேசரி சோழருடன் வீரபாண்டியனை வென்றவன் இரண்டாம் ஆதித்தனின் காலக் கல் வெட்டுக்கள் (287 of 1911; 273 of 1903; E.I. Vol. XX p. 54) சில பூதியின் மனைவியரைக் குறிக்கின்றன.

சமராபிராமனின் அதிராஜமங்கலச் சாளுக்கிய வெற்றிப் பத்தாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் நடந்த இராட்டிர கூடத்தின் சோழ நாட்டுப் படை எடுப்பில் நடந்தது ஆகும்.

மூவர் கோவிலின் கலையமைப்புக் கி.பி. 10ஆம் நூற்றாண்டுக்கு உரியதாகக் காணப்படுகிறது. எனவே பூதிவிக்கிரமகேசரி பத்தாம் நூற்றாண்டின் இடைப் பகுதியினன் என்கிறார்.

**திரு. கிருட்டிணா சாஸ்திரி**

South Indian Inscription Introduction

கிருட்டிணசாத்திரியார் பூதிவிக்கிரமகேசரி இரண்டாம் ஆதித்தனுக்கும் சிறிது முற்பட்டவன் எனக் கருதுகிறார். எழுத்தியலை ஆதாரம் ஆகக் கொள்வர். (South Indian Ins. Vol. III Ins. no. 113)

வெங்கய்யாவின் கருத்தொடு சிறிது முரண்படும் கருத்து இது. கிருட்டிணசாத்திரியார் கருத்துப்படிக்

கண்டராதித்த சோழனின் காலத்தவனான பூதிவிக்கிரம கேசரி மிகக் குறுகிய கால அளவு முற்பட்டவன் ஆகிறான்.

எழுத்தியல் ஆய்வுகளின் அடிப்படையில் இடைப் பட்ட காலம் மிகமிகக் குறுகியதாக இருக்கும்போது கருத்துக்களை அமைப்பது கடினமாகும். திரு. வெங்கய்யா கருத்தே சரியானது எனத் தான் கருதுவதாகத் திரு. நீலகண்ட சாத்திரியார் கூறுவர். (The Colas 187 F.N.)

**டாக்டர் மீனாட்சி**

Administration and Social life under The Pallavas

டாக்டர் மீனாட்சி அவர்கள் பல்லவர்கால அரசியலையும் சமூக வாழ்க்கையையும் பற்றி எழுதியுள்ள ஆங்கில நூலில் இவ்வேளிர் காலம் பற்றிக் குறிப் பிட்டுள்ளார். 'பூதிவிக்கிரமகேசரி'யின் பாட்டன் பரதுர்க்க மர்த்தனன் ஒன்பதாம் நூற்றாண்டினன். பரதுர்க்க மர்த்தனன் மூன்றாம் நந்திவர்மனுக்கு அடங்கிய சிற்றரசன். மூன்றாம் நந்திவர்மனுடன் குருக்கோட்டுப் போரில் கலந்துகொண்டு சாளுக்கியனை வென்றோ - வாதாபிப் படை எடுப்புச் செய்தோ இவன் இப் பெயருற்றான் என்கிறார்.

**டாக்டர் மா. இராசமாணிக்கனார்**

பல்லவர் வரலாறு

டாக்டர் மா. ராசமாணிக்கனார் அவர்கள், "கொடும்பாளூர்க் கல்வெட்டு ஒன்றில் பூதிவிக்கிரமகேசரி என்பவனுக்குப் பாட்டன் 'வாதாபி கொண்டவன்' என்று கூறப்பட்டுள்ளான். கி.பி. 9ஆம் நூற்றாண்டில் இப்படி ஒருவன் இருந்திருத்தல் முடியாது என்று பலர் கருது கின்றனர். அந்தச் சிற்றரசன் மூன்றாம் நந்திவர்மன் காலத்துச் சிற்றரசன். ஆதலின் தன் பேரரசனுக்குத் துணையாக வட புலம் சென்று குருகோடு என்னும் இடத்தில் இரட்டர்க்கு அடங்கிய சாளுக்கியனை (சிற்றரசனை) வென்றிருக்கலாம்.

அவ்வெற்றிக்காகத் தன்னை வாதாபி கொண்டவன் (வாதாபி - இங்குச் சாளுக்கியர் தலைநகர் என்ற அளவில் பொருள் கொள்ளவேண்டும்) என்றும் கூறிக் கொண் டிருக்கலாம். இன்றேல் இராட்டிரக்கூடர் தோற்றபிறகு வாதாபி மீதே அவன் படை எடுத்து இருக்கலாம். அவன் பரதுர்க்கமர்த்தனன் (பகைவர் கோட்டையை அழிப்பவன்) என்ற பெயரைக் கொண்டவன்" என டாக்டர் மீனாட்சியின் கருத்தைத் தழுவி எழுதியுள்ளார்.

**திருமிகு. சதாசிவ பண்டாரத்தார்**

*சோழர் வரலாறு*

திரு. சதாசிவ பண்டாரத்தார் அவர்கள் எழுதிய வரலாற்று நூல்கள் பாண்டியர் வரலாறு ஆகியவற்றுள் விக்கிரமகேசரி மரபினரைக் குறிப்பிடுவர். விக்கிரம கேசரியின் தாய் அநுபமா முதற்பராந்தகசோழன் மகள் என்பதும், கி.பி. 966இல் இரண்டாம் பராந்தகனாகிய சுந்தர சோழன் காலத்தில் வீரபாண்டியனை, ஆதித்ய கரிகாலன், பார்த்திவேந்திரவர்மன், பூதிவிக்கிரமகேசரி ஆகிய மூவரும் படை எடுத்து வென்றதனையே கொடும்பாளூர்க் கல் வெட்டில் பூதிவிக்கிரமகேசரி வீரபாண்டியனை வென்ற தாகக் குறித்துக் கொள்கிறான் எனவும் புலப்படுத்தியுள்ளார்.

**திரு. எம்.எஸ். கோவிந்தசாமி**

அண்ணாமலைப் பல்கலைக்கழக வரலாற்றுத் துறை பேராசிரியர் எம்.எஸ். கோவிந்தசாமி அவர்கள் The Role of Feadatories in Pallava History என்னும் தலைப்பில் அழகிய ஆங்கில நூலை அளித்துள்ளார். பேரரசில் - தமிழக வரலாற்றில் சிற்றரசர்களை மிக அழகாகப் படம் பிடித்துக் காட்டியுள்ளார். கொடும்பாளூர் வேளிர் பற்றி அன்னாரின் ஆய்வுரை 70-82 பக்கங்களில் அமைந்துள்ளது.

திரு. கோவிந்தசாமி அவர்கள் திரு. நீலகண்ட சாஸ்த்திரியாரின் காலக்கணிப்பினைப் பேரளவு ஒத்துக்

கொள்கிறார். சாஸ்திரியாரின் நோக்கு பூதிவிக்கிரம கேசரியின் கொடும்பாளூர்க் கல்வெட்டின் காலம் பற்றிய நோக்கு மிகப்பெரும்பான்மை ஒத்துக் கொள்ளத்தக்க தாகவும் சிறிதளவே தடைகளுள்ளதாகவும் அமைந்துள்ளது என்று கூறுகிறார். கொடும்பாளூர்க் கல்வெட்டில் கண்ட வேந்தர் கி.பி. 600க்கும் 900க்கும் இடைப்பட்டவர் என்பது இவர் கருத்து.

**இந்நூலிற் காணும் காலப் பகுப்பு**

இதுகாறும் கூறிய செய்திகளின் அடிப்படையில் பின்வருமாறு இருக்குவேளிர்களை முறைப்படுத்தலாம்.

1. முதலரசன் - கி.பி. 710க்கு முற்பட்டவன்.

2. பரவிரஜித் - கி.பி. 710 முதல் ராஜசிம்ம பாண்டியனோடு (710-740) போர் செய்தவன்.

3. 3 முதல் 5 வரை

3. வீரதுங்கன் 4. சங்ககிருத்

5. நிருபகேசரி - மூவரும் கி.பி. 730க்கும் 850க்கும் இடைப்பட்ட அரசர்கள்.

4. 6ஆம் அரசன் பரதுர்க்கமர்த்தனன் - கி.பி. 830இல் குருகோடு போரில் பங்கு கொண்டவன். மூன்றாம் நந்திவர்மன், விஜயாலயன் காலத்தவன்.

5. சமராபிராமன் - முதலாதித்தன், முதற் பராந்தகன் காலத்தவன் சுமார் 870 முதல் 920வரை ஆண்டவன்.

6. பூதிவிக்கிரமகேசரி - முதற் பராந்தகனின் ஆட்சியிறுதி தொடங்கிக் கி.பி. 945 முதல் கி.பி. 970வரை அரசாண்டவன் இரண்டாம் பராந்தகன் காலத்தவன்.

7. பராந்தகன் - இவனே பராந்தகன் சிறிய வேளாளன். இவன் 966இல் இறந்தவன்.

நான்காம் பகுதி

# பல்லவர் காலச் சிற்றரசு நிலை (700-900)

1. முதல் அரசன்,
2. பிரவிராஜித்து,
3. வீரதுங்கன்,
4. அதிவீர அநுபமன்,
5. சங்ககிருத்து,
6. நிருபகேசரி,
7. பரதுர்க்கமர்த்தனன்

## 1. கல்வெட்டில் கண்ட முதல் அரசன்

*கல்வெட்டில் கண்ட முதல் அரசன் பெயர் கல்வெட்டில் கூறப்படவில்லை. அனால் அவன் வெற்றிச் சிறப்புக் காணப்படுகிறது. கல்வெட்டின் முதற்பகுதி சிதைந்துள்ளமையினால் இவனுடைய பெயர் அழிந்தது. பெருமளவில் யானைக் கூட்டத்தைக் கவர்ந்தவன் என இவன் குறிப்பிடப்படுகின்றான். 'பெருமளவில் பாண்டிய யானையைக் கவர்ந்தவன்' எனத் திருவெங்கய்யா அவர்களும், மயிலை சீனி வேங்கடசாமியும் மொழிபெயர்க்கின்றனர். நீலகண்ட சாத்திரியார் மொழிபெயர்ப்பில் பாண்டியன் என்னும் பெயர் காணப்படவில்லை. இவன் பிரவிராஜித் என்பவனுடைய தந்தையாவான்.*

## 2. பிரவிராஜித்து

*பாண்டியர் யானைகளைக் கவர்ந்த - பாண்டியருக்கு எதிரான கொடும்பாளூர்வேள் ஒருவனுடைய மகன் -*

பிரவிராஜித்து ஆவான். இவன் இரண்டாம் நந்திவர்மனின் காலத்தவன்.

தந்தை பாண்டியன் மேலே படையெடுத்தான். வழிவழிப் பகைமையாலே இவனுடைய மகன் பிரவிராஜித்து மீது பாண்டியன் படையெடுத்தான். அதன் விளைவாகக் கொடும்பாளூர்க் கோட்டையே முற்றும் அழிந்தது எனலாம்.

**பல்லவ பாண்டியப் போர்**

இரண்டாம் நந்திவர்ம பல்லவனின் (710-775) சமகாலப் பாண்டிய மன்னன் முதலாம் இராசசிம்ம பாண்டியன் ஆவான். முதலாம் இராசசிம்மனுக்கும் இரண்டாம் நந்திவர்மனுக்கும் பெரும்போர் நிகழ்ந்தது.

**பாண்டியர் வென்ற இடங்கள்**

வேள்விக்குடிச் செப்பேட்டுத் தமிழ்ப் பகுதி,

> **மண்மகளது பொருட்டாக**
> **மத்தயானை செலவுந்தி மானவேல் வலன் ஏந்திக்**
> **கடுவிசையால் எதிர்ந்தவரை நெடுவயல் வாய்நிகர் அழித்துக்**
> **கறுவடைந்த மனத்தவரைக் குறுமடை வாய்கூர்ப்பழித்தும்**
> **மன்னிக்குறிச்சியும் திருமங்கையும் முன்னின்றவர் முரணழித்தும்**
> **வேலோர் கடற்றானையோடு ஏற்றெதிரே வந்தவரைப் பூவலூர்ப் புறங்கண்டும்**
> **கொடும்புரிசை நெடுங்கிடங்கில் கொடும்பாளூர் கூடார்**
> **கடும்பரியும் கடுங்களிறும் கதிர்வேலிற் கைக்கொண்டும்**
> **சேவ.... கூடாத பல்லவனைக் குழும்பூறான் தேசழிய**
> **எண்ணிறைந்த மால்களிறும் இவுளிகளும் பலகவர்ந்தும்**
> **தரியலராய்த் தரித்தவரைப்பெரியலூர்ப் பீடழித்தும்**
> **பூவிரியும் பொழிற்சோலை காவிரியைக் கடந்திட்டு...**

என்று குறிப்பிடுகிறது.

கோபத்தோடு (போர்க்களத்திற்கு) வந்த இவ்வரசன் மனிதனா? அரக்கனா? சிவனா? பரமபுருஷனான நாராயணனா? இந்திரனா? என்று நினைத்துப் பல்லவ

மல்லன் என்றும் அரசன் போர்க்களத்தில் துன்பம் அடைந்து பயத்தால் ஓடினான் என்று வேள்விக்குடிச் செப்பேடுப் 12ஆம் சுலோகம் கூறுகிறது. (பாண்டியர் செப்பேடுகள் பத்து, பக்கம் 35).

பாண்டியன் இராசசிம்மன், நெடுவயல் குறுமடை மன்னிக்குறிச்சி, திருமங்கை, பூவலூர், கொடும்பாளூர், குழும்பூர், பெரியலூர் முதலான இடப் போர்களில் வென்றான் எனவும், பல்லவமல்லனைப் புறங்காட்டி ஓடச் செய்தான் எனவும் வடமொழிச் சுலோகத்தாலும் குழும்பூரில் பல்லவனை வென்றான் எனத் தமிழ்ப் பகுதியாலும் அறியலாம்.

**கொடும்பையில் கடும்போர்**

கி.பி. 710-715இல் பாண்டியன் இராசசிம்மன் கொடும்பாளூரில் பெரும்போர் செய்தான். இதனைக்

> **கொடும்புரிசை நெடுங்கிடங்கில் கொடும்பாளூர் கூடார்**
> **கடும்பரியும் கடுங்களிறும் கைவேலில் கைக்கொண்டும்**

என வேள்விகுடிச் செப்பேடு கூறுகிறது. "வளைந்து செல்லக் கூடிய மதில் உறுப்புக்களையும் ஆழமான அகழிகளையும் உடைய கொடும்பாளூரில் விரைவாகச் செல்லும் பகைவருடைய குதிரை, விரைந்து செல்லும் பகைவருடைய யானைத் தொகுதிகளைப் பாண்டியன் தன்னுடைய ஒளி வீசுகின்ற வேலினால் கைப்பற்றினான்" என்பது இதனுடைய பொருளாகும்.

மதிலும், அகழியும் உடையதாகக் கொடும்பாளூர் இருந்தது எனவும் கொடும்பாளூர் அரசர் பாண்டியன் இராசசிம்மனுக்குப் பகைவராக விளங்கினர் எனவும் செப்பேடு தெளிவாகக் காட்டுகிறது.

## பெரும்பிடுகு முத்தரையன் ஆயின சுவரன்மாறன்

சுமார் 705-745 வரை ஆண்ட பெரும்பிடுகு முத்தரையன் ஆயின சுவரன்மாறன் இளங்கோவதியரையனாயின மாறன் பரமேசுவரனின் மகனாவான். இவ்வரசன் இரண்டாம் நந்திவர்மன் காலத்தவன் ஆவான். காஞ்சி வைகுந்தப் பெருமாள் கோயில் சிற்பங்களில் கூறப் பெறும் காடக முத்தரையன் இவனே யாவன் என வரலாற்று ஆய்வாளர் கருதுவர். இவன் இரண்டாம் நந்திவர்மன் அரியணை அடையப் பெரிதும் பாடுபட்டமையோடு, அவனுக்கு அடங்கிப் பெருந்துணை புரிந்த சிற்றரசன் ஆவான். இவனுடைய வெற்றிகளை நோக்குவோம்.

### வெற்றிச் சிறப்புக்கள்

பெரும்பிடுகு முத்தரையனாயின சுவரன்மாறன் பெற்ற வெற்றிகளைப் புகழ்ந்து செந்தலை என்று இந்நாளில் கூறப்படும் சந்திரலேகைச் சதுர்வேதி மங்கலத்தில் உள்ள கல்வெட்டு ஒன்று காட்டுகிறது. இக்கல்வெட்டுச் சுவரன்மாறன் கட்டிய பிடாரி கோயில் தூண்களில் பொறிக்கப்பட்டுள்ளது.

பாச்சில்வேள் நம்பன் பாடிய நான்கு பாடல்களால் அழுந்தியூர், மணலூரர், கொடும்பாளூர் காரை என்ற ஊர்களில் மாறன் என்னும் பெயரினையுடைய மன்னன் வென்றான் என்பது புலனாகிறது.

கிழார்க் கூற்றத்துப் பவதாயமங்கலத்து அமருணிலையாயின குவாவங் காஞ்சன் பாடிய பாடல்கள் 1. கொடும்பை, 2. காந்தளூர், 3. கண்ணனூர், 4. அண்ணல் வாயில் முதலிய இடங்களில் வென்றதாகக் கூறுகின்றன.

மணலூர் தஞ்சை மாவட்டத்தில் இதே பெயருடன் இருக்கிறது. கண்ணனூர் திருச்சி மாவட்டச் சமயவரம் ஆகும். அழுந்தியூர் தஞ்சை மாவட்ட அடஞ்சியூர் ஆகலாம்.

## கொடும்பாளூர் வெற்றி

*கொடும்பாளூரில் பெரும்பிடுகு முத்தரையன் ஆயின சுவரன்மாறன் போர்புரிந்து வெற்றி பெற்றதாகக் கல்வெட்டுப் பாடல்கள் கூறுகின்றன.*

**(...........) வாளமருள் வாகைப்பூக்**
**குஞ்சி கமழ்மண்ணிக் கோமாறன் - தஞ்சைக்கோன்**
**கோமாரி மொய்ம்பில் கொடும்பாளூர் காய்ந்தெறிந்தான்**
**தோளால் உலகளிக்கும் தோள்**

*என்பது பாச்சில்வேள் நம்பன் பாடிய பாடல்களில் ஒன்று ஆகும்.*

*பொருள் : கொடுமையான போரில் வாகைப் பூவினது மணம் கமழும் தலைமாலை சூடியவனாகிய தஞ்சைக் கோன் எனப்படும் மாறன் (சுவரன்மாறன்) மிக்க தோள் வளமை காரணமாகக் கொடும்பாளூரைச் சினந்து அழித் தான். அத்தோளால் இவ்வுலகினைக் காப்பான் ஆகுக.*

**ஏறி விசும்பு இருநிலமாய்த் தென்பவால்**
**மாறன் செருவேல் மறம் கனன்று - சீறக்**
**கொடிமாடத் திண்கொடும்பை கூடாத மன்னர்**
**நெடுமா மதில் இடிந்த நீறு.**

*என்பது அமருள் நிலை ஆயின குவாவங் காஞ்சனின் பாடல்களில் ஒன்றாகும்.*

*பொருள் : சுவறன் மாறன் வேலுடன் சினந்து சீறக் கொடிகள் பறக்கும் மாடங்களையுடைய அழகிய கொடும்பை நகரத்தில் பகைவரை வென்று நீண்ட மதில்களை இடித்த தூள் மேல்நோக்கிச் செல்ல ஆகாயம் நிலவுலமாக ஆயிற்று.*

*இப்பாடல்களால் கொடும்பாளூரில் பகை மன்னர் மாறனால் வெல்லப்பட்டமையும் கொடும்பை நகரத்தில் மதில்கள் இடிக்கப் பெற்றமையையும் அறிய இயல்கிறது.*

**பல்லவனின் போர்கள்**

பல்லவன் நந்திபுரம் என்னும் கோட்டையில் தங்கி இருந்தான். பல்லவன் எதிர்பாராத நேரத்தில் பாண்டியன் இராசசிம்மன் கோட்டையை முற்றுகை இட்டான். நந்தி வர்மன் கோட்டையைக் கைப்பற்றாதவாறு எயில் காத்தான்.

படைத் தலைவன் உதயசந்திரன் என்பவன் படையுடன் பல்லவனை மீட்க விரைந்து வந்தான். சித்திர மாயனைக் கொன்றான். பாண்டியப் படையை நிம்பவனம், சூதவனம், சங்கிரகிராமம் மண்ணைக் குறிச்சி, சூரவழுந்தூர் முதலான இடங்களில் வென்றான், என உதயசந்திரனால் வெளியிடப்பட்ட உதயேந்திரப்பட்டயங்கள் கூறுகின்றன.

ஆங்காங்கே சில போர்களில் பல்லவரும் சில போர்களில் பாண்டியரும் வென்றனர். இறுதியில் பல்லவ அரசனே வெற்றி பெற்றான்.

**கொடும்பைப் போர் நடந்தது எவ்வாறு?**

கொடும்பாளூர் வேளிருக்கும், முத்தரையருக்கும் வழி வழிப் பகைமை இருந்தது. எனவே முத்தரையன் கொடும்பைவேளை வென்றான் என்பர் சிலர். கொடும்பை வேளிர் முத்தரையருடன் பகைமை உடையவர் அல்லர் என்பது உறுதி.

பாண்டியனின் யானைக் கூட்டத்தினைப் பிரவி ராஜித்தின் தந்தை கவர்ந்தான். மரபுவழிப் பகைமையினால் வேளிர் எதிர்பாராத நேரத்தில் கொடும்பாளூர் வேள் பிரவிராஜித்தைப் பாண்டியன் இராஜசிம்மன் தாக்கினான். அவன் தோற்றான். பாண்டியன் கொடும்பையைக் கைப்பற்றினான்.

தனக்கு அடங்கிய சிற்றரசன் வெல்லப்பட்ட உடன் பல்லவன் பாண்டியன் இராசசிம்மனோடு குழும்புரில்

போரிட்டதனை வேள்விக்குடிச் செப்பேட்டால் அறியலாம்.

பல்லவனுக்கு அடங்கிய கொடும்பைச் சிற்றரசன் வெல்லப்பட்டான். கொடும்பை நகர் பாண்டியர் வசமாகியது என்பது அறிந்த பல்லவச் சார்புடைய சிற்றரசனான பெரும்பிடுகு முத்தரையன் கொடும்பை மீது படையெடுத்தான். கொடும்பையை மீட்டான். கொடும்பை நகர் மீண்டும் பல்லவச் சிற்றரசர்க்கு உரித்தாயிற்று.

**3. வீரதுங்கன்**

இரண்டாம் நந்திவர்மன் காலச் சிற்றரசருள் பிரவிராஜித்தும் ஒருவன். இவனுடைய மகன் வீரதுங்கன் ஆவான். (வீரர்களில் உயர்ந்தவன் என்பது அவன் பெயரின் பொருள்.)

**4. அதிவீர அநுபமன்**

வீரதுங்கனுடைய மகன் அதிவீர அநுபமன் - அதிவீர அநுபமன் மழவரை வென்றவன் எனக் கொடும்பாளூர்க் கல்வெட்டுக் குறிக்கிறது. (மிகுந்த வீரத்தால் இணை யற்றவன்.)

**5. சங்ககிருத்து**

சங்ககிருத்து அதிவீர அநுபமனின் மகன் ஆவான். இவன் நிருபகேசரி என்பவனை மகனாகப் பெற்றான். ((படையின்) சங்கத்தைச் செய்தவன்).

**6. நிருபகேசரி**

நிருபகேசரி சங்ககிருத்துவின் மகன். நிருபகேசரி என்ற பெயருக்கு அரசர் ஏறு என்பது பொருள். இவன் பாம்புகளோடு வளர்ந்தான். இவன் மகனே வாதாபி வென்ற பரதுர்க்கமர்த்தனன் ஆவான்.

நிருபகேசரி பாம்புகளோடு வளர்ந்தான் என்று கூறுகிறது. எவரும் பாம்புகளோடு வளர இயலாது. எனவே இவன் இளமையில் பாம்பு கொடியுடைய அரசருடனோ

அல்லது நாகர் இனத்தவருடனோ வளர்ந்திருக்க வேண்டும். அந்நாக மரபினன் அல்லது நாகக் கொடியுடையவன் பல்லவ அரசனாகவும் இருக்கலாம்.

**7. பரதுர்க்கமர்த்தனன்**

இளம் வயதில் பாம்புகளோடு வளர்ந்த புகழுடையவன் நிருபகேசரி. இவனுடைய மகன் வாதாபியை வென்ற பரதுர்க்கமர்த்தனன் ஆவான் என்கிறது கொடும்பாளூர்க் கல்வெட்டு.

பரதுர்க்கமர்த்தனன் 'வாதாபியை' வென்றதாகக் கல்வெட்டுக் கூறுகிறது. வாதாபி வெற்றி முதல் நரசிம்மவர்மனுக்கு பின்பு எப்பொழுதும் நடக்கவில்லை. எனவே முதல் நரசிம்மன் காலத்தில் - பரதுர்க்கமர்த்தனன் வாழ்ந்தவன் என வரலாற்று அறிஞர் கருதுவர். அக் கருத்துக்கள் கால ஆராய்ச்சி என்ற பகுதியில் ஆராயப்பட்டுள்ளன.

பரதுர்க்கமர்த்தனன் என்னும் பெயருக்குப் பகைவருடைய கோட்டைகளை அழித்தவன் என்பது பொருளாகும். பரதுர்க்கமர்த்தனன் 'வாதாபிஜித்' எனக் கல்வெட்டில் குறிப்பிடப்படுகிறான்.

மூன்றாம் நந்திவர்ம பல்லவன் கி.பி. 825 - 850வரை ஆண்டவன். மூன்றாம் நந்திவர்மன் கால இராட்டிரக்கூட அரசன் முதலாம் அமோக வர்ஷன் ஆவான். முதலாம் அமோகவர்ஷனுடன் மூன்றாம் நந்திவர்மன் பெரும்போர் புரிந் தான். இப்போர் 'குருக்கோட்டை' என்ற ஊரில் நடந்தது. பெல்லாரி ஜில்லாவில் துங்கபத்திரா நதிக்கரையில் குருக் கோடு என்ற பெயரால் இன்று வழங்கப்படும் இவ்வூரில் அழிந்த நிலையில் அழகிய கோட்டையும் சாளுக்கியர் காலக் கோயில்களும் இன்றும் காணப்படுகின்றன. (பல்லவர் வரலாறு, ப. 183) இப்போர் சுமார் 830ஐ ஒட்டி நடைபெற்றதாகும்.

குருக்கோட்டைப் போரைப்பற்றி நந்திக் கலம்பகம் கூறும் செய்திகளை நோக்குவோம்.

என்னதே கலைவளையும் என்னதே மன்னர்
சினவேறு செந்தனிக்கோல் நந்தி - இனவேழம்
கோமறுகில் சீறிக் குருக்கோட்டை வென்றாடும்
பூமருகில் போகாப் பொழுது. (பாடல் 2)

*என்ற பாடல் மன்னர்களில் கோபமிக்கவனாகிய ஆண் சிங்கத்தைப் போன்ற நந்தி பல்லவனின் யானைப் படை பகை வேந்தர்களின் தெருக்களில் சினமுடன் சென்று குருக் கோட்டை எனப்படும் கோட்டையை வென்றமையினைப் புலப்படுத்துகின்றது.*

சென்றஞ்சி மேற்செங்கண் வேழம் சிவப்பச் சிலர் திகைப்ப
அன்றும் சினத்தார் இனம் அறுத்தார் போலும் அஃது அஃதே
குன்றம் செய்தோள் நந்தி நாட்டம் குறிக்குருக் கோட்டையின் மேல்
சென்றஞ்சிப் பட்டதெல்லாம் படும் மாற்றவர் திண்பதியே
(பாடல் 10)

*என்ற பாடல் மலையினைப் போன்ற தோள் உடைய நந்தி வர்மன் குருக்கோட்டையின் மேல் குறி வைத்துப் போரிட்டுப் போரில் துன்பம் தந்தமையைப் புலப்படுத்துகிறது.*

ஆர்க்கின்ற கடலோத மார்க்கு மாறும்
அசைகின்ற இளந்தென்ற லசையுமாறும்
கூர்கின்ற வனமதியங் கூர்க்கு மாறும்
காணலாம் குருங்கோட்டைக் குருகா மன்னர்
போர்கின்ற புகர்முகத்துக் குளித்த வாளி
பூதலத்தின் வடிம்பலம்பப் பூண்ட வில் லோன்
பார்க்கொன்று செந்தனிக்கோல் பைந்தார் நந்தி
பல்லவர் கோன் தண்ணருள்யான் படைத்த ஞான்றே
(பாடல் 35)

*என்ற பாடல் குருக்கோட்டைப் போரில் யானைப் போர் நடத்திப் பல்லவன் வெற்றியுற்றதாகக் கூறுகிறது.*

தோளான் மெலியாமே ஆழ்கடலால் சோராமே
வாளா பெறலாமே வாயற்றீர் - கேளாதார்
குஞ்சரங்கள் சாயக் குருக்கோட்டை அத்தனையும்
அம்சரங்கள் ஆர்த்தான் அருள் (பாடல் 84)

*என்ற பாடல் நந்திவர்ம பல்லவன் பகைவருடைய யானைப்*

படையை மிக அழித்துக் குருக்கோட்டையில் இருந்த கோட்டைகள் அத்தனையும் கைப்பற்றினான் எனக் கூறுகிறது.

நந்திக் கலம்பகத்தைக் கூர்ந்து நோக்குங்கால் குருக் கோடு பகுதியில் குருக்கோட்டை இருந்தது. அதனை ஒட்டிய பல கோட்டைகள் இருந்தன. நந்திவர்மன் அவற்றைத் தாக்கினான்; களிற்றுப் போர் நிகழ்த்திப் பகைவரின் யானைப் படையைப் பெரிதும் அழித்துக் கோட்டைகளைக் கைப்பற்றினான் என்ற உண்மை புலனாகிறது.

கி.பி. 931க்குரிய வேலூர்ப் பாளையப்பட்டயத்தில்

"இவன் (நந்திவர்மன்) போர்க்களத்தில் தன் பகைவரைக் கொன்றான். அவனது வாளினால் துண்டாக்கப் பெற்ற யானைகள் அணிந்து கொண்டிருந்த முத்து மாலைகள் செருக்களத்தில் சிதறிக் கிடந்த காட்சிச் செரு மங்கை தன்னுடைய பற்களைக் காட்டிச் சிரிப்பது போலத் தோற்றமளித்தது" என்று கூறப்பட்டுள்ளது நந்திக் கலம்பக வர்ணனையுடன் ஒப்பிடுவதற்குரியதாகும்.

'தெற்கே படை எடுத்துச் சென்று வருக' என்று தன் படைத் தலைவன் **பங்கயனை** அனுப்பியிருந்த அமோக வர்ஷன் உடனே திரும்பி வருக எனக் கட்டளை அனுப்பினான். (S.I.I. Vol. II No. 98) குருக்கோட்டை போர் கடுமையாக நடந்தது. இதற்குக் காரணம் ஆகலாம். (பல்லவர் வரலாறு, 184 FN) அமோகவர்ஷனுக்குப் படையுதவிக்காகப் படை தலைவன் வரவழைக்கப்பட்ட உண்மை இதனால் உணரப்பெறும். மூன்றாம் நந்திவர்மனுக்கும் உதவியாகப் பல சிற்றரசர் சென்றிருத்தல் உறுதி. அவர்களுள் ஒருவனாகப் பரதுர்க்க மர்த்தனனைக் கொள்ளலாம்.

பரதுர்க்கமர்த்தனன் மூன்றாம் நந்திவர்மன் காலச் சிற்றரசன். ஆதலினால்தன் பேரரசனுக்குத் துணையாகக் குரு கோடு என்ற இடத்தில் இரட்டனுக்கு அடங்கிய

சாளுக்கி யனை (சிற்றரசனை) வென்றிருக்கலாம். அவ் வெற்றிக்காகத் தன்னை வாதாபி கொண்டவன் (வாதாபி - இங்கே சாளுக் கியர் தலைநகர் என்ற அளவில் பொருள் கொள்ள வேண்டும்) என்றும் கூறிக்கொண்டு இருக்கலாம். இன்றேல் இராட்டிரகூடர் தோற்றபிறகு வாதாபி மீதே படை எடுத்திருக்கலாம் என்று டாக்டர் மீனாட்சியும், டாக்டர் மா. இராசமாணிக்கனாரும் கூறுவர்.

பரதுர்க்கமர்த்தனன் பகைவர் கோட்டையை அழித்தவன் என்ற பெயருடையவன். குருக்கோட்டைப் போரில் பல கோட்டைகள் பல யானை முதலியவற்றால் தாக்கப்பட்டு அழிக்கப்பெற்றதனை நந்திக்கலம்பகம் கூறுகிறது. குருக்கோடு போரில் கலந்து கொண்டமை யினால் இப்பெயர் உற்றிருப்பானோ என்ற ஐயம் நேர்கிறது.

குருக்கோட்டைப் போரில் ஸமராபிராமன் கலந்து கொண்டு வென்றான் என்றால் 'குருக்கோடுஜித்' என்ற பெயர் ஏற்பட்டிருக்க வேண்டும். 'வாதாபிஜித்' என்ற பெயர் ஏற்பட்டிருக்காது என்பது வரலாற்று அறிஞர் சிலர் வாதிப்பர்.

மூன்றாம் கிருட்டிணதேவன், "கச்சியும் தஞ்சையும் கொண்ட கன்னரதேவன்" எனக் கல்வெட்டுக்களில் கூறிக் கொள்கிறான். இராமேஸ்வரத்தில் வெற்றித்தூண் நிறுவியதாகக் கூறுகிறது. கார்ஹாட் செப்பேடு. இதனைப் பற்றிப் பண்டாரத்தார் சோழர் வரலாற்றில்,

"இவன் தஞ்சையைக் கைப்பற்றியமையும் பிறவும் புனைவுரைகளே அன்றி உண்மைச் செய்திகளாகமாட்டா... அவன் தக்கோலத்தில் சோழரை வென்று (திருமுனைப்பாடி, தொண்டை நாடுகள்) அவ்விரு நாடுகளையும் கைப்பற்றித் தன் ஆட்சிக்கு உள்ளாக்கிய வரலாற்றையே அச் செப்பேடு கள் இவ்வாறு கூறுகின்றன எனலாம்" என்று எழுதியுள்ளார்.

சோழனை வென்றதனாலேயே கன்னரதேவன்

தஞ்சையைக் கொண்டதாகக் கூறிக் கொண்டான் என்பது இதனால் புலனாகும். வாதாபியை நேரடியாக வெல்லா விட்டாலும் கூடச் சமராபிராமன் வாதாபி முதலான வட இந்திய' நகரங்களில் ஏகாதிபதியாகிய அமோகவர்ஷனை வென்றதனால் வாதாபிஜித் எனக் கூறிக்கொண்டான் எனக் கோடல் சரியானதாகவே தோன்றுகிறது.

இவ்வரசன், மூன்றாம் நந்திவர்ம பல்லவன் காலம் முதல், விஜயாலயன் கால இறுதிவரை இருந்தவனாகக் காணப்படுகிறான்.

ஐந்தாம் பகுதி

# சோழர் கால இருக்குவேளிர் நிலை

(900-970)

1. சமராபிராமன்
2. பூதிவிக்கிரமகேசரி
3. பராந்தகன்

## 1. சமராபிராமன்

*திவ்வியமான புகழின் ஒளி உற்றவனும் அதிராஜ மங்கலத்தில் சாளுக்கியனை வென்றவனும் (அல்லது கொன்றவனும்) ஆகிய சமராபிராமன் தோன்றினான்.*

*யதுகுலத்தின் கொடியாகிய அவனிடம் அநுபமா (உவமையில்லாதவள்) என்னும் பெயருக்கேற்ற அழகு படைத்த சோழ அரசனுடைய மகள் மனைவியானாள். இவள் விஷ்ணுவின் மனைவி இலக்குமி போலவும், பிரமனின் மனைவி சரசுவதி போலவும் சிவனின் மனைவி கிரிஜா போலவும் சிறப்புப் பொருந்தியவளாக இலங்கினாள்.*

*- கொடும்பாளூர்க் கல்வெட்டு*

## அறிஞர் கருத்துக்கள்

*திரு. ஹீராசு பாதிரியார் சுமார் 642 - 47 வரை ஆண்ட அரசன் சமராபிராமன் எனக் கூறுவர். டாக்டர் திரு. ஆரோக்கியசாமி அவர்கள் 645 - 675 வரை ஆண்டவன் என்பர். இவ்விரண்டு கருத்துக்களும் முன்னர் ஆய்வு செய்யப்பட்டுள்ளன.*

*திரு. நீலகண்ட சாத்திரியார் சமராபிராமன் 9ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் வாழ்ந்தவன் எனக் குறிப்பிடுகிறார்.*

டாக்டர் மீனாட்சி அவர்களும் டாக்டர் மா. இராசமாணிக்கனாரும் மூன்றாம் நந்திவர்மன் காலத்து இறுதியில் பரதுர்க்கமர்த்தனனும் அவன் மகன் சமராபிராமனும் வாழ்ந்ததனை உறுதி செய்துள்ளனர்.

திரு. கே.வி. சுப்பிரமணிய ஐயர் அவர்கள் கி.பி. 825 - 50க்கு இடைப்பட்டவனாகச் சமராபிராமனைக் காட்டுகிறார்.

சாளுக்கிய வெற்றியினையும் இவனுடைய தந்தை பரதுங்கமர்த்தனின் வாதாபி வெற்றியையும் அடிப்படையாகக் கொண்டு காலம் நிர்ணயிப்பர் சில ஆய்வாளர்கள். அன்னோர் நரசிம்மவர்மன் காலத்துக்குப்பின் வாதாபிப் போர் நிகழவில்லை எனக்கூறி அவன் காலத்துக்குச் சிறிதே பிற்பட்டவனாகச் சமராபிராமனைக் காட்டுவர். பரதுர்க்கமர்த்தனன் என்னும் தலைப்பில் குருக்கோட்டை வெற்றியாலோ அல்லது நேரடி வாதாபிப் படை எடுப்பாலோ சமராபிராமனின் தந்தை 'வாதாபிஜித்' என்று கூறப்பட்டான் என்பது காட்டப்பெற்றுள்ளது. மணிமங்கலம் அதிராஜமங்கலம் அன்று. முதல் நரசிம்மவர்மன் காலத்தில் அதிராஜமங்கலம் எனப்பெற்ற திருவதிகையில் போர் நிகழவில்லை என்பது ஒன்றே சமராபிராமன் முதல் நரசிம்மவர்மன் காலத்தவன் அல்லன் என்பதனைக் காட்டுவதாகும்.

'சோழனுடைய மகனைச் சமராபிராமன் மணந்தான்.' என்ற கல்வெட்டுக் குறிப்பினைக் கொண்டு கே.வி. சுப்பிரமணிய ஐயர் கணித்துள்ள காலக்குறிப்பு நோக்கத் தக்கது. இவர் சமராபிராமன் 883-897வரை ஆண்டவன் எனக் குறிப்பிட்டுள்ளார். தாம் தரும் மரபு வழி அட்டவணையில் அநுபமாவைச் சோழ மகாராஜா குமராங்குசனின் மகளாகக் காட்டியுள்ளார். சமராபிராமனின் அதிராஜ மங்கல வெற்றியும், அநுபமா யாருடைய மகள்? என்பதும் சமராபிராமனின் காலம் கணிக்கப்புகுங்கால்

தவறாமல் அடையாளம் சுட்டப்படவேண்டிய முக்கியமான செய்திகள் ஆகும்.

**அதிராஜமங்கலச் சாளுக்கிய வெற்றி**

திருமுனைப்பாடி நாட்டிலுள்ள திருவதிகையே 'அதிராஜமங்கலம்' ஆகும். தேவாரம் பாடிய முதல் மூவருள் ஒருவராகிய திருநாவுக்கரசரும் திருமுனைப் பாடி நாட்டுத் திருவதிகையை அதிராஜமங்கலம் எனக் குறிப்பிட்டுள்ளார். **"அதியரைய மங்கலத்து அமர்ந்தான் தன்னை"** என்பது திருநாவுக்கரசரின் திருவாக்கு. **'அதியரைய மங்கலத்து ஓலை வீரட்டன்'** என்னும் முதலாம் ஆதித்தன்கால அலுவலன் பெயர் முதல் ஆதித்தன் காலத்தும் திருவதிகை அதிராஜ மங்கலம் எனப்பட்டமையை காட்டுவதாகும். சோழர் கல்வெட்டுக்கள் அதிராஜமங்கலத்தை அதிராசமங்கலம், அதிஅரையமங்கலம், அதிராசமங்கலிய புரம் என்றெல்லாம் கூறுவதனைத் திருவதிகை வீரட்டானேசுவரர் கோயில் கல்வெட்டுக்களால் அறியலாம்.

கொடும்பாளூர்க் கல்வெட்டு, **'அதிராசமங்கலாஜெள நிஜகான சளுக்கிம்'** எனக் கூறுகிறது. எனவே திருவதிகையில் தான் சாளுக்கியனைச் சமராபிராமன் வென்றான் என்பது உறுதியாகிறது. திருமுனைப்பாடி நாட்டில் நடந்த போர்களில் திருவதிகையில் நடந்த போரில் சமராபிராமன் சாளுக்கியனை வென்றவன் ஆதல் வேண்டும்.

முதலாம் ஆதித்தசோழன் தொண்டை மண்டலத்தைக் கைப்பற்றுவதற்காகப் பெரிதும் முயன்றான். போரிட்டான். இறுதியில் வெற்றி பெற்றான்; **'தொண்டை நாடு பரவின சோழன் இராசகேசரிவர்மன்'** என்ற சிறப்புப் பெயர் பெற்றான். முதற் பராந்தகசோழன் காலத்தில் திருமுனைப் பாடி நாட்டில் கிருட்டிண தேவனிடம் இருந்து சோழ நாட்டைக் காக்கப் பெரும் படை பந்தோபஸ்து ஏற்படுத்தப் பட்டிருந்தது.

முதல் பராந்தக சோழனுடைய முதல் மகன் இராசாதித்தன். இவன் திருமுனைப்பாடி நாட்டுத் திருநாவலூரில் பெரும்படையோடு தங்கியிருந்து கி.பி. 936 முதல் சோழ நாட்டின் வடக்குப் பகுதியைக் கண்காணித்து வந்தான். அவன் யானை, குதிரைப் படைகளுடன் பேரளவில் கண்காணிப்புச் செய்து வந்ததனைக் கல்வெட்டுக்களால் அறியலாம்.

திருநாமநல்லூர் என இந்நாளில் வழங்கும் ஊர் அக்காலத்தில் .'ராசாதித்தபுரம்' எனவும் கோயில் 'ராசாதித்தேச்வரம்' எனவும் வழங்கப்பெற்றது.

இராசாதித்த சோழனின் அலுவலர்

1. இராஜாதித்ததேவர் பரிவாரத்து மாளுவச் சாரடங்கள் vii 955. 326 of 1902.

2. இராஜாதித்ததேவர் குதிரைச் சேவகன் கடம்பூர் முர்க்கன்புரத்து vii 955. 327 of 1902.

3. இராஜாதித்ததேவர் பரிவாரத்து அய்யன் இயக்கன் vii 957. 328 of 1902. 963. 333 of 1902.

4. இராஜாதித்ததேவர் பரிவாரத்து மலையாளன் இரவிகொத்தை vii 960. 331a of 1902.

5. இராஜாதித்ததேவர் கரணநாயகன் குமரடி திருவரங்கன் vol. vii 964. 334 of 1902. 978. 348 of 1902.

6. இராஜாதித்ததேவர் ஸ்ரீகரணத்தார் vii 966. 336 of 1902.

7. இராஜாதித்த மலையான் பரிவாரத்துச் சேவகன் திருக்குன். நப்பொழுசெந்த குமரன். vii 973. 343 of 1902.

8. பிள்ளையார் ராசாதித்த தேவர்க்குப் பன்மருந்திடும் சேநன் vii 954. 325 of 1902.

9. இராஜாதித்ததேவர் பரிவாரத்து மலையாளன் நெடுங்கலை நாட்டு ஈஸ்வரமங்கலத்து மாகவல்லன் கண்ணன் vii 958. 329 of 1902.

*10. இராஜாதித்ததேவர் ஆனையாள் அழிசிகுலன் ஊரன்சிங்கன்* vii 959. 330 of 1902.

*11. இராஜாதித்ததேவர் எண்ணெய் நடையன் வண்ணன் வடுகன்.* vii 977. 347 of 1902.

முதலான இராஜாதித்ததேவர் அலுவலர்கள் கொடை தந்துள்ளனர். இச்சான்றுகள் முதற் பராந்தகனின் ஆணையின்படித் திருமுனைப்பாடி நாட்டில் இராசாதித்தன் தங்கி இருந்தமையையும் அவன் அலுவலர் ஆங்கே இருந்தமையையும் புலனாக்கும்.

பெண்ணையாற்றங்கரையில் இன்று கிராமம் என்று கூறப்பெறும் முடியூரில் சேரநாட்டு நந்திக்கரைப் புத்தூரைச் சேர்ந்தவனும், இராசாதித்தனின் சேனைத் தலைவனும் ஆகிய வெள்ளங்குமரன் என்பவன் 936இல் படையுடன் தங்கி இருந்தான்.

இராசாதித்தனுடைய தம்பியாகிய அரிகுலகேசரி திருமுனைப்பாடி நாட்டில் படையுடன் தங்கி இருந்தான் என்று திருக்கோவலூர்க் கல்வெட்டுக் கூறுகிறது.

பெரும்போரை எதிர்நோக்கிப் பராந்தக சோழன் ஏற்பாடுகள் செய்திருந்தான். இறுதியில் தக்கோலத்தில் நடைபெற்ற பெரும்போரில் தோற்ற பராந்தகன் தொண்டை நாட்டையும் திருமுனைப்பாடி நாட்டையும் இழந்தான். மூன்றாம் கிருட்டிணதேவன் வென்றான்.

திருக்கோவலூர் மூன்றாம் கிருட்டிணதேவனுக்கு உரியதாயிற்று. அங்கேயுள்ள கிருட்டிணதேவனின் கல்வெட்டு இதற்குச் சான்றாகும்.

திருமுனைப்பாடி நாட்டில் நிகழ்ந்த போர்களில் அதிராஜமங்கலத்தில் சோழருக்கு உதவியாகப் போர் செய்த சமராபிராமன் இரட்டர்க்கு அடங்கிய சிற்றரசனாகிய சாளுக்கியனை வென்றமையே கொடும்பாளூர்க்

கல்வெட்டில் கண்ட சாளுக்கியப் போர் எனக் கருதலாம்.

**சோழன் மகளை மணந்தமை**

சமராபிராமன் அநுபமா என்பவளை மணந்தவன். அநுபமா சோழ அரசனு டைய மகள். உவமை அற்றவள் என்னும் பெயருக்குத் தக்கப்படி ஈடு இணையில்லாத அழகி. இவள் சிவனிடத்து உமைபோல, விஷ்ணுவுக்குத் திருமகள் போலப் பிரமனுக்கு நாமகள்போலச் சிறப்புடன் இலங்கினாள் என்று கொடும்பாளூர்க் கல்வெட்டுக் கூறுகிறது.

'அநுபமா' சோழன் குமராங்குசன் மகள் என்பதற்கு எவ்வித ஆதாரமும் இல்லை.

முதல் பராந்தக சோழனுக்கு அநுபமா, வீரமாதேவி என்று இரண்டு புதல்வியர் இருந்தனர். அனுபமா கொடும் பாளூர் குல அரசன் சமராபிராமனை மணந்தாள் என்று திரு. நீலகண்ட சாத்திரியாரும் சதாசிவ பண்டாரத்தாரும் கூறியுள்ளனர்.

பராந்தகன் சிறியவேள் என்பவனைத் திருவிசலூர் வடமொழிக் கல்வெட்டுப் புகழ்ந்துரைக்கிறது. இக் கல்வெட்டில் இருங்கோளர (கொடும்பாளூர் வேளிர்) குலத்தினைச் சேர்ந்தவனாகிய பராந்தகன் சிறியவேள் பராந்தகனின் மகள் வழி மரபுக்கு விளக்கு எனக் குறிப்பிடப்படுகிறான். **"இருங்கோளகுலபிரதீப: பராந்தகத் மாஜவர்கவார்யக"** என்பது கல்வெட்டுத் தொடர். முதல் பராந்தகசோழனின் மகள் அநுபமாவைச் சமராபிராமன் மணந்தான். அவள் வழியே பிறந்த பூதிவிக்கிரமகேசரியால் கொடும்பாளூர் வேளிர் குலம் தழைத்தது. அவ்வழியில் சிறியவேள் விளக்காக நின்றான் என்பதே கல்வெட்டுக் காட்டும் உண்மையாகும். (South Indian Inscription Vol. III Ins.No. 121 and Introduction.)

முதற் பராந்தக சோழன் மகளாகிய அநுபமாவைச் சமராபிராமன் மணந்தான். அவள்பால் சமராபிராமனுக்குப் பூதிவிக்கிரமகேசரி பிறந்தான். ஆதலின் சமராபிராமன் முதல் ஆதித்தசோழன் மற்றும் பராந்தகனின் காலத்தவன் என்பது புலனாகிறது. சுமார் 875-950 வரை சமராபிராமன் வாழ்ந்தவன் எனலாம்.

**முதற் பராந்தகனும் இருக்குவேளிரும்**

முதற் பராந்தக சோழன் தனது 3ஆம் ஆட்சியாண்டில் கி.பி. 910இல் மதுரையை வென்றான். இவனோடு போரிட்டுத் தோற்ற பாண்டிய மன்னன் மூன்றாம் இராசசிம்மன் ஆவான். போரில் தோல்வியுற்ற பாண்டி மன்னன் இலங்கை மன்னன் ஐந்தாம் காசிபனிடம் படையுதவி வேண்டினான். ‘சக்கசேனாபதி’ என்பவன் தலைமையில் ஈழமன்னன் உதவிய துணைப்படையுடன் பாண்டியன் மீண்டும் பராந்தகனை எதிர்த்தான். ‘வெள்ளூரில்’ நடைபெற்ற பெரும்போரில் முதல் பராந்தக சோழன் வெற்றிவாகை சூடினான்.

பராந்தக சோழனுடைய படையெடுப்பில் சோழனுக்கு உதவியாகக் கலந்து கொண்டு பாண்டியனோடு போர் செய்த சிற்றரசர் இருவர். 1. கொடும்பாளூர் அரசன், 2. கீழைப் பழுவூர்ச் சிற்றரசன் பழுவேட்டரையர் கண்டன் அமுதன் (INS 231 of 1926) என்பவர் ஆவர். பராந்தக சோழனுடன் கொடும்பாளூர்ச் சிற்றரசனும் கலந்து கொண்டமையைப் பெரிய சின்னமனூர்ச் செப்பேட்டை அடிப்படையாகக் கொண்டு வரலாற்று அறிஞர்கள் உறுதி செய்துள்ளனர்.

இராசசிம்ம பாண்டியனுடைய சின்னமனூர்ச் செப்பேடுகள்.

> வானவன் மாதேவி என்னும் மலர்மடந்தை முன்பயந்த
> மீனவர்கோன் இராசசிங்கன் விகடவா டவனவனேய் அகிபதி

> ஆயிரந்தலையால் அரிதாகப் பொறுக்கின்ற மகிமண்டலப் பெரும்பொறை தன் மகாபுஜபலத்தால் தாங்கி புஜகநாயக தரணி நாரண ஹரணராஜித புஜபலனாய் உலப்பிமங்கலத்து எதிர்ந்த தெவ்வர் உடல் உகுத்த செந்நீர் நிலப்பெண்ணிற் கங்கராகம் என நிவப் பரணிதந்தும் மடைப்பகர்நீர் தஞ்சையர்கோன் தானைவரை நைப்பூரில் படைப்பரிசாரம் தந்து போகத்தண் பணை முழக்கியும் கொடும்பை மாநகர் நிறைந்த குரைகடல் பெருந்தானை இடும்பை உற்று இரியத்தான் இரணோதயம் மேற்கொண்டும் புனற்பொன்னி வடகரையில் பொழில் புடைசூழ் மதில் வஞ்சிக் கனற்பட விழித்து எதிர்ந்தவீரர் கவந்த மாடக் கண்சிவந்தும் சேவல் உயர் கொடிக்குமரன் எனச் சீறித் தென்தஞ்சை காவலனது கஜதுரக பதாதி சங்கம் களைந்து அவியப் பூம்புனல் நாவல்பதியில் ஆம்புரவிப் பலம்காட்டி விஜயத்துவஜம் விசும்பணவச் செங்கோல் திசைவிளிம்பு அணங்க குசைமாவும் கொலைக்குன்றமும் குருதி ஆரமும் கொணர்ந்தும் குலவர்த்தனர் அடிவணங்க மகேந்திரபோகம் அனுபவித்த விகட வாடவன்

என இராசசிம்மனைப் புகழ்கின்றன.

இப்பகுதியினால் 1. உலப்பிலிமங்கலத்தில் பெரும் போர் செய்தான். 2. தஞ்சை அரசனை நைப்பூரில் புறங்கண்டு வெற்றிமுரசு முழக்கினான். 3. கொடும்பாளூரில் நிறைந்துள்ள கடல்போன்ற சேனை துன்புற்று ஓடுமாறு 'இரணோதயம்' என்னும் தன் யானைமேல் ஏறினான். 4. ஆன்பொருநைக் கரையில் உள்ள வஞ்சிமாநகரில் கோபத்தோடு போரிட்ட பகைவரின் குறையுடல்கள் கூத்தாடும்படிச் செய்தான். 5. தஞ்சை மண்டல அரசனின் மூன்று வகைப் படைகளும் அழியும்படியாகத் திருவானைக் காவலில் தனது குதிரையினது வலிமையினை உலகத்துக்குக் காட்டினான், என்ற செய்திகள் புலனாகின்றன.

முதற்பராந்தகன் சேவூரில் இறுதி வெற்றி பெறுவதற்கு முன்பாக உலப்பிலிமங்கலம், கொடும்பாளூர், வஞ்சி, திருவானைக்கா முதலான இடங்களில் போர் செய்து பாண்டியன் வெற்றி பெற்றான். இறுதியில் சேவூரில் சோழன் வென்றான்.

கொடும்பாளூரில் ஒலிக்கின்ற கடல் போன்ற நிறைந்த சேனையைப் பாண்டியன் வென்றான். பாண்டியன் கொடும்பாளூரின் மேல் படையெடுத்தமைக்குக் கொடும் பாளூர்ச் சிற்றரசன் சோழனுக்கு உதவியாகப் போர் புரிந்தமையே காரணம் ஆகும்.

## ஆதித்தனின் தில்லைஸ்தானக் கல்வெட்டு

கடம்பமாதேவி என்பவள் திருநெய்த்தானத்து மாதேவற்கு ஒரு திருவிளக்கிற்காக நூறு ஆடுகளைத் தந்தாள் என்ற செய்தியினைக் கூறும் தில்லைத்தானக் கல்வெட்டுச் சில வரலாற்றுச் செய்திகளைக் கூறுகிறது. விக்கியண்ணன் என்பவன் செம்பியன் தமிழவேள் என்று சிறப்பிக்கப்பட்டமையையும், சேர சோழ அரசர் பெரு நட்புடன் விளக்கியமையையும் காட்டுகிறது. தொண்டை நாடு பரவின பல்யானைக் கோக்கண்டன் ஆன இராசகேசரி முதலாம் ஆதித்த சோழனும் சேர மன்னன் கோத்தாணு ரவியும் பெருநட்புடன் விளங்கினர். முதல் பராந்தக சோழனின் மனைவி கோக்கிழான் அடிகள் சேர அரசனின் மகள் என உதயேந்திரப் பட்டயங்கள் கூறுவதனை நோக்குங்கால் நட்புத் தொடர்வதற்காக இம்மணப் பிணைப்பு நேர்ந்ததோ என்னும் ஐயம் வருகிறது.

## விக்கியண்ணன் சிறப்பிக்கப்பட்டமை

தொண்டை நாடு பரவின முதலாம் ஆதித்தசோழனும் சேரமான் கோத்தாணு இரவியும் ஒன்று கூடி 'விக்கியண்ணன்' என்பவனைப் பாராட்டினர். அரசச் சிறப்புக்கள் பல தரப்பெற்றன. விக்கியண்ணனுக்குச் 'செம்பியன் தமிழவேள்' என்னும் குலப்பெயர் கொடுத் தனர். தவிசும், சாமரையும், சிவிகையும், திமிலையும், கோயிலும், போனகமும், களிற்றுநிரையும் கொடுத்தனர் எனத் தில்லைத்தானக் கல்வெட்டுக் கூறுகிறது. விக்கியண்ணன் சமகாலக் கொடும்பை வேளாகிய

சமராபிராமன் ஆகலாம். சமராபிராமன் என்னும் பெயருக்கு போர்களில் மனம் கவர்பவன் என்ற பொருள் உண்டாதலை நோக்க இப்பெயரும் பரதுர்க்கமர்த்தனனின் பெயர் போலச் சிறப்பால் நிலைத்த பெயரோ என்ற ஐயம் நேர்கிறது. 'செம்பியன் தமிழவேள்' என்று கொடுக்கப்பட்ட பெயர் விக்கியண்ணன் வேள் குலத்தவன் என்பதனை வெளிப்படையாகக் காட்டுகிறது.

**விக்கியண்ணனும் ஆதித்தனும்**

விக்கியண்ணன் பெரும் சிறப்பு உற்றமைக்கு இவன் முதல் ஆதித்தனுக்குப் போர்களில் பேருதவி புரிந்த பெருவீரனாகப் படையுடையவனாக இருந்தமை காரணம் எனலாம். இவன் படையுடன் கொங்குமண்டலம் அல்லது தொண்டை மண்டலப் போரில் முதல் ஆதித்தனுக்கு உதவியாக இருந்து போரிட்டு அவனுடைய வெற்றிக்குப் பாடுபட்டமை யினால் இச்சிறப்புப் பெற்றவன் ஆதல் வேண்டும் எனத் திரு. சதாசிவ பண்டாரத்தார் கூறுவர்.

விக்கியண்ணன் கொடும்பாளூர்ச் சிற்றரசன் ஆதல் ஐயத்திற்கு உரியது எனத் திரு. சாத்தியார் கூறியுள்ளார். எது எப்படியாயினும் கொடும்பாளூர்ச் சிற்றரசன் சமராபிராமன் ஆதித்தனுக்குத் துணையாகத் தொண்டை மண்டலப் போரில் கலந்து கொண்டமை உறுதியாகும்.

**மனைவியர்**

'அநுபமை' முதல் பராந்தகன் மகள். இவளைச் சோழன் சமராபிராமனுக்கு மணம் புரிவித்தான். இவள் வாயிலாகப் பூதிவிக்கிரமகேசரி சமராபிராமன் மகனாகத் தோன்றினான்.

சமராபிராமனைச் செம்பியன் தமிழவேளாகக் கொண்டால் கடம்பமாதேவியும் அவனுடைய மனைவியருள் ஒருத்தி எனலாம்.

குடுமியான்மலையில் திருமூலட்டானத்துப் பெருமானடிகளுக்கு 2 கழஞ்சு பொன் திருநொந்தா விளக்கு ஒன்றுக்குத் தரப்பெற்றது. இராசகேசரிவர்மனின் 20ஆவது ஆண்டுக்கு உரிய இக்கல்வெட்டினை முதலாம் ஆதித்தனின் 20ஆவது ஆண்டுக்குக் கி.பி. 891க்கு உரியதாகக் கொள்ளலாம். இக்கல்வெட்டுப் பெரும்பிடுகு முத்தரையரின் மனைவியும், முத்தரையர் தம்பிகளும் எருவக் கோமகளாருடைய தங்கையும், விக்கிரமகேசரியின் ஆச்சியும் ஆகிய ஒருத்தியினைப் பற்றிக் குறிப்பிடுகிறது. இக்கல்வெட்டில் கண்ட நங்கை விக்கிரமகேசரியின் தாய் எனப்படுதலின் கொடும்பாளூர் வேளிர் குலத்திற்கும் முத்தரையருக்கும் உரிய உறவு புலனாகும்.

சமராபிராமன் முதல் ஆதித்த சோழன், முதற் பராந்தகன் காலத்தைச் சேர்ந்தவன்.

**பூதிமாதேவடிகள்**

முதலாம் ஆதித்தசோழன் இரண்டாம் கிருட்டிணன் (873-913) மகள் இளங்கோப்பிச்சியை மணந்தான். அவள் பால் கன்னரதேவன் என்ற புதல்வன் பிறந்தான். கிருஷ்ணதேவன் என்ற பெயர் கன்னட மொழியில் கன்னரதேவன் என்று ஆகும். தம் பாட்டன் பெயர் இடப் பெற்றவன் இவன். முதல் பராந்தகனுடைய உடன் பிறந்தவன் ஆவான். இவன் முடிசூடாமைக்குக் காரணம் புலப்படவில்லை. இளமையில் இறந்தவனாகவோ அல்லது பராந்தகனின் தம்பியாகவோ இருத்தல் வேண்டும். தில்லைத்தானம் இராசகேசரியின் எட்டாமாண்டுக் கல்வெட்டு (கி.பி. 878) 'சோழப் பெருமான் அடிகள் மகனார் ஆதித்தன் கன்னரதேவன்' எனக் குறிப்பதாலும் (South Indian INS Vol. V No. 595. 38 of 1895) ஆதித்தனின் மகன் இவன் என்பது புலனாகும்.

**கன்னரதேவனின் வேளிர்குல மனைவி**

ஆதித்தசோழனின் மகனாகிய கன்னரதேவன் பூதிமாதேவடிகள் என்பவளை மணந்திருந்தான். '**கன்னர தேவர் தேவியார் பூதிமாதேவடிகள்**' என்ற கல்வெட்டுத் தொடரால் இவ்வுண்மை புலனாகும். திரு. பண்டாரத்தார் கொடும்பாளூரில் இருந்த குறுநில மன்னன் ஒருவனுடைய மகள் இவள் எனக் கூறுவர்.

**பூதிமாதேவடிகளின் கல்வெட்டுக்கள்**

1. மதிரைகொண்ட பரகேசரி ஆண்டு 6 - அல்லூர் - கி.பி. 913. (South Indian Inscription Vol. viii INS No. 684. A.R.E. 871 of 1903.)

2. பரகேசரி - யாண்டு 15 - அந்தநல்லூர் - 922. (South Indian Inscription Vol. viii INS No. 684. A.R.E. 371A of 1903.)

3. பரகேசரி - யாண்டு 23 - திருப்பாலத்துறை - 930. (South Indian Inscription Vol. viii INS No. 554. A.R.E. 252 of 1903.)

**கல்வெட்டிற் கண்ட செய்திகள்**

பூதிமாதேவடிகள் கி.பி. 913இல் ஈசானமங்கலத்துப் பருடையார் (மூலபருடையார் - தேவதான ஊர்ச்சபையார் திருக்கோயில் காரியங்களைக் கவனிக்க அமைக்கும் உட்சபையார்) இடம் இறைகாவலாக நிலம் விலை கொண்டாள் என அல்லூர்க் கல்வெட்டு அறிவிக்கிறது.

கி.பி. 922இல் கன்னரதேவர் தேவியார் பூதி மாதேவடிகள் அந்தவநல்லூர் திருவாலந்துறைப் பெரு மானடிகளுக்கு ஒரு திருநொந்தா விளக்கு எரிப்பதற்காக உறையூர்க் கூற்றத்தினைச் சார்ந்த நிலம் கொண்டு கல்லி வயக்கி (பதப்படுத்தி) எல்லை தெரித்து நல்கியமையை அந்தநல்லூர்க் கல்வெட்டு அறைகிறது.

கி.பி. 930இல் திருப்பராய்த்துறை மஹாதேவற்குத் தினந்தோறும் உழக்கு நெய்யால் ஒரு நொந்தா விளக்கு எரிப்பதற்காகத் தொண்ணூறு ஆடுகளைத் தந்தமையைத்

திருப்பாலத்துறைக் கல்வெட்டுக் கூறுகிறது.

**பூதிமாதேவடிகளின் தந்தை**

முதல் ஆதித்தனுக்கு இரண்டு மக்கள் உண்டு. ஒருவன் முதற் பராந்தகன். மற்றொருவன் கன்னரதேவன்.

முதலாம் ஆதித்த சோழனின் (871-907) எட்டாவது ஆண்டுக்கு (879) உரிய தில்லைத்தானக் கல்வெட்டு (ராசகேசரி. எட்டாம் ஆண்டு 380 of 1895) சோழப் பெருமானடிகள் ஆதித்தன் கன்னரதேவனைக் குறிப்பிடு கிறது. இவனுடைய மனைவி பூதிமாதேவடிகள் 913, 922, 930 ஆண்டுகளுக்கு உரிய கல்வெட்டுக்களில் குறிக்கப் படுகிறாள்.

பூதிமாதேவடிகள் கொடும்பாளூர்க் குலத்தினள். ஆதித்தன் காலக் கொடும்பாளூர் அரசன் சமராபிராமன் ஆவான். எனவே சமராபிராமனுடைய உடன் பிறந்த வளாகப் பரதுர்க்கமர்த்தனின் மகளாகப் பூதிமா தேவடிகளைக் கருதுதல் கூடும்.

முதல் ஆதித்தன் கால இருக்குவேள் பராந்தகன் மகளை அநுபமாவை மணந்தான். அவன் மகன் பூதிவிக்கிரமகேசரி எவ்வாறு பராந்தகனுடைய இறுதிக் காலத்தில் சோழர்க்கு அடங்கிய சிற்றரசனாக இருக்க முடியும்? வயது அடிப்படையில் எழும் ஐயத்தை இக் கல்வெட்டால் நீக்கலாம்.

கி.பி. 979இல் கன்னரதேவனுக்கு 20 வயது என வைத்துக்கொள்வோம். முதல் பராந்தகனை ஆதாரமின்றி இளையவனாக்கினாலும் (இளையவன் ஏன் பட்டமுறு கிறான்) கி.பி. 907இல் பட்டமேற்றபோது 26 வயதுடை யவன். இவனை மகளுடையவனாகக் கொண்டு, சுமார் 920இல் சமராபிராமனுக்கு மணம் செய்து கொடுத்ததாகக் கொள்வோம். 945இல் பூதிவிக்கிரமகேசரி முதற் பராந்தகனின் இறுதிக் காலத்திய சிற்றரசனாகிறான்.

## 2. பூதிவிக்கிரமகேசரி

"சமராபிராமன் அநுபமை என்ற இருவர்க்கும் மகனாகப் பிறந்தவன் பூதிவிக்கிரமகேசரி ஆவான். இவன் வீரபாண்டியனையும், பல்லவரையும், வஞ்சி வேளிரையும் வென்றவன். இவன் கொடும்பாளூர் அரண்மனையில் தங்கி ஆட்சி புரிந்தவன்.

கற்றளி வரகுணா என்னும் இரண்டு மனைவியரைத் திருமணம் செய்து கொண்டான். கற்றளியின் வாயிலாகப் பராந்தகன், ஆதித்தியவர்மன் என்ற இரண்டு மக்களைப் பெற்றெடுத்தான்.

இவ்வரசன் காளாமுக மதத்தினை ஆதரித்தான். மல்லிகார்ச்சுன முனிவருக்கு மடம் கட்டித் தந்து பதினோறு சிற்றூர்களைக் கொடுத்தான்.

இவ்வரசன் தன்பேராலும் தன் மனைவியர் இருவர் பேராலுமாக மூன்று விமானங்களை எழுப்பினான்.

பூதிவிக்கிரமகேசரி புலவர்களுக்குக் கற்பகத் தருவாக இருந்தான். அரசனின் கைகளாகிய தாமரை மலர்களுக்குத் தண் மதியாக இருந்தார். மண்மகளுக்கு, மலர்மகளுக்கு, புகழ்மகளுக்குத் தலைவனாகப் பூ பரிபாலனம் செய்தவன்.

இவன் காலத்தில் - கூர்மை மாதரின் கண்களிலேயும் - நிலையின்மை அவர்களுடைய இளமையிலேயும் - கருமை அவருடைய கூந்தலிலேயும் - நெருக்கம் அவருடைய முலையிலேயும் மட்டும்தான் இருந்தது.

பல்லவர் சேனையின் இரத்தம் வழிந்ததனால் காவிரியின் நீர் செந்நீராகியது; இந்த வீரன் போரில் வீர பாண்டியனை வென்றான்; வஞ்சிவேளிரைக் கொன்றான்" - கொடும்பாளூர்க் கல்வெட்டு.

பூதிவிக்கிரமகேசரி முதற்பராந்தகனுடைய ஆட்சி யிறுதிப்பகுதி தொடங்கி இரண்டாம் பராந்தகன் கால

இறுதிவரை வாழ்ந்த கொடும்பாளூர்ச் சிற்றரசன் ஆவான்.

கொடும்பாளூர்க் கல்வெட்டு விக்கிரமகேசரியின் வெற்றிகளாகக் குறிக்கும் மூன்று போர் நிகழ்ச்சிகள் 1. பல்லவனை வென்றமை, 2. வீரபாண்டியனை வென்றமை, 3. வஞ்சிவேளைக் கொன்றமை என்பவை வரிசை முறையில் போர் நிகழ்ச்சிகளை நோக்குவோம்.

**பல்லவ வெற்றி**

**கே. சுப்பிரமணிய ஐயர் கருத்தும் தடைகளும்**

"கொடும்பாளூர்க் கல்வெட்டுப் பூதிவிக்கிரமகேசரி பல்லவனோடு நிகழ்த்திய போர்களால் 'காவிரிநீர் செந்நீராக' ஆகியதாகக் கூறுகிறது. தொண்டைநாடு பரவின முதலாம் ஆதித்தசோழன் கி.பி. 980ஐ ஒட்டிப் பல்லவ மன்னன் அபராசிதனைக் கொன்றான். அப்போரில் சோழ அரசனுக்குத் துணையாகவோ அல்லது அதற்குமுன் சுதந்திரமாகவோ பூதிவிக்கிரமகேசரி போர் செய்தான் எனலாம். பூதிவிக்கிரமகேசரி, ஆதித்தனின் காலத்துக்குப் பின்பு வலிமை படைத்த சுயேச்சையான பல்லவர் இல்லாமையால் பிற்பட்டவனாக இயலாது."

இக்கருத்துப் பூதிவிக்கிரமகேசரி முதலாம் ஆதித்தன் காலத்தைச் சேர்ந்தவன் என்று சொல்பவர்களுக்குப் பெரிதும் ஆதாரமாக அமைந்த கருத்தாகும். பல்லவன் வலிமை படைத்தவனாக இல்லை. எனவே ஆதித்தன் காலத்துக்குப் பிற்பட்டவன் அல்லன்" என்ற கருத்து ஆழ்ந்து நோக்கற்கு உரிய கருத்தாகும். 'பல்லவனை' என்றுதான் கல்வெட்டுக் கூறுகிறதே தவிர அவன் சிற்றரசு நிலையினனா? பேரரசனா? என்ற விவரங்களைக் கல்வெட்டுப் பேசவில்லை. "பல்லவ வெற்றி ஆதித்தனுக்குப் பின்னர் முடியாதது; எனவே இவன் ஆதித்தன் காலம்" என்று அமையக்கூடிய கருத்து இது. எழுத்தியல் ஆய்வுகளின் அடிப்படையில் (Palaeographical Considerations) "பூதிவிக்கிரம

*கேசரி இராசகேசரி கண்டராதித்தன் (950-957) காலத்துக்கு முற்பட்டவன் அல்லன்" என உறுதி செய்யலாம்.* (The Cholas - Part I, page 189) *எனவே பல்லவன் அபராசிதனைப் பூதிவிக்கிரமகேசரி வெல்லவில்லை எனத் துணியலாம்.*

**வெல்லப்பட்ட பல்லவன்**

*அபராசிதவர்மன் ஆட்சியோடு பல்லவர் மரபு முற்றுப் பெற்றுவிடவில்லை. நிருபதுங்கவர்மனின் உடன் பிறந்தவனாகக் கருதப்படும்.* (Pallavas of Kanchi - R. Gopalan p.144) *கம்பவர்மன், மேலைச்சேரியில் கல்வெட்டுடைய சந்திராதித்யன்* (South Indian Inscriptions Vol. XII Pallavas No.115) *காத்திறைக் கல்வெட்டுக்கள் காட்டும் விஜயநரசிம்ம வர்மன், விஜயஈசுவரவர்மன் முதலியவர்கள் பல்லவ அரச மரபினர் என வரலாற்று அறிஞர் உறுதி செய்வர்.* (Pallavas of Kanchi, p. 143-45. *பல்லவர் வரலாறு, டாக்டர் மா.ரா. ப.200*)

*கி.பி. 13ஆம் நூற்றாண்டினன் 'பேணு செந்தமிழ் வாழப் பிறந்த காடவர்கோன் கோப்பெருஞ்சிங்கன்.' இவன் முன்னோரர் எழுவரைக் கல்வெட்டுக்கள் மிக விளக்கமாகக் காட்டுகின்றன.* (South Indian Inscriptions Vol. XII Ins. No. 263 and 264. *கோப்பெருஞ்சிங்கன்* - S.R. *பாலசுப்பிரமணியம்) இவை சோழப் பிற்காலம் வரை பல்லவ மரபினர் இருந்ததனைக் காட்டும் சான்றுகளாகும்.*

*முதல் பராந்தக சோழனின் மகள் அநுபமாவை மணந்து அவள் வாயிலாகச் சமராபிராமன் பெற்றெடுத்த மகன் பூதிவிக்கிரமகேசரி ஆவான். இவன் பல்லவனை வென்றதாகக் கல்வெட்டுக் கூறுகிறது. முதற் பராந்தகன் காலப் பிற்பகுதி முதல் இரண்டாம் பராந்தகன் கால இடைப்பகுதிவரை அமைந்த குறுகிய கால இடையீட்டுப் பகுதியில் (945-960) இவ்வெற்றி அமைந்தது ஆதல் வேண்டும். பல்லவன் அபராசிதனாக இருந்தால் பூதி வெளிப்படையாகப் பெயரைக் குறித்திருப்பான். பெயரைக்*

குறிப்பிடாமையினாலேயே பூதியினால் வெல்லப்பெற்ற பல்லவ மன்னன் பல்லவ மரபினைச் சேர்ந்தவன் - சிற்றரசன் என்பது புலனாகும்.

**பல்லவனா, வல்லபனா?**

பூதிவிக்கிரமகேசரியின் வெற்றிகளைப் பற்றித் தம் சோழர் வரலாற்றில் திருநீலகண்ட சாத்திரியார் எழுதுவதன் கருத்துப் பின்வருமாறு :

"வஞ்சிவேளிரைப் பூதிவிக்கிரமகேசரி வென்ற சிறு வெற்றியினை நாம் கவனியாதிருக்கலாம்; பூதிவிக்கிரமகேசரி காவிரியின் கரையில் பல்லவனுடன் எவ்வாறு போரிட்டான் என்பதைக் கண்டறிதல் அரியது ஆகும். விக்கிரமகேசரியின் கொடும்பாளூர்க் கல்வெட்டின் காலம் மிக முற்பட்டது எனக்கூற இதுவே நிரூபணம் ஆகிறது. ஆனால் இக் கல்வெட்டின் காலத்தை எழுத்தியல் ஆய்வுகள் அடிப் படையில் கண்டராதித்தன் காலத்துக்கு முற்பட்டதாகக் காட்ட முடியவில்லை. பல்லவன் என்பதனை வல்லபன் என இப்போரில் கொண்டு, இராட்டிரகூடக்கிருட்டினன் இராமேசுவரம் வரை சோணாட்டில் புகுந்து படை நடத்திய சமயத்தில் பூதிவிக்கிரமகேசரி மிக முக்கிய இடம் வகித்தான் எனக் கொள்ளலாம்." - The Cholas - Part I 188-9

திரு. கே.என். சாத்திரியார் கருத்தை நோக்குவோம். மூன்றாம் கிருட்டிணதேவன் கி.பி. 955ஐ ஒட்டித் தொண்டை நாட்டையும், திருமுனைப்பாடி நாட்டையும் கைப்பற்றினான். சோழ இராச்சியம் பரப்பில் சுருங்கியது.

மூன்றாம் கிருட்டிணதேவனைச் சில கல்வெட்டுக்கள் 'கச்சியும் தஞ்சையும் கொண்ட கன்னரதேவன்' எனக் கூறுகின்றன. (S.I.I. Vol. VI 362, 364 and 374)

சூதிப்பட்டயம் "பூதுகன் இராஜாதித்யனைக் கொன்றான். பின் தஞ்சையையும், நாலகோடேயையும் மற்றும் பல கோட்டைகளையும் தாக்கினான். இவ்-

விடங்களில் இருந்து கைப்பற்றிய குதிரைகளையும், யானை களையும் அளவிலாச் செல்வத்தையும் கிருஷ்ணனிடம் ஒப்படைத்தான்" எனக் கூறுகிறது. (E.I. Vol. III 177-8 மார சிம்மனின் கூடலூர்ப் பட்டயம் - 1921 pp.11, 20)

மூன்றாம் கிருட்டிணனின் கார்காடுப் பட்டயம், 'சோழ அரசாட்சியைத் தன் வழியினருக்கு நல்கித் திக்விஜயம் செய்து கிருட்டிணதேவன் இராமேஸ்வரத்தில் வெற்றித்தூண் நிறுவியதாகக்' கூறுகிறது. (Epigrapica Indica Vol. VII p.no. 280)

மூன்றாம் கிருட்டிண தேவ்னின் இவ்வெற்றியைப் பற்றிக் கூறும் உரைகள் புனைந்துரைகள் எனத் திரு. சதாசிவ பண்டாரத்தார் கூறுவர் (சோழர் வரலாறு பக். 55-6). இவற்றை வெற்றுத் தற்பெருமை எனவோ அல்லது வெற்றி மிக்க படையெடுப்புக்கு உரிய சான்றுகள் எனவோ கூறி விடுதல் இயலாது என்று திருநீலகண்ட சாத்திரியார் கூறி யுள்ளார். (The Cholas Vol. I page 161-2)

இராட்டிரகூடப் போரில் பல்லவனை அல்லது வல்ல பனை வென்று பெற்ற வெற்றியையே கொடும்பாளூர்க் கல்வெட்டு மேற்கண்டவாறு குறிப்பதாகக் கொள்ளலாம்.

**வீரபாண்டியனை வென்றமை**

பூதிவிக்கிரமகேசரியைப் பலவேறு காலங்களுக்கு உரியவனாக காட்டிய ஆய்வாளர்கள் சில வீரபாண்டியரைச் சுட்டிக் காட்டுகின்றனர்.

1. திரு. ஹீராசு பாதிரியார் பூதிவிக்கிரமகேசரி ஏழாம் நூற்றாண்டின் பிற்பகுதியினன் என்றார். ஆயின் பூதி விக்கிரமகேசரியால் வெல்லப்பட்ட வீரபாண்டியன் யார்? என அடையாளம் காட்டவில்லை.

2. திரு. ஹீராசு கொள்கைகளைப் பேரளவு தழுவிப் பூதியின் காலத்தை ஆராய்ந்த டாக்டர் மு. ஆரோக்கியசாமி,

பூதிவிக்கிரமகேசரியால் வெல்லப்பட்ட வீரபாண்டியன் அரிகேசரிவர்மன் (670-710) என்பர். (The Early History of the Vellar Basin p. 86) அரிகேசரிவர்மன் வீரபாண்டியன் என்றும் பட்டமுடையவனா என்பது புலப்படவில்லை. (The role of feuddatories in the Pallava History, page. 78)

3. பூதிவிக்கிரமகேசரி ஆதித்தன் முதற்பராந்தகன் காலத்தவன் (Cinca Ad. 898-913) என்பர் திரு. கே.வி. சுப்பிரமணிய ஐயர்.

"திருப்புடை மருதூரில் உள்ள சடையமாறனின் 2+18ஆவது ஆண்டுக்குரிய ஒரு கல்வெட்டு வீரபாண்டிய னின் அலுவலனைக் குறிக்கிறது. இந்த வீரபாண்டியன் மூன்றாம் இராசசிம்மன் காலத்தவனாகவோ அல்லது முன்னோன் ஆகவோ இருக்கலாம். 9ஆம் நூற்றாண்டின் இறுதி அல்லது பத்தாம் நூற்றாண்டுத் தொடக்கத்தில் இவ் வெற்றி அமைந்திருந்ததாகத் தோன்றுகிறது" என்று கூறியுள்ளார்.

திரு. கே.வி. சுப்பிரமணிய ஐயர் அவர்கள் வீரபாண்டியன் இருவர் எனக் காட்டுகிறார்.

முதலாமவன் பூதிவிக்கிரமகேசரியால் வெல்லப் பட்டவன். பாண்டியர் குலத்தின் நேர்வழியினன் அல்லன். கிளைவழியினன் எனப் பெறுகிறான்.

மற்றொரு வீரபாண்டியன் இரண்டாம் பராந்தகன் காலத்தவன். பாண்டியரின் நேர்க்கால் வழியினனா அல்லது கிளைக்கால் வழியினனா என்பது புலனாகவில்லை என்பர்.

இக்கருத்தைச் சிந்திப்போம்.

திருநெல்வேலி மாவட்டம் அம்பாசமுத்திரம் வட்டம் திருப்புடைமருதூரில் உள்ள சடையமாறனின் 2+18(20) ஆவது ஆண்டுக் கல்வெட்டுத் 'திருபடுமருதில்', 'பாண்டி மார்த்தாண்ட வளநாடு,' 'வீரபாண்டியனின் பணிமகள்'

பற்றிய செய்திகளைத் தருகிறது. (122 of 1905) இக்கல்வெட்டு எவருடையது எனக் கணிக்கவியலவில்லை. (unidentified - No. 126. Tinnelvely Dist. A Topographical list of the Ins. of the M.P.)

122 of 1909தைப் பற்றித் திரு. கே.வி. சுப்பிரமணிய ஐயர் பின்வருமாறு எழுதியுள்ளார்.

In all likelihood Virapandia must have succeeded Rajasimha. In this connection it is worth nothing that in an unpublished inserption of Tiruppudaimarudur (122 of 1905) dated in the 2+18th year of the reign of Sadayamarar, the title by which Rajasimha appears to have been known reference is made to Virapandia who must be none other than his son.

- (Travancore Archaeological se. Vol III part I page 68)

இவர்தம் கருத்தை அடிப்படையாகக் கொண்டு திருமிகு. சதாசிவ பண்டாரத்தார் "கி.பி. 946-966 வரை ஆண்ட வீரபாண்டியனே திருப்புடைமருதூர்க் கல்வெட்டுக் கூறும் வீரபாண்டியன். இவன் சோழாந்தகன், பாண்டி மார்த்தாண்டன் என்னும் பெயர்களை உடையவன். மூன்றாம் இராசசிம்மனின் மகன்" என உய்த்துணரப் படுபவன் எனப் பாண்டியர் வரலாற்றில் கூறுவர். எனவே இரண்டாம் பராந்தகன் காலத்தில் மட்டும் வீரபாண்டியன் என்ற அரசன் இருந்தமை புலப்படுகிறது.

4. பூதிவிக்கிரமகேசரி இரண்டாம் பராந்தகன் காலத்தவன் என்று திரு. வெங்கய்யா, நீலகண்ட சாத்திரியார் முதலியோர் கூறுவர். அவர் காட்டும் வீரபாண்டிய வெற்றி ஏற்புடைத்தாகக் காணப்படுகிறது. அதனை விளக்குவோம்.

**சோழன் தலைகொண்ட வீரபாண்டியன்**

கி.பி. 957 - 970 வரை ஆண்ட சோழ மன்னன் இரண்டாம் பராந்தகனாகிய சுந்தரசோழன். இவன் காலப் பாண்டிய மன்னன் மூன்றாம் இராஜசிம்மன் மகன் வீரபாண்டியன் 946-966வரை ஆண்டவன் இக்காலத்துக் கொடும்பாளூர் மன்னன் பூதிவிக்கிரமகேசரி ஆவான்.

வீரபாண்டியன் தன்னுடைய ஆட்சியாண்டின் முற்பகுதியில் ஏதோ ஒரு சோழ அரச குடும்பத்தின் தலையைக் கொய்து கொன்றான். இப்போர் இவனுடைய ஆறாம் ஆட்சியாண்டில் குறிக்கப்பெறுகிறது. இவன் தன்னைக் கல்வெட்டுக்களில் **சோழன் தலைகொண்ட வீரபாண்டியன்** எனக் குறித்துக் கொண்டான்.

**பாண்டியனைச் சுரமிறக்கின பெருமாள்**

இரண்டாம் பராந்தக சோழர், பாண்டியன் சோழ அரசனைக் கொன்றதனால் பெரும் கோபம் கொண்டான். பாண்டிய நாட்டின் மீது படை யெடுத்தான் ஆனைமங்கலச் செப்பேடுகளால் சேவூரில் பெரும்போர் நடந்தது என அறியலாம். பாண்டியன் தோற்றான். புறமுதுகிட்டு ஒளிந்தான். பாண்டியனை வென்றமையால், 'மதுரை கொண்ட இராசகேசரிவர்மன்' 'பாண்டியனைச் சுரமிறக்கின பெருமாள்' 'மதுராந்தகன்' என்ற சிறப்புப் பெயர்களை இரண்டாம் பராந்தகனாகிய சுந்தரசோழன் உடையவன் ஆனான். இப்போர் 962இல் நடந்தது.

**பாண்டியன் தலைகொண்ட மன்னர்கள்**

சோழ குலத்தவராகிய இரண்டாம் ஆதித்தசோழனும், பார்த்திபேந்திரவருமனும் வீரபாண்டியன் தலைகொண்ட தாகக் கல்வெட்டுக்களில் கூறப்பெறுகின்றனர்.

இராசகேசரி இரண்டாம் பராந்தகனுடைய மகன் இரண்டாம் ஆதித்த கரிகாலன் அவான். குடந்தைக் கீழ்க்கோட்டத்தில் உள்ள 3, 4, 5ஆம் ஆட்சியாண்டுக்குரிய கல்வெட்டுக்களும், திருவிடைமருதூரில் உள்ள நான்காம் ஆட்சியாண்டுக்குரிய கல்வெட்டுக்களும் இவனைப் 'பாண்டியன் தலைகொண்ட பரகேசரிவர்மன்' என்று குறிப்பிடுகின்றன. ஆதித்தனால் தலையை இழந்த பாண்டிய மன்னன் வீரபாண்டியன் ஆவான். இதனை உய்யக் கொண்டான் திருமலை முதலான இடங்களில் காணப்படும்

'வீரபாண்டியன் தலைகொண்ட கோப்பரகேசரி பருமற்கு' என்ற தொடர் உறுதி செய்கிறது.

தொண்டைமண்டலத்தில் அதிக அளவில் கல்வெட்டில் குறிக்கப்பெறும் சோழர் குல அரசன் பார்த்தி வேந்திரவர்மன் வீரபாண்டியனை வென்றுள்ளான். இவ்வரசனை, 'வீரபாண்டியனைத் தலைகொண்ட பார்த்தி வேந்திரபருமன்' என உத்திரமேரூர் வைகுந்தப்பெருமாள் கோவிலில் உள்ள நான்காவது, ஐந்தாவது ஆண்டுக் கல்வெட்டுக்கள் கூறுகின்றன.

கொடும்பாளூர் பூதிவிக்கிரமகேசரியின் கல்வெட்டுப் பூதிவிக்கிரமகேசரி வீரபாண்டியனை வென்றான் எனக் கூறுகிறது.

**வீரபாண்டியனோடு போர்**

கி.பி. 962இல் சேவூர்ப் போரில் தோற்று ஓடிய வீரபாண்டியன் மதுரையில் 965-6இல் மீண்டும் ஆட்சியைத் தொடங்கினான். எனவே இரண்டாம் பராந்தகன் மீண்டும் படையெடுத்தான். சோழ அரசனுக்காக, இரண்டாம் ஆதித்தன், பார்த்திபேந்திரவருமன், சிற்றரசன் பூதிவிக்கிரம கேசரி ஆகியோர் பாண்டியனோடு போரிட்டனர். கி.பி. 966இல் வீரபாண்டியனைக் கொன்றனர். எனவேதான் மூவரும் வீரபாண்டியனை வென்றதாகக் கூறிக் கொள்கின்றனர்.

இரண்டாம் பராந்தகன் காலத்தில் கி.பி. 966இல் சோழனுக்காகப் பூதிவிக்கிரமகேசரி வீரபாண்டியனோடு போரிட்டுப் பெற்ற வெற்றியே கொடும்பாளூர்க் கல்வெட்டில் கண்ட வீரபாண்டிய வெற்றி என்பது உறுதி.

**வஞ்சிவேளிரை வென்றமை**

வஞ்சிவேளிரைப் பூதிவிக்கிரமகேசரி வென்றமை மிகச்சிறு வெற்றியாதல் கூடும். பல்லவ வெற்றியும் வஞ்சி

வேளிரை வென்றமையும் இவ்வரசர்கள் சிற்றரசு நிலையில் தம்மைவிட மேனிலை அடைதல் கூடாது என்னும் நோக்கில் அமைந்த போர்களில் பெற்ற வெற்றிகளாக வரலாற்று அறிஞர் கருதுகின்றனர்.

**வரகுணப் பெருமானார் (வரகுணை)**

1. இலால்குடியில் உள்ள இராஜகேசரிவர்மனின் பதின் மூன்றாவது ஆண்டுக்கு உரிய கல்வெட்டு. (A.R.E. Ins. No. 250 of 1931. Epigrapica Indica Vol. XX Page 53.)

2. தில்லைத்தானத்தில் உள்ள இராசகேசரியின் பதின்மூன்றாவது ஆண்டுக்குரிய கல்வெட்டு (South Indian Inscriptions Vol. No. III Ins. No. 113, A.R.E. 287 of 1911.)

3. திருப்பாலத்துறையில் உள்ள இராசகேசரிவர்மனின் ஆண்டு அறியப்படாத கல்வெட்டு. (South Indian Inscriptions Vol. No. VIII Ins. No. 568, A.R.E. 248 of 1903.)

4. தில்லைஸ்தானத்தில் உள்ள பரகேசரியின் மூன்றாவது ஆண்டுக்கு உரிய கல்வெட்டு (South Indian Inscriptions Vol. No. III No. 127, A.R.E. 277 of 1911.)

**இலால்குடி இராசகேசரிக் கல்வெட்டு**

இக்கல்வெட்டு நங்கை வரகுணப் பெருமானார் என்பவளைக் குறிப்பிடுகிறது. இவ்வரகுணப் பெருமானார் சோழ அரசன் ஒருவனுடைய சகோதரி என்றும் கல்வெட்டு உணர்த்துகிறது. **'சோழப் பெருமானடிகள் திருவுடைப் பிறந்தார் நங்கை வரகுணப் பெருமானார்'** என்று இலால்குடிக் கல்வெட்டில் இவள் குறிப்பிடப்படுகிறாள். இவள் கொடும்பாளூர்ப் பூதிவிக்கிரமகேசரியின் மனைவியாதல் உறுதி. இக்கல்வெட்டின் காலம் பற்றிக் காண்போம்.

**கே.வி. சுப்பிரமணிய ஐயர் கருத்து**

இலால்குடி பதின்மூன்றாவது ஆண்டுக் கல்வெட்டில் குறிப்பிடப்படும் இராசகேசரி முதல் ஆதித்தசோழன் (871-907) ஆவான். இந்தக் கல்வெட்டு இவ்வரசனுடைய 13ஆவது ஆண்டுக்குக் கி.பி. 833-834க்கு உரியதாகும். இவ் வரகுணப் பெருமானார் பராந்தக இளங்கோவேள் என்றும், தென்னவன் இளங்கோவேளார் என்றும் கூறப் படும் பூதிவிக்கிரமகேசரியின் மனைவியாகிய வரகுணையே ஆவாள் என்று குறித்துள்ளார். "பூதிவிக்கிரமகேசரி முதல் ஆதித்தன் காலத்தவன் என்னும் கருத்துடையவர் இவர். ஆதலின் முதல் ஆதித்தசோழன் காலத்தது" என்பர். ஆனால் பூதி விக்கிரமகேசரி இரண்டாம் பராந்தகன் காலத்தவன் ஆவான்.

**நீலகண்ட சாத்திரியார் கருத்து**

முதல் ஆதித்தன் காலத்தது இக்கல்வெட்டு என்று (Epigrapica Indica Vol. XX Page 47, 48) கே.வி. சுப்பிரமணிய ஐயர் கூறுகிறார். இக்கல்வெட்டில் கண்ட வரகுணப் பெரு மானாரை வரகுணை என்று ஒப்புக் கொள்கிறார். ஆனால் இவர் கொடும்பாளூர்க் கல்வெட்டில் கண்ட பூதிவிக்கிரம கேசரியின் காலத்தை நிர்ணயிப்பதில் உள்ள கருத்துச் சிக்கல்களையும், தடைகளையும் ஆராயவில்லை என்று நீலகண்ட சாத்திரியார் கூறுகிறார். (The Cholas Vol. I. page 188 footnote).

**கல்வெட்டின் காலம்**

இக்கல்வெட்டில் குறிக்கப்படுகின்ற இராசகேசரி இரண்டாம் பராந்தகன் ஆன சுந்தரசோழன் (957-970) எனலாம். கல்வெட்டின் காலம் கி.பி. 970 என்று கொள்ள இயல்கிறது.

**தில்லைத்தான இராசகேசரிக் கல்வெட்டு**

பராந்தக இளங்கோவேளார் மனைவி வரகுணப் பெருமானார் ஒரு நொந்தாவிளக்குக்காக 25 கழஞ்சு பொன் தந்தமையைக் குறிக்கும் இக்கல்வெட்டின் காலம் பற்றிய கருத்துக்கள்.

**எச். கிருட்டிண சாத்திரியார்**

மதுராந்தக இருக்குவேள் என்னும் வேறு பெயரையுடைய பூதிவிக்கிரமகேசரியின் கொடும்பைக் கல்வெட்டில் கண்ட மனைவி வரகுணை, வரகுணப் பெருமானார் ஆவர். பராந்தக இளங்கோவேள் என்று இக்கல்வெட்டுக் குறிப்பது மதுராந்தக இருக்குவேளையே ஆகலாம்.

திரு. வெங்கய்யா மதுராந்தக இருக்குவேளை இரண்டாம் ஆதித்த கரிகாலனின் காலச் சிற்றரசன் என்று சொல்வர். எழுத்தியல் அமைப்பு இக்கல்வெட்டிற்குச் சிறிது முற்பட்ட காலத்தை அளிக்கிறது. (The Paleaography suggests a much earlier period for the Inscription) என இராவ்பகதூர் எச். கிருட்டிண சாத்திரியார் (South Indian Inscriptions Vol. No. III No. 123 ஆங்கில முன்னுரை) கூறியுள்ளார்.

**நீலகண்ட சாத்திரியார்**

கிருட்டிண சாத்திரியார் இக்கல்வெட்டைக் கண்டராதித்தன் (950-57) காலத்தைச் சேர்ந்தது என்பார். திரு. வெங்கய்யா பூதிவிக்கிரமகேசரியை இரண்டாம் பராந்தகனின் காலத்தவன் என்பர். எழுத்தியல் நோக்கில் பூதிவிக்கிரமகேசரி இரண்டாம் ஆதித்யன் காலத்திற்கு முற்பட்டவன் என்று கருதுகிறார். நான் வெங்கய்யாவின் கருத்துச் சரியானது எனக் கருதுகிறேன். கண்டராதித்தனுக்கும் இரண்டாம் ஆதித்தனுக்கும் உள்ள கால இடையீடு மிகக் குறைவாக இருக்கும் பட்சத்தில் எழுத்தியல் அடிப்படையில் அமைந்த காலக்கணக்கீடு பெரிதும்

ஒப்புக்கொள்வதற்கு உரியதன்று. (can be harly conclusive) (The Cholas Part I Page 187 FN.) என்கிறார் நீலகண்ட சாத்திரியார்.

**கல்வெட்டின் காலம்**

இக்கல்வெட்டு இராசகேசரியின் 13ஆவது ஆண்டுக்கு உரியது. இராசகேசரி கண்டராதித்தன் 950 முதல் 957 வரை 8 ஆண்டுகளே ஆண்டவன். 13ஆவது ஆண்டுக் கல்வெட்டு எவ்வாறு இவனுக்கு இருக்க முடியும்?

இராசகேசரி இரண்டாம் பராந்தகனாகிய சுந்தர சோழன் (957-970) 14 ஆண்டுகள் வாழ்ந்தவன். இவன் காலத்திற்கே இந்தக் கல்வெட்டு உரியது ஆதல் வேண்டும். இவ்வாறு கொண்டால் இக்கல்வெட்டுக் கி.பி. 969-70க்கு உரியதாக ஆகும்.

**திருப்பாலத்துறை இராசகேசரிக் கல்வெட்டு**

இராசகேசரியின் ஆண்டு அறியப்படாத இக்கல்வெட்டு பராந்தக இளங்கோவேளார் தேவியார் வரகுணப் பெருமானார் திருநொந்தா விளக்குக்குத் தரப்பட்ட கொடையைக் காட்டுகிறது. இக் கல்வெட்டும் இரண்டாம் பராந்தகன் காலத்திற்கே உரியது எனலாம்.

**தில்லைத்தானப் பரகேசரிக் கல்வெட்டு**

வரகுணப் பெருமானார் விளக்குக்கு வைத்த காற்செய் பற்றிக் குறிப்பிடுகிறது. இதன் காலம் பற்றிய அறிஞர் எச். கிருட்டிண சாத்திரியார் கருத்துப் பின்வருமாறு:

இராசகேசரிவர்மன் கண்டராதித்தனின் 13ஆவது ஆண்டுக் கல்வெட்டில் குறிப்பிடப்பட்ட பராந்தக இளங் கோவேளின் மனைவி ஆவாள். இக்கல்வெட்டின் காலம் கணிப்பதில் சிறிது கடினம் தென்படுகிறது. கண்டராதித் தனுக்கும் இராசராசனுக்கும் இடைப்பட்ட 18 ஆண்டுக் கால இடைவெளியில் அரிஞ்சயன், சுந்தரசோழ பராந்தகன், ஆதித்த கரிகாலன், உத்தமசோழன் என்னும் நான்கு அரசர்

கள் ஆட்சி செய்துள்ளனர். ஆதித்த கரிகாலனும் உத்தம சோழனும் பரகேசரிப் பட்டம் பூண்ட அரசர்கள். இக் கல்வெட்டு உத்தமசோழனுக்கு உரியது ஆகலாம் என்பர்.

நீலகண்ட சாத்திரியாரும் கல்வெட்டு ஆண்டு அறிக்கைகளும் இக்கல்வெட்டுப் பரகேசரியின் 23ஆவது ஆண்டுக்கு உரியது என்று கூறுகின்றன. ஆனால் கல்வெட்டுப் பரகேசரியின் 3ஆவது ஆண்டுக்கே உரியது ஆகும் என்பதனை S.I.I. Vol. III No. 127இன் கல்வெட்டு வாசகம் உறுதி செய்கிறது. (The Cholas Part I)

**கல்வெட்டின் காலம்**

வரகுணப் பெருமானார் இராசகேசரி இரண்டாம் பராந்தகனின் 13ஆம் ஆண்டில் கி.பி. 1070இல் விளக்குக்குக் கொடை தந்தார். அதனை இக்கல்வெட்டுக் குறிக்கிறது. இக்கல்வெட்டு இரண்டாம் பராந்தகனுடைய 3ஆவது ஆண்டுக்குக் கி.பி. 1060க்கு உரியது ஆகும்.

**கல்வெட்டுக்களால் அறியப்படும் செய்திகள்**

சோழப் பெருமானடிகளின் திருவுடைப் பிறந்தாரான நங்கை வரகுணப்பெருமனார் 'மணல்கல்' சபையினரிடம் திருவிளக்குக்காக 30 கழஞ்சு பொன் தந்துள்ளாள்.

இராசகேசரியின் 13ஆவது ஆண்டில் பராந்தக இளங்கோவேளின் தேவியாகிய வரகுணப் பெருமானார் நொந்தாவிளக்கு ஒன்றுக்காக 25 கழஞ்சு பொன் தந்துள்ளாள். இப்பொன்னால் நிலம் வாங்கப்பட்டதாகத் தில்லைத்தானக் கல்வெட்டுக் கூறுகிறது.

இராசகேசரிவர்மனுடைய திருப்பாலத்துறைக் கல் வெட்டு இளங்கோவேளார் தேவியார் திருவிளக்கிற்காகக் கொடை தந்ததாகக் கூறுகிறது. பரகேசரிவர்மன் தில்லைத் தானக் கல்வெட்டு வரகுணப் பெருமனார் விளக்குக்கு வைத்த காற்செய்யை எல்லை கிளந்ததைக் கூறுகிறது.

**கற்றளிப் பிராட்டியார் (கற்றளி)**

திருப்பாலத்துறை இராசகேசரிவர்மனின் ஆட்சி யாண்டு அறியப்படாத கல்வெட்டு ஒன்றில் கற்றளிப் பிராட்டியார் குறிப்பிடப்படுகிறாள். 'தென்னவன் இளங்கோவேள் ஆன மறவன் பூதி' என்பவனுடைய மனைவி' இவள் என்று இக்கல்வெட்டு கூறுகிறது.

'தென்னவன் இளங்கோவேளாயின மறவன் பூதி' என்பது பூதிவிக்கிரமகேசரியின் வேறு பெயர்களில் ஒன்றாகும். பூதிவிக்கிரமகேசரியின் மனைவி கற்றளியையே இந்தக் கல்வெட்டுக் கற்றளிப் பிராட்டியார் என்று குறிப்பிடுகிறது என்பர்.

இராசகேசரிவர்மனுடைய கல்வெட்டு இராசகேசரி கண்டராதித்த சோழனுக்கோ அல்லது இராசகேசரி சுந்தரசோழனுக்கோ உரியதொரு கல்வெட்டாகும். இதனைச் சுந்தரசோழனுக்கு உரியதாகக் கொள்ளுவது பெரிதும் பொருத்தமுடையது ஆகும்.

தென்னவன் இளங்கோவேளாராயின மறவம்பூதி யாரின் மனைவியாகிய கற்றளிப் பிராட்டித் திருப் பாலத்துறை மகாதேவர்க்குத் திருவமுதுக்காகவும் இரண்டு திருவிளக்குகளுக்காகவும் கொடை தந்துள்ளாள் என்ற செய்தியை இராசகேசரிவர்மனின் திருப்பாலத்துறைக் கல்வெட்டுக் கூறுகிறது. (South Indian Inscriptions Vol. viii Ins. No. 581, A.R.E. 273 of 1903.)

கற்றளியின் பால் பூதிவிக்கிரமகேசரிக்குப் பராந்தகன், ஆதித்யவர்மன் என இரு மக்கள் பிறந்தனர் என்பதனைக் கொடும்பாளூர்க் கல்வெட்டின் வாயிலாக அறியலாம்.

**பூதிவிக்கிரமகேசரியின் வேறு பெயர்கள்**

1. தென்னவன் இளங்கோவேளாராயின மறவன் பூதி. (தேவியார் கற்றளிப்பிராட்டி) S.I.I. Vol. VIII No. 581. A.R.E. 273 of 1903.

2. பராந்தக இளங்கோவேளார் (தேவியார் வரகுணப் பெருமானார்) S.I.I. Vol. III No. 113.

3. தென்னவன் இளங்கோவேளாயின மறவம் பூதியார். S.I.I. Vol. VIII No. 615. A.R.E. 306 of 1903.

4. .... இளங்கோவேளார் தேவியார் ...யா... குணபெரு மானார். S.I.I. Vol. VIII No. 568. A.R.E. 268 of 1903.

5. தென்னவன் இளங்கோவேளார் மகனார்... S.I.I. Vol. III No. 96. A.R.E. 316 of 1903.

இக்கல்வெட்டுக்களில் குறிக்கப்பெற்ற பெயர்கள் அனைத்தும் பூதிவிக்கிரமகேசரிக்கு உரிய பெயர்களாக வரலாற்றுப் பேராசிரியர்களால் கொள்ளப்பட்டவை. 'தென்னவன் இளங்கோவேள்', 'தென்னவன் இளங்கோ வேளாயின மறவம் பூதி', 'பராந்தக இளங்கோவேள்' என்ற மூன்று பெயர்களும் பூதிவிக்கிரமகேசரிக்கு உரிய பெயர்களாகும்.

**திரு. வெங்கய்யாவின் கருத்து**

திருச்சி மாவட்டம் திருப்பாலத்துறை இராசகேசரி வர்மனின் கல்வெட்டுக்கள் இரண்டும் (No. 258. and 273 of 1903.) இதே மாவட்டத்தைச் சேர்ந்த திருச்செந்துறைப் பரகேசரிக் கல்வெட்டு ஒன்றும் (No. 306 of 1903) தென்னவன் இளங்கோவேளாயின மறவம் பூதி என்பவனைக் குறிக்கின்றன. No. 273 of 1903 இவனுடைய மனைவி கற்றளிப் பிராட்டி எனக் குறிக்கிறது. பூதியார் என்ற பெயரால் விக்கிரமகேசரி குறிப்பிடப் பெறுகிறான் எனவும் அவன் மனைவி கற்றளிப் பிராட்டி குறிப்பிடப்பெறுகிறாள் எனவும் கூறலாம். விக்கிரமகேசரியின் மற்றொரு மனைவி குறிப்பிடப்படும் பரகேசரியின் 6ஆவது ஆண்டுக்குரிய கல்வெட்டு (337 of 1904) செம்பியன் இருக்குவேள் என்ற பெயர் இவனுக்கு உரியதாதலைக் காட்டுகிறது.

தென்னவன் இளங்கோவேளாரின் மகளும், அரிகுல கேசரியின் மனைவியும், (316 of 1903) ஆகிய பூதியாதிச்ச பிடாரி திருச்செந்துறைக் கோவிலைக் காட்டினாள். (319 of 1903).

திருச்சி மாவட்டம் நங்கவரம் சிவன் கோவில் மறவன் ஈஸ்வரக் கிருஹம் (336 of 1903) அல்லது திருமறவன் ஈஸ்வரம் (332 of 1903) எனப்பெறும். மறவன்பூதி (258 and 273 of 1903) என்னும் பெயர் ஒன்றும் உடைய விக்கிரமகேசரியால் இது கட்டப்பட்டதாகலாம். இது கொடும்பாளூர் வேளிர் இனத்தால் மறவர் ஆகவும் விளங்கினராகலாம் என்பதனைக் காட்டலாம். Annual Report of Epigraphy year 1908 Part II paragraph 90, 91.

No. 2877 of Apendix Bயில் இராசகேசரியின் பதின் மூன்றாவது ஆண்டுக்கு உரிய கல்வெட்டு வரகுணப் பெருமானாரை - பராந்தக இளங்கோவேளாரின் தேவியைக் குறிக்கிறது. இக்கொடை பரகேசரியின் 2ஆவது ஆண்டுக்கு உரிய தில்லைத்தானக் கல்வெட்டில் குறிப்பிடப்படுகிறது. (227 of 1911) வரகுணா என்பவள் தென்னவன் இளங் கோவேள், மதுராந்தக இருக்குவேள், ஆதித்தன் விக்கிரம கேசரி, மறவன்பூதியார் எனப்பெறும் விக்கிரம கேசரியின் மனைவியாவாள். (Report for 1908. Paragraph 80-91) வரகுணப் பெருமானாரின் கணவனாகிய பராந்தக இளங்கோவேள் என்பது (287 of 1911) பூதிவிக்கிரமகேசரியின் மற்றொரு பெயராகும். Report of Epigraphy year 1912 Part II paragraph 18.

**கே.வி. சுப்பிரமணிய ஐயர்**

இலால்குடிக் கல்வெட்டை ஆராய்ந்து பதிப்பித்த கே.வி. சுப்பிரமணிய ஐயர், வரகுணப் பெருமனார் வரகுணை எனவும், பூதிவிக்கிரமகேசரி பராந்தக இளங்கோவேள், தென்னவன் இளங்கோவேள் என்ற பெயர்களை உடையவன் எனவும் கூறியுள்ளார். பூதிவிக்கிரமகேசரி தென்னவன் இளங்கோவேள் எனவும்

மாறன்படுவன் எனவும் பெயர்களை உடையவன் என்று புலப்படுத்துவர். (Historical Sketches of the Ancient Dekhan p. 208).

**நீலகண்ட சாத்திரியார்**

தென்னவன் இளங்கோவேளார் என்ற பெயர் பல வேந்தர்களால் சூட்டப்பட்டுள்ளது என்பதனை மனத்தில் கொள்ளவேண்டும். பூதிவிக்கிரமகேசரி இரண்டாம் ஆதித்தன் காலத்தவன். தென்னவன் இளங்கோவேளான் மகளாகிய பூதிஆதிச்சபிடாரி பராந்தகனின் 3ஆவது ஆண்டில் அரிகுலகேசரியின் மனைவியாவாள் என்பது நம்புதற்குக் கடினமானது ஆகும் எனக் குறிப்பிட்டுள்ளார்.

**கருத்துக்களை ஒட்டிய செய்திகள் சில**

கற்றளிப் பிராட்டித் தென்னவன் இளங்கோ வேளாகிய மறவன் பூதியின் மனைவி எனக் குறிப்பிடப் படுவதைக் கொண்டும், வரகுணப் பெருமானார் பராந்தக இளங்கோவேளின் மனைவி எனக் கூறப்படுவதனாலும் 'தென்னவன் இளங்கோவேளாயின மறவம் பூதி' என்னும் பெயரும், பராந்தக இளங்கோவேள் என்னும் பெயரும் பூதிவிக்கிரமகேசரிக்கே உரியன எனத் துணியலாம்.

"பூதிவிக்கிரமகேசரி வேளிர்குலத்தவன். யது வம்சத்தவன் என்று கொடும்பாளூர்ச் சாசனம் கூறுகிறது. பெயர் ஒற்றுமையோடு யது வம்சப் பூதிவிக்கிரமகேசரியை மறவ வம்சத்தவன் என்று முடிவு கட்டிவிடுகிறார்கள்" என்று மயிலை சீனிவேங்கடசாமி மறுத்துள்ளார். (முதல் நரசிம்மவர்மன், பக்கம் 196) பூதிவிக்கிரமகேசரி யது வம்சத்தவன்தான். மறவன் என்பது குலப்பெயராகத் தான் இருக்க வேண்டுமா? போர்வன்மை, மறத்திண்மை காரணமாகப் பெற்ற சிறப்புப் பெயராகவும் இருக்கலாம். மறவர் குலத்தினராகிய பழுவேட்டரையர்களோடும் முத்தரையர்களோடும் தொடர்பு மிகவுடைய இருக்கு வேளிர் மறவர் எனப்பட்டதில் தான் தவறு ஏது? யதுகுலத்

தவராகிய விக்கிரமகேசரியின் மரபினரைக் 'கள்ளர்' குலத்த வராகக் கல்வெட்டு ஒன்று குறிப்பிடும்போது பூதிவிக்கிரம கேசரியை மறவம் பூதியோடு ஒப்பிடுவதில் இனத்தின் அடிப்படையில் தவறு இருப்பதாகத் தெரியவில்லை.

பராந்தக இளங்கோவேள், தென்னவன் இளங்கோ வேள் என்ற இவ்விரண்டு பெயர்களும் பூதிவிக்கிரம கேசரியின் வேறு பெயர்களாகும். இளவரசு நிலைக்குரியன வாகவும் இருக்கலாம்.

செம்பியன் இருக்குவேள், மதுராந்தக இருக்குவேள், ஆச்சன் விக்கிரமகேசரி ஆகிய மூன்று பெயர்களும் இருக்குவேளிர் குலத்தைச் சேர்ந்த பிறர்க்கு உரியது ஆதல் இந்நூலின் மற்றொரு பகுதியில் விளக்கப்பெறும்.

**மறவனீசுவரக்கிருஹம்**

திருச்சி மாவட்டம் நங்கவரம் திருக்கோயில் மறவன் ஈசுவரக் கிருஹம் எனவும் திருமறவனீசுவரம் எனவும் குறிக்கப்படுகிறது. இதனைத் தென்னவன் இளங்கோ வேளாயின மறவன் பூதி எனக் குறிக்கப்படும் பூதிவிக்கிரம கேசரி கட்டினான் எனக் கருதுவர்.

நங்கவரம் சிவன் கோவிலில் காணப்பெறும் பரகேசரிவர்மனின் பத்தாவது ஆண்டுக்கு உரிய செம்பியன் இருக்குவேளான பூதிபராந்தகனின் மனைவியை குறிக்கும் கல்வெட்டு முதல் பராந்தக சோழனுக்கு உரியதுபோலத் தோற்றம் தருகிறது. இக்கல்வெட்டின் கால ஆய்வுக்குப் பின் இக்கருத்து வலியுறும்.

**கல்வெட்டுச் செய்திகள்**

தென்னவன் இளங்கோவேளாயின ...ம் பூதியாரின் தேவியாரின் உறத்தூர்க் கூற்றத்துக் கொடும்பாளூர் நக்கன் விக்கிரமகேசரியிடம் இருந்து விடேல்விடுகு கல்லால் 20 கழஞ்சு துளைப்பட்ட பொன் கொண்டான். இப்

பொன்னைத் திருச்செந்துறைப் பெருமானடிகளுக்குத் திருவிளக்கு ஒன்றுக்குத் தந்தான், என்று இராசகேசரி வர்மனுடைய கல்வெட்டு ஒன்று கூறுகிறது. (S.I.I. Vol. VIII)

இராசகேசரிவர்மனின் 27ஆவது ஆண்டுக் கல்வெட்டுத் 'தென்னவன் இளங்கோவேளார் ஆயின மறவம் பூதியார்' பற்றிக் குறிக்கிறது. தென்னவன் இளங்கோவேள் விளக்கு முதலானவற்றுக்காகத் தரப்பெற்ற நிலம் பற்றிக்கூறும் இக்கல்வெட்டுப் பாழிநக்கன் கொடையையும் தென்னவன் இளங்கோவேள் கொடையையும் ஒரு சேரக் கூறுகிறது. எனவே கொடையைப் பின்னர் குறிக்கும் வழக்கம் இருந்தமையால், முற்காலக் கொடைக்கு இராசகேசரி ராசராசனின் 27ஆம் வருடத்தில் வெட்டப்பெற்ற கல்வெட்டாக இதனைக் கொள்ளலாம். (South Indian Inscriptions Vol. VIII No.258 of 1903)

பரகேசரிவர்மனுடைய 3ஆவது ஆண்டுத் திருச் செந்துறைக் கல்வெட்டுத் தென்னவன் இளங்கோ வேளாரின் மகன் அரிகுலகேசரியின் மனைவி பூதியாதிச்ச பிடாரி எனக் குறிப்பிடுகிறது.

பராந்தக இளங்கோவேளாரின் மனைவி வரகுணப் பெருமானார் எனக் கூறுகின்றன. இதுகாறும் நோக்கிய வற்றால் பூதிவிக்கிரமகேசரிக்கு மறவம்பூதி, தென்னவன் இளங்கோவேள், பராந்தகன் இளங்கோவேள் என்ற பெயர்கள் இருந்தமை புலனாகும்.

**காளமுகம் பேணியமை**

அகச் சமயங்கள் ஆறு, புறச்சமயங்கள் ஆறு எனத் தமிழர் பிரித்தனர். இந்த ஆறு வகை உட்பிரிவுகளில் காளாமுக சமயமும் ஒன்றாகும்.

காளாமுகர், லகுளீச பாசுபதர் எனவும் கூறப்பெற்ற சைவ சமயத்தின் உட்பிரிவினர். பக்தி முறையைப் பின் பற்றியவர்கள். மந்திரங்களைக் கூறியும் பக்தியோடு ஆடியும்

பாடியும் இறைவனை ஏத்தி வழிபட்டவர்கள் கல்விச் செல்வமும் செல்வாக்கும் உடையவராகத் திகழ்ந்தவர்கள் காளாமுகர்கள் ஆவர்.

வேடி என்ற இடத்தில் உள்ள கல்வெட்டு ஒன்று விண்ணகர் வைரமேகன் என்பவன் காளாமுகப் பிராமணன் ஒருவனுக்குத் தரப் பெற்ற கொடையைக் கூறும் (85 of 1908) வைரமேகன் தந்திப் போத்த ஐயன் ஆவன். எனவே கி.பி. 10ஆம் நூற்றாண்டிலேயே காளாமுகம் செல்வாக்குப் பெற்றிருந்தமை புலனாகும்.

காளாமுகப் பிரிவாகிய லகுளீச பாசுபதரின் மடம் ஒன்று அரிஞ்சீஸ்வரர் கோவிலில் 11ஆம் நூற்றாண்டுத் தொடக்கத்தில் இருந்ததைக் கல்வெட்டுரைக்கிறது. காளா முகர்கள் சோழர் பிற்காலத்தில் கோவில்கள் பலவற்றை மேற்பார்வை இட்டுள்ளனர். (A.R.E. 1909 part II para 37)

கொடும்பாளூர்க் கல்வெட்டுக் காளாமுகர் செல் வாக்குப் பற்றி அருமையான குறிப்பு ஒன்றினைத் தருகிறது.

பூதிவிக்கிரமகேசரி மூன்று கோவில்களைக் கட்டிக் குடமுழுக்குச் செய்தான்; வித்யாராசி என்பவரின் மாணவரும், ஆத்திரேய கோத்திரத்தில் பிறந்தவரும், மதுரை நகரினரும் ஆகிய மல்லிகார்ஜுனருக்குப் பெரிய மடம் ஒன்று அமைத்தான். காளாமுக சமயத்தினராகிய மல்லிகார்ஜுனருக் காகப் பூதிவிக்கிரமகேசரி மடம் ஒன்றை யும் அத்துடன் பதினோரு கிராமங்களையும் தந்தான். அந்த மடத்தில் ஐம்பது துறவிகள் இருந்தார்கள் பூசைக்குத் தேவையான சந்தனம், மலர்கள், தீபம், வெற்றிலை முதலியன தரப்பெற்றன எனக் கல்வெட்டுக் கூறுகிறது.

"தபோராசியும் வித்யாராசியின் மாணவரும் ஆன ஆத்ரேய கோத்திரத்தில் பிறந்த, மதுரை நகரைச் சேர்ந்த வேதம் வல்ல மல்லிகார்ச்சுனர் என்ற முனிவர் புகழுடன் வாழ்ந்தார்.

யாதவ அரசன் காளாமுக குருநாதராகிய அம் முனிபுங்கவருக்குப் பெரியமடத்தையும் அதனுடன் சேர்ந்த பதினொரு சிற்றூர்களையும் தந்தான்" என்பது கொடும்பாளூர் கல்வெட்டு.

வித்யாராசி, தபோராசி என்பவர் பற்றியோ மல்லிகார் சுனரைப் பற்றியோ கல்வெட்டுக் குறிப்புகள் காணக் கிடைக்கவில்லை.

வித்யாராசி தபோராசி முதலான காளாமுகக் குருமார்கள் கன்னட நாட்டுக் கல்வெட்டுக்களில் குறிக்கப் படுகின்றனர். இரண்டாம் வீரவல்லாளனின் கடாக் கல்வெட்டை ஆய்ந்த லூடேர்ஸ் அவர்கள் பெல்காமில் புகழ்வாய்ந்த காளாமுகப் பள்ளி இருந்ததனையும் பின் 'காளாமுக பிரமசார்யார் பகுதி' எனப்பட்ட பெல்காமின் ஒரு பகுதியில் தம்மை நிலைநிறுத்திக் கொண்டதையும் கூறுவர். பெல்காம் தக்ஷிண கேதாரேஸ்வரர் கோவிலைக் கண்காணித்த காளாமுக ஆச்சார்யார் மரபும் கல்வெட்டாக அங்கே இருக்கிறது. இவை எல்லாம் கொடும்பாளூர்க் கல்வெட்டில் கண்ட மல்லிகார்ச்சுனருக்குப் பிற்பட்ட குறிப்புகளாகும். (A.R.E. 1908 Part II Paragraph 89)

பூதிவிக்கிரமகேசரி காளாமுக சமயத்தின் மேல் பேரீடுபாடு கொண்டிருந்தமையும், துறவியர்க்கு பெருமதிப் பளித்ததனையும் இக்கல்வெட்டுப் புலனாக்குகிறது.

**3. பராந்தகன் சிறிய வேளான்**

'பராந்தகன் சிறிய வேளான்' என்பவனைப் பற்றி ஏழு கல்வெட்டுக்கள் குறிப்பிடுகின்றன.

1. பாண்டியனைச் சுரம் இறக்கின பெருமாள் ஸ்ரீசுந்தர சோழனின் ஏழாவது ஆண்டுக்குரிய திருக்களித்திட்டைக் கல்வெட்டு. காலம் கி.பி. 964. (291 of 1908 E.I. XII p.121-6).

2. பெருமாள் சுந்தரசோழனின் ஆட்சியாண்டு அறியப்படாத திருக்களித்திட்டைக் கல்வெட்டு - 302 of 1908.

3. இராசகேசரிவர்மனின் இரண்டாவது ஆண்டுக்குரிய திருவிசலூர்க் கல்வெட்டு - இவ்விராசகேசரி இரண்டாம் பராந்தகனாவான். காலம் கி.பி. 958. (South Indian Inscriptions Vo. III Ins. No. 119. 317 of 1907).

4. இராஜகேசரிவர்மனின் நான்காம் ஆண்டுக்குரிய திருவிசலூர்க் கல்வெட்டு. இவ்வரசன் சுந்தரசோழன் ஆவான். காலம் கி.பி. 961. (South Indian Inscriptions Vo. III No. 120. 320 of 1907).

5. சுந்தரசோழனின் 5ஆவது ஆண்டுக்கு உரிய கிரந்த எழுத்தில் அமைந்த வடமொழிக் கல்வெட்டு. கி.பி. 962க்கு உரியது. South Indian Inscriptions Vo. III Ins. No. X 121 - 400 of 1901

6. இராசகேசரியின் 14ஆவது ஆண்டுக்குரிய திருகளித் திட்டைக் கல்வெட்டு இதுவும் இரண்டாம் பராந்தகனாகிய சுந்தரசோழனுக்கே உரியது. கி.பி. 970-71க்கு உரியது ஆகும். South Indian Inscriptions Vo. III No. 122 of 1908

7. முதல் இராஜராஜசோழனின் 27ஆவது ஆண்டுக்கு உரிய திருவெண்காட்டுக் கல்வெட்டு. இதன் காலம் கி.பி. 1012. இக் கல்வெட்டின் உட்பகுதி சிறிய வேளைக் குறிப்பிடுகிறது. South Indian Inscriptions Vo. V Ins. 116 of 1896.

**திருவெண்காட்டுக் கல்வெட்டு**

இராஜராஜசோழனுடைய இருபத்தேழாவது ஆண்டுக்கு உரிய திருவெண்காட்டுக் கல்வெட்டு,

> **ஸ்ரீகோவிராஜகேசரி பர்மரான ஸ்ரீராஜராஜதேவற்கு யாண்டு 27ஆவது வடகரை இராசேந்திர சிம்ம வளநாட்டு நாங்கூர் நாட்டு நாங்கூர் திருவெண்காடதேவற்கு உடையார் பொன்மாளிகையிற் துஞ்சின தேவற்கு யாண்டு 3ஆவது ஈழத்துப் பட்ட கொடும்பாளூர் வேளான் சிறிய வேளாண் மகந்வேளான் சுந்தரசோழன்**

என்று குறிப்பிடுகிறது.

இரண்டாம் பராந்தகனாகிய சுந்தரசோழன் என்பவன் கி.பி. 957 முதல் 970 வரை ஆண்டவன். காஞ்சிபுரத்தில் பொன் மாளிகை ஒன்று இருந்தது என்பதனைக் "கட்சிப்பேட்டு நம் வீட்டினுள்ளால் பொன் மாளிகை ஆதி பூமியில் நாமிருக்க" என்ற கல்வெட்டுத் தொடரால் அறியலாம் இரண்டாம் பராந்தகனாகிய சுந்தரசோழன் 'பொன்மாளிகைத் துஞ்சின தேவர்' என்று சில கல்வெட்டுக்களில் (S.I.I. II No.6. S.I.I. Vol. V. No. 723, 780) குறிப்பிடப்பெறுகிறான்.

இவன் காலத்துக்குச் சுமார் ஐம்பது ஆண்டுகளுக்குப் பிற்பட்ட இந்தக் கல்வெட்டு இலங்கைப் படைஎடுப்புப் பற்றிச் கூறுகிறது.

**இரண்டாம் பராந்தகனின் இலங்கைப் படையெடுப்பு**

இரண்டாம் பராந்தகன் வீரபாண்டியனை வென்றான். சில ஆண்டுகளுக்குப் பின்னர் வீரபாண்டியன் திரும்பவும் பராந்தகனை எதிர்த்தான். சிங்கள அரசன் வீர பாண்டியனுக்கு உதவினான். சோழனுக்காக இளவரசன் பார்த்திவேந்திரபன்மன், இரண்டாம் ஆதித்த கரிகாலன் கொடும்பாளூர்வேள் பூதிவிக்கிரமகேசரி ஆகிய மூவரும் வீரபாண்டியனோடு போர் செய்து கி.பி. 966இல் அவன்

தலைகொண்டு வெற்றி எய்தினர். இதனால் இரண்டாம் பராந்தகன் 'பாண்டியனைச் சுரம் இறக்கின பெருமான்' என்ற சிறப்புப் பெயர் பெற்றான்.

இரண்டாம் பராந்தகன் வீரபாண்டியனோடு போர் புரிந்த காலத்தில் சிங்கள மன்னன் நான்காம் மகிந்தன் பாண்டியனுக்குப் படைகள் உதவினான். இதனால் பெருஞ்சினமுற்ற சோழன் பாண்டியனை வென்ற பின்னர்ச் சிங்கள மன்னனோடு போர் செய்தான். கொடும்பாளூர் வேளிர் இளவரசன் பராந்தகன் சிறிய வேளான் என்பவன் சேனாதிபதியாகத் தலைமைதாங்கி ஈழ நாட்டின் மீது படை எடுத்துச் சென்றான். இலங்கையில் சிங்களப் படைத் தலைவனாகிய சேனா என்பவன் சோழப் படையினரோடு போரிட்டான். போரில் கொடும்பாளூர்ச் சிறிய வேளான் கொல்லப்பட்டான். சிங்களர் வெற்றி பெற்றனர்.

**போர் நடந்த காலம்**

இரண்டாம் பராந்தகனின் (3ஆம் ஆண்டில்) படை எடுப்பில், சிறிய வேளான் இறந்ததாகத் திருவெண்காட்டுக் கல்வெட்டின் S.I.I. V Ins. 980இன் வாசகம் கூறுகிறது. இவ் வாசகப்படி நோக்கினால் படை எடுப்புக் கி.பி. 960க்கு உரிய தாகிறது. இவன் சுந்தரசோழனின் 5ஆம் ஆண்டு கல்வெட்டு வரை குறிக்கப்பெறுகிறான். திருவெண்காட்டுக் கல்வெட் டடிப்படையில் போர் நிகழ்ச்சி இரண்டாம் பராந்தகனின் 9ஆவது ஆண்டில் கி.பி. 967இல் நடந்ததாக வரலாற்று அறிஞர் (Epigraphica Indica Vol. XII p. 121-6. South Indian Vol. III Ins. 119 intro.) கூறுவர். திரு. சதாசிவப் பண்டாரத்தார் இப் படை எடுப்புக் கி.பி. 965 ஒட்டி நடந்ததாக எழுதியுள்ளார்.

**திருவிசலூர் வடமொழிக் கல்வெட்டு**

தஞ்சை மாவட்டம் குடந்தை வட்டத்தில் வேப்பத்தூருக்கு அருகில் திருவிசலூர்க் கோவிலில் வட மொழிக் கல்வெட்டு ஒன்று அமைந்து உள்ளது. இக்

கல்வெட்டுக் கிரந்த எழுத்தில் வெட்டப்பட்டுள்ளது. பாடல்களால் ஆகியது. ஆங்கில மொழிபெயர்ப்பைத் தழுவிய தமிழ்மொழி பெயர்ப்புப்பின் வருமாறு:

பாடல் 1

..... அக்கு விளக்கு ஆகிய ... திருவிசலூர் என்னும் பேரால் எழுந்தருளி உள்ள இறைவனுக்கு மதிய உணவிற்கான அரிசிக்காக அதிகரிக்கப் பெற்ற மரங்ஹகம் ... (தந்தான்) திருப்பணிக்காக நிபோக்கிட செலுத்த வேண்டிய கடகதாகக் (களையும்) தந்தான்.

பாடல் 2

சிறுவேளா(ன்) என்ற பெயர் பெற்றவனும் இருங்கோ வேள் மரபுக்கு விளக்கு ஆகியவனும் பிராந்தக (அரச)னின் மகள் வழி மரபில் முதன்மை வாய்ந்தவனும் ஆகிய இவன் சிறுவிசலூர் இறைவற்கு ஒரு விளக்கு அளித்தான்.

பாடல் 3

அரசர் திலகம் சுந்தரசோழனின் ஐந்தாவது ஆண்டில் சுந்தரசோழனால் சிறுவேளா(ன்) என்றும் பெயர் பெற்றவனால் காவிரியின் வடகரையில் குணம்மிகு, நிம்பாக் கிரஹாரம் எனப் பெயருள்ள விசலூர்க் கிராமத்தில் அமைந்த சிவபெருமானுக்குத் திருவிளக்கு கொடைதரப் பெற்றது. மாகேசுவரர் இதனைக் காப்பாராகுக.

**கல்வெட்டுகள் தரும் உண்மைகள்**

1. இருங்கோள குலத்தின் விளக்காகத் திகழ்பவன் பராந்தக சிறிய வேளான். இவ் இருங்கோள குலம் ப்ராதர முதலியவர்களை முதலாக உடையது. 'ப்ராதா திருங்கோள திலக' என்பது கல்வெட்டு வாசகம் 'இருங்கோள குலம்' என்று கல்வெட்டுக் கூறுவது இருங்கோவேளை முதலாக உடைய இருக்கு வேளிர் குலத்தையே ஆகும்.

2. சோழ அரசன் பராந்தகனின் மகள் வழி மரபில் முதன்மை பெற்றவன்.

3. சிறியவேள் என்ற பெயர் இயற்பெயரன்று. இரண்டாம் பராந்தகனாகிய சுந்தரசோழனின் காலத்தில், கொடும் பாளூர் வேளிர் குலத்தவனாக சிற்றரசன். இளவரசன் சுந்தர சோழனாகப் பெயரைப் பெற்றான் என்ற உண்மையைக் கல்வெட்டு உரைக்கிறது.

> **"ஸ்ரீமத் சுந்தரசோளபூபதிவகஸ்ய. அப்தேவரே பஞ்சமே... தத்தந் தத் சிறுவேளநாமா வஹதா ரக்ஷந்து...."**

என்னும் கல்வெட்டுப் பகுதியால் இதனை அறியலாம். இவனைப் 'பராந்தகன்' சிறிய வேளான் என்று கல் வெட்டுகள் குறிப்பிடுகின்றன. எனவே சிறிய வேளான் என்ற பெயரை அடைந்த வேளிரின் இயற்பெயர் 'பராந்தகன்' என உறுதியாகத் துணியலாம்.

**கொடும்பாளூர்க் கல்வெட்டில் பராந்தகன்**

கொடும்பாளூர் கல்வெட்டு வேளிர் மரபு கூறுவது சமராபிராமன் 'அனுபமை' என்னும் சோழ இளவரசியை மணந்தான். மகன் 'பூதிவிக்கிரமகேசரி' கற்றளி, வரகுணா என்னும் இருவரை மணந்தான். கற்றளியிடம் 'பராந்தகன்' ஆதித்யவர்மனோடு இரண்டு மக்கள் தோன்றினர். இதனை

> **தஸ்யா பூத்தேவ்வென கற்றளி வரகுண ஸமாஹ்வயேஸத்யௌ கற்றளிரபவஜனனீ பராந்தகாதித்ய வர்மணொ கம்ரகம் ராணாம்**

என்ற கல்வெட்டுப் பகுதியால் அறியலாம்.

**சிறிய வேளானும் பராந்தகனும்**

இரண்டாம் பராந்தகனின் காலத்தில் முதுமை உற்றிருந்தவன் பூதிவிக்ரமகேசரி. இவன் மகன் பராந்தகன்.

சிறிய வேளான் இரண்டாம் பராந்தகன் காலக் கொடும்பாளூர் இளவரசன் என்பதனை சிறிய வேளான்

என்ற சிறப்புப் பெயரே காட்டும். சோழருடன் மணவினைத் தொடர்பு உடைய கொடும்பாளூர் வேளிர் குலத்தின் நேர்வழியினைச் சேர்ந்தவன் என்பதனைப் 'பிராந்த கஸ்ய ஆத்ம ஐவர்கவ ர்யஹ்' என்னும் கல்வெட்டுத் தொடரால் அறியலாம்.

பூதிவிக்கிரமகேசரியின் மகன் பராந்தகனே இரண்டாம் பராந்தகன் காலத்தில் சிறிய வேள் என்ற பட்டம் உற்றான். பராந்தகன் சிறிய வேள் ஆனான் எனக் கருத நேர்கிறது.

**விசலூர்க் கல்வெட்டில் ஒரு பாடல்**

திருவிசலூர் வடமொழிக் கல்வெட்டுப் பாக்களில் பின்வரும் பாடலும் ஒன்றாக அமைந்து உள்ளது.

> **ப்ராதிருங்கோளகுலப்ரதீபஹ பிராந்தகஸ்ய ஆத்ம வர்கவர்யஹ. தீபம்முதா ஸ்ரீவிசலூர் தாம்னே ஹராய் பப்ருச் சிறுவேள நாமா**

என்பது அப்பாடல்... இப்பாடல்

1. இருங்கோளா குலத்தின் விளக்கு எனவும்.

2. 'பிராந்தகஸ்ய ஆத்மஸ்ரீ வர்க வர்யஹ்' களில் சிறந்தவன் எனவும் சிறிய வேளானைக் குறிப்பிடுகிறது. இதில் பிராந்தகஸ்யாத்மாஜவர்கம் என்பதன் பொருள் காண்பதில் கருத்து வேறுபாடுகள் உண்டு.

**பராந்தகனின் மகள் வழி மரபினன்**

தென்னிந்தியக் கல்வெட்டுக்கள் மூன்றாம் தொகுதி 121ஆம் எண்ணுள்ள இச்சாசனத்தின் ஆங்கில மொழி பெயர்ப்புப் பகுதி பின்வருமாறு:

'The King named Siruvela who was the light of the Irungolan race and the for most (member) in the family of the daughter of the king Pirantaka gave with a delight a lamp to Hara who abode was at Sirvisatura.'

இம்மொழி பெயர்ப்பால் பிராந்தகனின் மகள்வழி

மரபில் வந்த இருங்கோள குலத்தினருள் தலைசிறந்தவன் சிறு வேளான் என்ற கருத்துத் தோன்றுகிறது.

**பராந்தகனின் மகன்**

பூதிவிக்ரமகேசரியின் மகன் பராந்தகன் பூதிப் பராந்தகனாக கொள்ள வேண்டும். பூதிப் பராந்தகனுக்கும் பல மகன்கள் (group of sons) இருந்தனர். அவர்கள் பராந்தக குஞ்சர மல்லன், பராந்தகன் வீர சோழன் பராந்தகன் சிறிய வேளான் முதலியோர். பூதிபராந்தகனுடைய பல மக்களுட் சிறந்தவனாக பராந்தகன் சிறிய வேளான் இருந்தமையில் பராந்தக கஸ்ய ஆத்ம ஜவர்கத்தினரின் சிறந்தவனாகக் கூறப்பட்டான் என்று கே.வி. சுப்பிரமணிய ஐயர் கூறுவர்.

**மகள் வழி மரபினனே**

பூதிபராந்தகனே பூதிவிக்ரமகேசரியின் மகன் பராந்தகன் என்பது பூதி பராந்தகன் என்னும் பெயரின் அடிப்படையில் அமைந்த கருத்து ஆகும்.

'சமராபிராமன்' முதல் பராந்தக சோழனுடைய மகள் அனுபமையை மணந்தான். அனுபமைபால் பூதிவிக்ரம கேசரி பிறந்தான். அவன் மகன் பராந்தகன் சிறியவேள், பராந்தகனின் மகள் வழியாகச் செழித்த மரபினரில் சிறந்தவர் என்ற பொருளே சிறப்புடையது ஆகும்.

**இராசாதிச்சி**

சிறிய வேளானுடைய மனைவியின் பெயர் இராசாதிச்சி என்பதாகும். பராந்தகன் சிறிய வேளான் மனைவி இராசாதிச்சி அவனி நாராயணச் சதுர்பேதி மங்கலத்துத் திருக்குடித்திட்டைப் பெருமாளுக்கு இராச கேசரியின் பதினான்காவது ஆண்டில் 25 ஈழக் காசுகளை ஒரு நொந்தா விளக்கு எரிப்பிக்கத் தந்துள்ளான் எனத் திருக்களித் திட்டைக் கல்வெட்டுக் கூறுகிறது.

**மகள் குஞ்சரமல்லி**

சிறிய வேளானின் மகள் குஞ்சரமல்லி எனப்படுவாள். இவளும் இராசகேசரியின் பதினான்காவது ஆண்டில் ஸ்ரீகுடித்திட்டை உடையார்க்கு ஒரு திருநொந்தா விளக்கு எரிப்பிக்க 25 படிக் காசுகள் தந்துள்ளாள்.

**மகன் வேளான் சுந்தரசோழன்**

பராந்தகன் சிறிய வேளானுடைய மகன் வேளான் சுந்தரசோழன் என்று திருவெண்காடு கல்வெட்டுக் கூறுகின்றது. இவன் திருவுண்ணாழிகையில் ஒரு திருவிளக்கு எரியத் திருவெண்காடன் நாழியால் ஒரு நாழி நெய்யால் எரிப்பிக்கக் குடிஞை கல்லால் 22 கழஞ்சு பொன் தந்தான் சரதத்துடர் 3ம், தாளிம்பம் 1ம், திருமஞ்சனம் ஆடியருளும் போது திருமுடியில் வைத்துத் திருமஞ்சனம் ஆடியருளப் பொற்பூ ஒன்றும் நம்பிராட்டியார்க்காகத் தந்தான்.

**சிறிய வேளான் அறச் செயல்கள்**

பராந்தகன் சிறிய வேளான் திருவிசலூரர்ச் சிவ பெருமானுக்காக நிம்பாகிரஹத்தார் அரசனுக்குச் செலுத்த வேண்டிய வரியில் இருந்து விலக்கு அளித்தான். இதனை அன்றியும் ஒரு வேதபிராமணன் உத்தமாக்கிரம் உச்சம் போது உணவு உண்ணவும் விசலூரர்ப் பெருமானடிகளுக்கு உச்சம் போது திரு அமிர்த்துக்காகவும் அறக்கொடைகள் தந்துள்ளான்.

**பராந்தகன் சிறிய வேளாயின திருக்கற்றளிப் பிச்சன்**

முதல் இராசராசன் காலக் கல்வெட்டு இரண்டாம் பராந்தகன் காலத்தில் இலங்கைப் போரில் பராந்தகன் சிறிய வேள் இறந்ததாக கூறுகிறது. பராந்தகன் சிறியவேள் பராந் தகன் சிறிய வேளாயின திருக்கற்றளிப் பிச்சன் என்று கல் வெட்டுகளில் கூறப்படுவான் என்று கே.வி. சுப்பிரமணிய ஐயர் Epigraphica Indica Vol. XII p.121-ல் கூறியுள்ளார். (South Indian Inscriptions Vol. III part iv Introduction page 14)

பாண்டியனைச் சுரமிறக்கின பெருமாள் பொன் மாளிகைத் துஞ்சின சுந்தரசோழனின் ஏழாவது ஆண்டுக் கல்வெட்டு பராந்தகன் சிறிய வேளாயின திருக்கற்றளிப் பிச்சன் என்பவன் சோழனின் சேனாபதியாகப் பணி புரிந்ததாகக் கூறுகிறது. இவன் சுப்பிரமணிய ஐயரால் சிறிய வேளான் எனக் கூறப்படுவான். இவன் வடகை வேம்பான்னூர் ஸ்ரீகுடித்திட்டை உடை யார்க்கு 156 கழஞ்சு செம்பொன்களைத் தந்தான் இப் பொன்னுக்கு நிலம் வாங்கி இறையிலி ஆக்கப்பட்டது. (219 of 1908)

திருக்களித்திட்டையில் உள்ள மற்றொரு சுந்தர சோழன் காலக் கல்வெட்டு (302 of 1908) சிறிய வேளைக் குறிப்பிடுகிறது. இக்கல்வெட்டு ஈழப் படைஎடுப்பினைக் குறிக்கிறது. ஆயினும் அப்பகுதி மிகவும் சிதைந்து உள்ளது. (S.I.I. Vol III No.119 Intro)

பூதிவிக்ரமகேசரியின் மகன் பராந்தகன். இவனே பராந்தகன் சிறிய வேளான் எனப் பெற்றான். இவனைப் பராந்தக இருங்கோளனாகிய சிறிய வேள் எனவும் பராந்தகன் இருங்கோளர் ஆகிய சிறிய வேள் எனவும் சிறிய வேளான் எனவும் கல்வெட்டுக்கள் குறிப்பிடுகின்றன. இப்பராந்தகன் சிறிய வேள். இரண்டாம் பராந்தகனின் 9ஆம் ஆண்டில் இலங்கை மீது படை எடுத்துப் போரில் இறந்தான். இராசாதிச்சி என்னும் மனைவி வழியாகக் குஞ்சரமல்லி, வேளான் சுந்தரசோழன் என்னும் மக்களை உடையவன். சோழ அரசனின் சேனாபதி. பராந்தகன் சிறிய வேளாயின திருக்கற்றளிப் பிச்சன் என்பதும் இவன் பெயரே என அறிஞர் கருதுவர்.

ஆறாம் பகுதி

# வேளிர் குலத்தில் ஒரு கிளை மரபு

கொடும்பாளூர்ப் பூதிவிக்கிரம கேசரியின் கல்வெட்டு மட்டுமல்லாமல் பல கல்வெட்டுக்கள் கொடும்பாளூர் இருக்கு வேளிர் குல அரசரைக் காட்டுகின்றன. இவர்கள் கொடும் பாளூர் குல அரசர்க்கு மிகவும் உறவு நெருக்கம் உடையவர் எனலாம். இவர்தம் கல்வெட்டுக்களைக் கூர்ந்து நோக்கிய மையின் விளைவாக ஒரு மரபுப் பட்டியல் தரப்பெறுகிறது.

மதுராந்தக இருக்குவேளாயின ஆதித்தம்பூதி

|

வீரசோழ இளங்கோவேளாயின ஆதித்தம்திருஒற்றியூரடிகள்

|

வீரசோழ இளங்கோவேளாயின ஒற்றி மதுராந்தகன்

|

பராந்தக தேவன் மஹிமாலய இருக்குவேளாயின பராந்தகன் வீரசோழன் — மதுராந்தக ஆதிச்சபிடாரன் (மதுராந்தக இருக்கு வேளாயின் ஆச்சன் விக்கிரமன்)

இவரன்றி இன்னும் பல அரசரும் இப் பகுதியில் விளக்கப் பெறுகின்றனர்.

**1. வீரசோழ இளங்கோவேள் (917 - 958)**

'வீரசோழ இளங்கோவேள்' என்ற இளவரசுப் பட்டப் பெயருடைய கொடும்பாளூர்ச் சிற்றரசனைப் பற்றிக் குறிப்பிடும் கல்வெட்டுக்கள்.

1. அ) பராந்தகன் குஞ்சரமல்லனான வீரசோழ இளங்கோவேள்.

ஆ) வீரசோழ இளங்கோவேளாயின பராந்தகன் குஞ்சர மல்லன்

2. வீரசோழ இளங்கோவேளாயின ஆதித்தம் திருவொற்றி யூரடிகள்

3. வீரசோழ இளங்கோவேளாயின ஒற்றிப் பராந்தகன்

4. வீரசோழ இளங்கோவேள்.

என்னும் இவ்வரசர்கள் சிலகல்வெட்டுக்களில் குறிக்கப் படுகின்றனர்.

**வீரசோழ இளங்கோவேளாயின பராந்தகன் குஞ்சரமல்லன் கல்வெட்டுக்களும் காலமும்**

1. அ) பராந்தகன் குஞ்சரமல்லனான வீரசோழ இளங்கோ வேள் குடுமியான் மலை. பரகேசரி யாண்டு : 33 முதல் பராந்தகன் - கி.பி. 940க்கு உரியது.

ஆ) வீரசோழ இளங்கோவேளாயின பராந்தகன் குஞ்சர மல்லன் - அல்லூரர், இராசகேசரி ஆண்டு : 3 இராசகேசரி கண்டராதித்தனின் 3ஆம் ஆண்டு கி.பி. 953க்கு உரியதாகும்.

2. வீரசோழ இளங்கோவேள்

அ) உய்யக்கொண்டார் திருமலை

பரகேசரி யாண்டு : 10, முதற்பராந்தகன் கி.பி. 917க்கு உரியது.

ஆ) திருப்பாலத்துறை - மதுரை கொண்ட பரகேசரி

யாண்டு - 28, முதற்பராந்தகன் - கி.பி. 935

இ) அல்லூரர் - பரகேசரி - யாண்டு - 3

பரகேசரி அரிஞ்சயன் கி.பி. 958க்குரியது ஆகலாம்.

வீரசோழ இளங்கோவேளைக் குறிக்கும் கல்வெட்டுக்

1. A.R.E 1909 Part II Paragraph 37 page 88.

களில் பரகேசரி 10, 28, 33 ஆண்டுக் கல்வெட்டுக்கள் மதுரை கொண்ட பரகேசரிக்கும்,[1] இராசகேசரி 3ஆவதாண்டுக் கல்வெட்டுக் கண்டராதித்தனுக்கும், பரகேசரி 3ஆவது ஆண்டுக் கல்வெட்டு அரிஞ்சய சோழனுக்கும் உரியதாகும், என்று கருத இயல்கிறது. இவன் (வீரசோழ இளங்கோவேள்) கி.பி. 917-959வரை இருந்தவனாதல் உறுதி.

**முதல் பராந்தகனின் இலங்கைப் படையெடுப்பு**

பரகேசரி முதல் பராந்தக சோழன் கி.பி. 907 முதல் 95வரை ஆண்டவன். பராந்தகசோழன், தன் மூன்றாவது ஆட்சியாண்டில் மதுரையின் மீது படையெடுத்தான். கி.பி. 919இல் வெள்ளூரில் பெரும்போர் செய்து இராசசிம்ம பாண்டியனை (900-945) வென்றான். போரிட்டுத் தோற்ற இராசசிம்மன் நான்காம் தப்புலன் (923-930) என்ற இலங்கை மன்னவனிடம் சென்று தங்கி உதவி கேட்டான். உதவி கிடைக்கவில்லை - வாளா ஆங்கே தங்குவதனால் பயனில்லை என்று நினைத்தான் பாண்டிய மன்னன் இராச சிம்மன் - பாண்டிய மன்னரின் பரம்பரை உரிமையாகிய சுந்தர முடியையும் இந்திரன் ஆரத்தையும் சிங்கள நாட்டில் பாதுகாப்பாக வைத்துவிட்டுத் தன் தாயாகிய வானமாதேவியின் பிறந்த நாடாகிய சேரநாட்டிற்குச் சென்று தங்கினான்.

கி.பி. 919இல் மதுரையைப் பராந்தகன் வென்றாலும் பல ஆண்டுகள் பெரும்பாடுபட்டுத் தன்னுடைய இருபத்து நான்காவது ஆட்சி ஆண்டில் - கி.பி. 941இல் பாண்டிநாடு முழுவதையும் தன்னுடைய ஆட்சிக்குக் கொண்டுவந்தான்.[2] பாண்டிய நாட்டினைக் கைப்பற்றிய பராந்தக சோழன் முடிசூட்டு விழா நடத்த எண்ணினான். சுந்தர முடியும், பிற இராச சின்னங்களும் அங்கே இல்லை. இராசசிம்ம பாண்டியனால் ஈழநாட்டில் வைக்கப்பட்டுள்ளதனை

2. S.I.I. Vol. II No. 101 Mysore Gazetter Vol II Part II

அறிந்தான். சோழன் சில தூதர்களை அனுப்பி அச் சின்னங்களைக் கொண்டு வர முயன்றான். தூதர்களிடம் ஈழ நாட்டு மன்னன் நான்காம் உதயன் அப்பொருள்களைத் தரவில்லை எனவே பராந்தக சோழன் இலங்கைமீது படையெடுத்தான். ஈழப் போரில் ஈழப்படைத் தலைவன் இறந்தான். ஈழநாட்டு மன்னன் நான்காம் உதயன் தோற்றான். பாண்டியனுக்கு உரிய அரச சின்னங்களோடு ஈழநாட்டின் தென்கிழக்குப் பகுதியாகிய ரோகணத்தில் மறைந்தான். சோழ மன்னன் ஈழத்தை வென்றாலும் அவனுடைய அவா நிறைவேற வில்லை. இப்போரினை மகாவம்சம் விளக்குகிறது.[3]

**மதுரைப்போரில் வேளிர் பங்கு**

கி.பி. 910இல் பராந்தகசோழன் மதுரையை வென்ற பின்னர் இராசசிம்ம பாண்டியன் சிங்கள மன்னனிடம் படை உதவி கேட்டான். சிங்கள மன்னன் ஐந்தாம் காசிபன் சக்க சேனாபதியின் தலைமையில் படை உதவினான். வெள்ளூரில் போர் நடந்தது. பாண்டியன் தோற்றான் என்று உதயேந்திரப் பட்டயமும், மஹா வம்சமும் காட்டுகின்றன. ஆனால் இராசசிம்ம பாண்டி யனுடைய சின்னமனூர்ச் செப்பேடுகள் கொடும்பாளூர்த் தலைவனையும் தஞ்சை மன்னனையும் பாண்டியன் இராச சிம்மன் போரிட்டுப் புறங்கண்டான் என்று கூறுகின்றன.

> **தஞ்சை அரசனை நைப்பூரில் வென்றான். மலை போன்று தோற்றமுடைய சோழனைப் படைப் பரிசாரங்களைக் கெடுத்துப் புறமுதுகு காட்டி ஓடும்படி செய்தான். வெற்றி முரசு கொட்டினான். கொடும்பாளூரில் ஒலிக்கின்ற கடல் போன்று நிறைந்துள்ள பெரிய சேனைகள் தூள்பட்டு ஓடும்படி இரணோதயம் என்ற யானை மீது கருவூரில் எதிர்த்தவருடைய முண்டங்கள் கூத்தாடும்படிச் செய்தான். முருகப் பெருமான்**

3. பாண்டிய வரலாறு 79-82. சோழர் வரலாறு Part I 36-42.

4. பாண்டியர் செப்பேடுகள்

**தேவாசுரப் போரில் சினந்து எழுந்தது போலத் தஞ்சை நாட்டு அரசனுடைய மூவகைப் படைகளும் அழியும்படி ஆனைக்காவில் தன் குதிரையின் வலிமையை உலகத்துக்குக் காட்டினான்.4**

என்று சின்னமனூர்ச் செப்பேடுகள் கூறுகின்றன. "கொடும்பை மாநகர் நிறைந்த குரைகடல் பெருந்தானை இடும்பை உற்றிரியத் தளிரெணொதய மெல் கொண்டும்" எனச் செப்பேடு கூறுவது கொடும்பாளூரில் பெரும்போர் நடந்ததனை உறுதிப்படுத்தும். இறுதியில் நடந்த வெள்ளூர்ப் போருக்கு முன்னர்ப் பல இடங்களில் போர் நடந்தது போரில் கொடும்பாளூர்ச் சிற்றரசர் ஈடுபட்டனர் என்பது மீண்டும் இங்கு நோக்கத்தக்கதொன்றாகும்.

**காலம் பற்றிய கருத்து**

முதல் பராந்தக சோழன் மதுரையைக் கி.பி. 919இல் கைப்பற்றித் 941இல் தன் ஆட்சிக்குக் கொண்டு வந்து முடிசூட முயன்றான். அது முடியாததாயிற்று. இலங்கை மீது படையெடுத்தான்.

பராந்தகன் தன்னுடைய 30ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டுக்களில்தான் மதுரையும் ஈழமும் கொண்ட பரகேசரி[5] என்று குறிக்கப்படுகிறான். எனவே ஈழநாட்டுப் படையெடுப்புக் கி.பி. 944ஆம் ஆண்டுக்கு முன்பு நடைபெற்று இருக்க வேண்டும் என்று வரலாற்றுப் பேரறிஞர் சதாசிவ பண்டாரத்தார் கூறுவர்.[6]

**ஈழப்போரும் இளங்கோவேளும்**

கொடும்பாளூர் வேளிர் வரலாறு முதற் பராந்தக சோழனுடைய ஈழப்படையெடுப்பு நடந்தமையைக் குறிப்பிடுகிறது.

"பிராந்தகன் குஞ்சரமல்லனான வீரசோழ இளங்கோ

5. 553 of 1920.

6. சோழர் வரலாறு. Part I Page No. 42.

வேள் என்பவன் ஈழநாட்டை வெல்வதற்காகச் சென்றான். இடையில் குடுமியான்மலைத் திருநலக்குன்றமுடைய நாயனார்க்கு யோகியர்களுக்குத் திருவமுது முதலான வற்றுக்காகக் கீழ்மணநல்லூரில் வேலி நிலம் தந்தான்" என்று குடுமியான்மலைக் கல்வெட்டு ஒன்று கூறுகிறது. பரகேசரி வர்மன் 33ஆவது ஆண்டுக்கு உரிய இந்தக் கல்வெட்டுத் திரிபுவனச் சக்கரவர்த்திகள் சோணாடு கொண்ட சுந்தர பாண்டியனுடைய 4ஆவது ஆட்சியாண்டில் திரு மாளிகையும் திருவாயிலும் பெருகச் செய்யும் காலத்துக் கல்வெட்டுப் படி எடுத்துப்படி எடுத்தபடியே வெட்டப் பட்ட கல்வெட்டுக்களில் ஒன்றாகும்.

**வரலாற்றுக்குப் புதுச் செய்தி**

கோப்பரகேசரி பன்மற்கு யாண்டு 33ஆவது திருநிலக் குன்றத்துப் பரமேஸ்வரற்குப் பிராந்தகன் குஞ்சர மல்லனாயின வீரசோழ இளங்கோ வேளான்னென் "ஈழமெறியப் போகின்றேன்". கீழ்மண நல்லூரில் குடுத்த நிலம் எனவரும் கல்வெட்டுத் தொடர் பரகேசரியின் 33ஆவது ஆண்டில் ஈழநாட்டின்மீது படையெடுக்கப் புறப்பட்டதனைத் தெளிவாக்குகிறது. இக்கல்வெட்டில் கண்ட பரகேசரி முதல் பராந்தக சோழனே ஆவான். இப் பராந்தகனின் 33ஆவது ஆண்டில் கி.பி.940இல் பராந்தகன் குஞ்சரமல்லனான வீரசோழ இளங்கோவேள் இலங்கை எறியப் புறப்பட்டான் என்று கல்வெட்டுக் கூறுகிறது. முதல் பராந்தக சோழனின் ஈழப் படைஎடுப்புக் கி.பி. 940இல் தொடங்கிற்று என்பதும் பராந்தகன் குஞ்சரமல்லனான வீரசோழ இளங்கோவேள் ஈழநாட்டுப் படை எடுப்பில் கலந்துகொண்டான் என்பதும் புலனாகிறது.

**முதற்பராந்தகனின் சிற்றரசன்**

"இராட்டிடகூட மன்னன் யாராலும் வெல்ல இயலாத கிருஷ்ணதேவனை முதற் பராந்தகன் வென்றான்.

விசயனுக்குச் சமமான அளவில்லாத ஆற்றலுடைய பராந்தகன் வீரசோழன் என்ற பெயர் உற்றான்" என்று கன்னியாகுமரிக் கல்வெட்டின் 58ஆவது வடமொழிச் சுலோகம் கூறுகிறது.[7] குஞ்சரமல்லன் என்னும் பெயரும் பராந்தக சோழனுக்குரியதொரு சிறப்புப் பெயராகும். முதற் பராந்தகனின் இவ்விரண்டு பெயரும் அமைய வீரசோழ இளங்கோவேளாயின (பராந்தகன் குஞ்சரமல்லன்) என்று இவ்வேளிர்குல இளவரசன் அழைக்கப்பட்டனன். வீரசோழ இளங்கோவேளாயின பராந்தகன் குஞ்சரமல்லன் முதற் பராந்தகன் காலச் சிற்றரசன் ஆவான்.[8]

**கல்வெட்டுக்கள் காட்டும் உண்மைகள்**

முதற் பராந்தகனின் பத்தாமாண்டில் உறத்தூர்க் கூற்றத்தைச் சேர்ந்த கொடும்பாளூர் வீரசோழ இளங்கோ வேளானின் பெருந்தனத்து ஏவலருள் ஒருவனாகிய வீர நாராயணன் செம்பியன் மாராயன் என்பவன் திருக்கற்குடிப் பரமேஸ்வரர்க்குச் சூலக் காலால் தினந்தோறும் உழக்கு நெய்யால் இரவில் திருவிளக்கு எரிக்கத் தொண்ணூறும் பகல் விளக்கெரிக்க ஐம்பது ஆடுகளும் அளித்துள்ளான்.

முதற்பராந்தக சோழனுடைய இருபத்தெட்டாவது ஆட்சியாண்டில் நக்கன் கண்டன் என்பவன் வீரசோழ இளங்கோ வேளானிடம் இறையிலி பிரமதேயமாகப் பெற்ற கொடியாலத்து உர்வேலியான நிலத்தை ஈசான மங்கலத்துப் பராய்த்துறை இறைவர்க்கு இரண்டு திருநொந்தா விளக்கு எரிக்கத் தந்துள்ளான். இதனைத் திருப்பாலத்துறைக் கல்வெட்டுப் புலனாக்குகிறது.

கி.பி. 940இல் வீரசோழ இளங்கோவேளான் ஈழ நாட்டின்மீது படையெடுத்துச் சென்றான் எனக் குடுமியான் மலைக் கல்வெட்டுக் கூறுகிறது.

8. A.R.E. 1909 Page 88

உறத்தூர்க் கூற்றத்துப் புதுக்குடியைச் சேர்ந்த அவந்திய கோவப் பல்லவரையன் ஆமையிலைத் திண்டன் அல்லூர்க் கோவில் பரமேஸ்வரர்க்கு நிலம் தர எண்ணினான். பண்டு விளையாமல் அபொவனமாகக் கிடந்த நிலத்தைத் தேவதான மாக்குவதற்காக வீரசோழ இளங்கோவேளாயின பராந்தகன் குஞ்சரமல்லனுக்கு விண்ணப்பம் செய்தான். வீரசோழ இளங்கோவேள் ஆணை பிறப்பித்தான். திருமுகம் கண்டு அல்லூர் ஊரார் இடமும், நகரத்தார் இடமும் உதகபூர்வம் செய்வித்துக் கொண்டு 'திண்டன் வயக்கல்' என்னும் பெயரால் நிலத்தைச் சீர்செய்து அமுது படிக்கும், திருநொந்தா விளக்கு இரண்டுக்குமாகத் தந்தான்.

**மனைவி - கங்கமாதேவி**

'வீரசோழ இளங்கோவேள்' இறந்தான். அவன் மனைவி கங்கமாதேவி தீயில் பாய்ந்து இறந்தாள். கங்கமாதேவி தீப்பாய்வதற்கு முன்பாக அல்லூர் இறைவர்க்குப் பொன் தந்தாள். அவள் தந்த பொன்னாலும் ஊர் உள்ளிட்டுக் கொடுத்த பொன் முதலியவற்றாலும் நிலம் வாங்கி திருவிளக்கு எரிக்க ஏற்பாடு செய்யப் பட்டதனை அல்லூரில் உள்ள பரகேசரி மூன்றாம் ஆண்டுக் கல்வெட்டுக் கூறுகிறது. இக்கல்வெட்டின் பின்பகுதியில் கூறப்பட்ட கவிகியன் விடமன் கற்கடையும், சிவகேசரி ஊரன் அறிஞ்சிகையும் மதுரை கொண்ட பரகேசரியின் கல்வெட்டு ஒன்றிலும் கூறப்படுவர். எனவே முதற்பராந்தகனுக்குப் பிற்பட்ட முதல் பரகேசரியின் மூன்றாமாண்டுக்கு இந்தக் கல்வெட்டுக்கு உரியதாகும். கி.பி. 956-957 இல் ஆண்ட பரகேசரி அரிஞ்சய சோழனுக்கு இந்தக் கல்வெட்டு உரியது ஆதல் கூடும்.

'வீரசோழ இளங்கோவேளார் கங்கமாதேவியார் தீப்பாய்கின்றார் குடுத்தது' என வருவதனால் வீரசோழ இளங்கோவேள் கி.பி. 958க்கு முன்பு இறந்தான் என்று கொள்ள இயல்கிறது.

**வரலாற்று அறிஞர் கருத்து**

ஆய்வாளர் பிராந்தகன் குஞ்சரமல்லனாயின வீரசோழ இளங்கோவேளை இராசகேசரி இரண்டாம் பராந்தகனாகிய சுந்தரசோழன் (957-970) காலத்தவன் என்று கூறுவர். பராந்தகன் குஞ்சரமல்லனாயின வீரசோழ இளங்கோவேளான் என்னும் பெயரினை அடிப்படையாகக் கொண்டு இவன் பூதி பராந்தகனின் மகனாக இருக்கலாம் என்பர் சிலர். பராந்தகன் குஞ்சரமல்லன் இராசகேசரியின் மூன்றாவது ஆண்டுக் கல்வெட்டில் மட்டும் குறிப்பிடப் பெறவில்லை. குடுமியான் மலையில் பரகேசரியின் 33ஆவது ஆண்டுக் கல்வெட்டிலும் குறிக்கப்படுகிறான். இது முதற் பராந்தகன் காலத்துக்கு உரியது என்பது உறுதி. எனவே பூதியின் மகனாகலாம் என்றும் ஊகக் கருத்து ஏற்புடையது அன்று.

பராந்தக சோழன் காலத்தில் வீரசோழ இளங்கோ வேள் என்றொருவன் இருந்தான். இவன் 28ஆவது ஆட்சியாண்டுக்கு உரிய ஒரு கல்வெட்டில் குறிக்கப் படுகிறான். இவன் 'நக்கன் கண்டன்' என்ற பெயர் உடைய வன் ஆகலாம் என்று தோன்றுகிறது என்பர் வரலாற்று ஆய்வாளர். இக்கல்வெட்டு வீரசோழ இளங்கோவேள் நக்கன் கண்டன் என்பவனுக்கு இறையிலி பிரமதேயமாக நிலம் தந்தான். நக்கன் கண்டன் திருவிளக்கு எரிப்பதற்காகத் அதனைத் திருப்பாலத்துறை கோவிலுக்குக் கொடையாகத் தந்தான், என்பதே கல்வெட்டால் புலப்படும் செய்தியாகும்.

வீரசோழ இளங்கோவேளாயின பராந்தகன் குஞ்சரமல்லன் முதற் பராந்தகன் காலத்தில் சிறப்புப் பெற்றிருந்தவன். கி.பி. 917 - 959 வரை ஆண்டவன். கி.பி. 930இல் முதற் பராந்தகனுடைய ஈழப் படை எடுப்பில் கலந்து கொண்டவன். கங்கமாதேவி என்பவளை மனைவியாகப் பெற்றவன் என்ற செய்திகளைக் கல்வெட்டுகள் உணர்த்துகின்றன.

**2. வீரசோழ இளங்கோவேளாயின ஆதித்தம் திருவொற்றியூரடிகள் - 930**

*திருச்செந்துறைத் திருக்கோவில் உள்ள கோப்பரகேசரி வர்மனுடைய 23ஆவது ஆண்டுக் கல்வெட்டு வீரசோழ இளங்கோவேளாயின ஆதித்தம் திருவொற்றியூரடிகள் என்ற கொடும்பாளூர் இளவரசனைக் குறிக்கிறது. நீண்ட ஆட்சியாண்டினை நோக்க இக்கல்வெட்டு முதற்பராந்தக சோழனின் 23ஆவது ஆட்சியாண்டாகிய 930க்கு உரியதாகக் கருதவியல்கிறது.*

*வீரசோழ இளங்கோவேளாயின ஆதித்தம் திருவொற்றியூரடிகள் திருமணம் செய்துகொண்டான். திருமண நிகழ்ச்சியின் பொருட்டு (விவாஹ தட்சணையாகத்) திருச் செந்துறை இறைவர்க்கு எரமநல்லூர் நம்பியாயின பவ ருத்திரப்பட்டன் என்பவனிடத்தில் உறையூர்க் கூற்றத்தில் அமண்குடி என்ற ஊர்க்குரிய நிலத்தில் மூன்று வேலி நிலம் இறையிலியாகக் கொடுத்தான். கால் செய் நில வருமானத்துக்கு ஒரு திருவிளக்கு வீதம் பன்னிரண்டு திருவிளக்குகள் திருஉண்ணாழிகையில் எரிப்பிக்க ஏற்பாடு செய்தான்.*

**3. வீரசோழ இளங்கோவேளாயின ஒற்றி மதுராந்தகன் கல்வெட்டுக் காலம்**

*வேளிர் குலத்தவனான இந்த அரசனைக் குறிக்கும் கல்வெட்டுக்கள் நான்கு ஆகும்.*

1. *இராசகேசரி. ஆண்டு இரண்டு. திருச்செந்துறை*
2. *இராசகேசரி. ஆண்டு ஐந்து. அல்லூர்.*

*இவ்விரண்டு கல்வெட்டுக்களும் இராசகேசரி சுந்தரசோழன் காலத்தைச் சார்ந்ததாதல் வேண்டும். எனவே இவை கி.பி. 959க்கும் 964க்கும் உரியன.*

3. *பரகேசரி. ஆண்டு நான்கு. அல்லூர்*

இப்பரகேசரி உத்தமசோழன் ஆதல் வேண்டும். இக்கல்வெட்டின் காலம் கி.பி. 974 ஆதல் வெள்ளிடை.

4. இராசராசன் முதல் 3ஆம் ஆண்டுத் திருமலாபுரம் கல்வெட்டுக் குறிப்பிடும் வீரசோழ இளங்கோவேள் இவனே எனலாம்.

**ஒற்றி மதுராந்தகன் யார்**

'வீரசோழ இளங்கோவேள்' என்பது கொடும்பாளூர்ச் சிற்றரசர்களுக்கு அமைந்த இளவரசுப் பெயர்களில் ஒன்றாகும். ஒற்றி மதுராந்தகன் என்பவன் வீரசோழ இளங்கோவேள் என்ற பெயர் உற்றான். இவன் யாருடைய மகன் என்று வெளிப்படையாகத் தெரியவில்லை. உருத்திரன் என்பவன் ஒரு புலவன். இவனுடைய மகன் கண்ணன். இவனை உருத்திரங்கண்ணன் என்று சொல்லும் தமிழ் உலகம். தந்தையின் பெயரினை மகனுடைய பெயருடன் சேர்த்து வழங்குகின்ற வழக்கம் பண்டு நிலவியது. எனவே ஒற்றியூரடிகளின் மகன் மதுராந்தகன் ஒற்றி மதுராந்தகன் என்று வழங்கப்பட்டான் எனலாம். இதனால் வீரசோழ இளங்கோ வேளாயின ஆதித்தம் திருவொற்றியூரடிகளின் மகன் வீரசோழ இளங்கோ வேளாயின ஒற்றி மதுராந்தகன் என்பது புலனாகும்.

**ஒற்றி மதுராந்தகனின் காலம்**

பல ஆண்டுகள் ஆண்ட பரகேசரியின் - முதற் பராந்த கனின் 23ஆவது ஆட்சியாண்டில் - கி.பி. 930இல் திருச் செந்துறைக் கல்வெட்டில் குறிப்பிடப்படுபவன் வீரசோழ இளங்கோவேளாயின ஆதித்தம் திருவொற்றியூரடிகள். இவன் மகன் வீரசோழ இளங்கோவேளாயின ஒற்றி மதுராந்தகன். இவனைச் சுந்தரசோழன் உத்தம சோழன் காலக் கல்வெட்டுக்கள் குறிப்பிடுகின்றன. இவன் சுமார் 959க்கும் 974க்கும் இடைப்பட்டவன் ஆதல் உறுதியாகும்.

**ஒற்றி மதுராந்தகனின் கல்வெட்டுக்கள்**

இராசகேசரி பன்மரின் இரண்டாவது ஆட்சியாண்டில் உடையார் வீரசோழ இளங்கோவேள் ஆயின ஒற்றி மதுராந்தகன் விடேல் விடுகு கல்லால் 100 கழஞ்சு துளைப் பொன்னை ஈசானமங்கலத்துத் திருச்செந்துறை இறைவற்குக் கொடுத்தான். ஈசானமங்கலத்துச் சபையார் இந்நூறு கழஞ்சு பொன்னையும் எடுத்துக் கொண்டனர். கோவிலார் வரி கொடுத்துவரும் நிலத்தில் ஊர்ப்பாத்தியில் பாதி நிலமும், நீர்நிலத்தில் பாதியுமாக ஒன்றரை நிலத்துக்கு வரிகள் எல்லாவற்றில் இருந்தும் விலக்குத் தந்தார்கள் எனத் திருச்செந்துறைக் கல்வெட்டுக் கூறுகிறது.

கோப்பரகேசரி பன்மரின் நான்காவது ஆண்டில் வீரசோழ இளங்கோவேளாயின ஒற்றி மதுராந்தகன் அல்லூர் இறைவனுக்கு நிலதானம் செய்தான். அல்லூர் நகரத்தார்க்குத் திருஅமிர்து படிக்காக அரைவேலி நிலமும், திருப்பதியங்கள் பாடுகின்ற அடிகள்மார் மூன்று பேருக்கு நிலம் அரைவேலியும் ஆக ஒரு வேலி நிலம் தந்தான்; இறையிலியாகத் திருமுகம் போக்கினான். 'நிலம் வேலியும் குடிநீக்கிய தேவதானம் செய்து கொடுத்தோம்' என்று வந்த திருமுகத்தை அல்லூர் ஊர்ச் சபையினர் தொழுது தலைமேல் கொண்டு அறவோலை செய்து கொடுத்ததாக அல்லூர்க் கல்வெட்டுக் கூறுகிறது.

**ஒற்றி மதுராந்தகனார் மகனார் பராந்தக தேவர்**

அல்லூரில் உள்ள இராசகேசரியின் ஐந்தாவது ஆண்டுக்கு உரிய கல்வெட்டு ஒன்று பராந்தக தேவர் என்பவரைக் குறிப்பிடுகிறது. இப்பராந்தகதேவன் வீரசோழ இளங்கோவேளாயின ஒற்றி மதுராந்தகன் மகன் என்று அக்கல்வெட்டுக் கூறுகிறது.

வீரசோழ இளங்கோவேளாயின ஒற்றி மதுராந்தகனின் மகனாகிய பராந்தக தேவர்க்காக உறையூர்க் கூற்றத்து

அல்லூர் திருவடகுடி பரமேஸ்வரர்க்குத் திருஉணாழி கையில் நொந்தா விளக்கு ஒன்று இரவும் பகலும் எரிப்பிப்பதற்காகச் சந்திரக் கிரஹணத்தன்று முப்பது கழஞ்சு பொன் தரப் பெற்றது.

**மதுராந்தகன் ஆச்சபிடாரன்**

முதல் இராசராச சோழனுடைய மூன்றாவது ஆட்சியாண்டுக்கு உரிய திருமலாபுரம் கல்வெட்டு ஒன்று மதுராந்தக ஆச்சபிடாரன் என்பவனைப் பற்றிக் குறிக்கிறது. இந்தக் கல்வெட்டு வடமொழியும் தமிழ்மொழியும் கலந்து அமைந்த கல்வெட்டாகும். வடமொழிப் பகுதியில் மதுராந்தகன் ஆதித்ய பிடாரன் என்று இவன் குறிக்கப் படுகிறான். மதுராந்தக ஆதித்யபிடாரன் கோனாட்டுக் கொடும்பாளூரைச் சேர்ந்த வீரசோழ இளங்கோவேளான் என்பவனின் மகன் என்று கல்வெட்டுக் கூறுகிறது. கி.பி. 988இல் மதுராந்தகன் ஆதித்ய (ஆச்ச) பிடாரன் பிராம்மணர் உணவு உண்ணப் பொன் தந்துள்ளான். காலத் தொடர்பு நோக்கியும் பெயர் நோக்கியும் மதுராந்தக ஆதித்ய பிடாரனை வீரசோழ இளங்கோவேளாயின ஒற்றி மதுராந்தகனின் மகன் என்று கொள்ள முடிகிறது.

**4. மஹிமாலைய இருக்குவேளாயின பராந்தகன் வீரசோழன்**

மஹிமாலைய இருக்குவேளாயின பராந்தகன் வீரசோழன் என்னும் வேள்குல இளவரசனை இராசகேசரிக் கல்வெட்டுக்கள் குறிக்கின்றன.

1. மஹிமாலைய இருக்குவேளார்

குடுமியான் மலை - இராசகேசரி - யாண்டு : 3 - கி.பி. 960.

2. பராந்தகன் வீரசோழனான மஹிமாலைய இருக்குவேள்

சித்தூர் - இராசகேசரி - யாண்டு : 4 - கி.பி. 961.

3. மஹிமாலைய இருக்குவேளாயின பராந்தகன் வீரசோழன் பழூர் - இராசகேசரி - யாண்டு : 5 - கி.பி. 962.

4. மஹிமாலைய இருக்குவேளாயின பராந்தகன் வீரசோழன் நீர்ப்பழனி - இராசகேசரி - யாண்டு : 10 - கி.பி. 967.

மஹிமாலைய இருக்குவேளாரைக் குறிக்கும் இராசகேசரிக் கல்வெட்டுக்கள் நான்கும் இராசகேசரி இரண்டாம் பராந்தகனாகிய சுந்தரசோழன் (957-970) காலத்தன என உறுதியாகக் கருத இயல்கிறது.

'பராந்தகன் வீரசோழன்' என்னும் பெயர் இவனுக்கு உரியது. வீரசோழன் என்ற பெயர் குடும்பப் பெயராக - வீரசோழ இளங்கோவேளிர் என்னும் மரபினன் ஆதலின் அமைந்தது எனலாம். 'மஹிமாலைய இருக்குவேள்' என்பது இவன் கொண்ட அரசப் பெயர். பெருமைகளின் இருப்பிடமாக (மஹிமா + ஆலயன்) விளங்கி வருதலால் இப்பெயர் உற்றான் எனலாம்.

**கல்வெட்டுச் செய்திகள்**

கோவிராசகேசரிவர்மனின் மூன்றாவது ஆட்சி யாண்டில் திருநலக்குன்றத்துப் (குடுமியான்மலை) பரமேஸ்வரர் பாலாடி அருளவும், பாலமிர்துக்கும், இலையமிர்துக்குமாக முப்பத்தொரு பசுக்களைக் கொடுத்தான்.

கோவிராசகேசரியின் நான்காவதாண்டில் சிந்தையூர் (சித்தூர்) திருவக்நீஸ்வரத்துப் பரமேஸ்வரர்க்கு நிலக் கொடை தந்துள்ளான்.

மஹிமாலைய இருக்குவேளாயின பராந்தகன் வீரசோழன் இராசகேசரியின் 5ஆம் ஆண்டில் விளத்தூர் நாட்டுத் திருப்பழூவூர் பரமேஸ்வரர்க்கு வேண்டுவன வற்றுக்காக ஒரு வேலி நிலம் கொடுத்துள்ளான். (346 of 1918)

இராசகேசரி பன்மரின் பத்தாவது ஆண்டில் கன்னி ஞாயிற்று உத்திரட்டாதி நாளில் சந்திரக் கிரஹணம் ஏற்பட்டது. அன்று மஹிமாலைய இருக்குவேளாயின பராந்தகன் வீரசோழன் திருப்பராய்த்துறைக் கோவிலில் இருந்தான். அங்கு இருந்து கொண்டு உறந்தூர்க் கூற்றத்தில் இருந்த நீர்ப்பழனி மஹாதேவர் கோயிலுக்கு இறையில் இழித்துக் குடிநீக்கி தேவதானம் ஆக நிலம் தந்தான் என்று நீர்ப்பழனிக் கல்வெட்டுக் கூறுகிறது.

**யார் காலத்தவன்**

மஹிமாலைய இருக்குவேளாயின பராந்தகன் வீர சோழன் முதற் பராந்தகசோழனின் காலக் கொடும்பை வேள் ஆவான். இந்த இராசகேசரிக் கல்வெட்டுக் கண்டராதித்தன் (950-957) அல்லது இரண்டாம் பராந்தகன் ஆகிய சுந்தர சோழன் காலத்துக்கு உரியது என வரலாற்று ஆய்வாளர் கருதுவர். (The cholas by K.A. Neelakanda Sasthriyar. Vol I Page 370 footnote. A.R.E. Year 1919 part II paragraph 10). இக்கருத்துப்படி நோக்குங்காலத்து இராசகேசரியின் கல்வெட்டுக்கள் நான்கும் கண்டராதித்த சோழன் அல்லது இரண்டாம் பராந்தகனாகிய சுந்தரசோழன் காலத்தன ஆகின்றன.

திரு. கே.வி. சுப்பிரமணிய ஐயரவர்கள் மஹிமாலைய இருக்குவேளின் பெயர் பராந்தகன் வீரசோழன். இப் பெயரின் முதற் பகுதி இவன் பூதிபராந்தகனின் மகன் என்ற எண்ணம் ஊட்டுகிறது. மஹிமாலைய இருக்குவேளைக் குறிக்கும் இராசகேசரி 3, 4, 10ஆம் ஆண்டுக் கல் வெட்டுக்கள் இரண்டாம் பராந்தகனாகிய சுந்தர சோழனுக்குரியனவாதல் கூடும். கி.பி. 958, 959, 65ஆம் ஆண்டுகளொடு தொடர்புடையன என்பர்.

மஹிமாலைய இருக்குவேளாயின பராந்தகன் வீரசோழன் என்பது வேளரசனின் பெயர். "பராந்தகனு

டைய மகன் வீரசோழன் பூதி பராந்தகனுடைய மகன் வீரசோழன். எனவே பராந்தகன் வீரசோழன் எனப் பட்டான் என்ற கருத்து பெயரின் அடிப்படையாக அமைத்த ஊகக் கருத்தேயாகும்.

சோழர் கலைப்பாண்ணி வல்ல கலையியல் பேரறிஞர் எஸ்.ஆர். பாலசுப்பிரமணியம் அவர்கள் பூதிவிக்கிரமகேசரி கட்டிய மூவர் கோயில் மஹிமாலைய இருக்குவேளின் மேற்பார்வையில் கட்டப்பட்டது என்னும் அரிய உண்மை யினைப் புலனாக்கியுள்ளார். (சோழர் கலைப்பாணி) பூதி விக்கிரமகேசரி இரண்டாம் பராந்தகனாகிய சுந்தர சோழன் காலத்தில் கி.பி. 962இல் வீரபாண்டியனோடு போரிட்டு வென்றான். மேற்கண்ட கருத்துப்படி விக்கிரமகேசரியும் மஹிமாலைய இருக்குவேளும் சமகாலத்தவ ராகின்றனர். அவ்வகையில் நோக்கும்போதும் பூதிவிக்கிரம கேசரியும் மஹிமாலைய இருக்குவேளும் இரண்டாம் பராந்தகனாகிய சுந்தரசோழன் காலத்தவராவர்.

**பராந்தகனும் பராந்தக வீரசோழனும்**

அல்லூரில் உள்ள இராசகேசரி பன்மருடைய ஐந்தாவதாண்டுக்கு உரிய கல்வெட்டு ஒன்று 'பராந்தக தேவர்' என்பவனைக் குறிப்பிடுகிறது. இப்பராந்தகதேவன் வீரசோழ இளங்கோயின ஒற்றி மதுராந்தகனார் மகனார் பராந்தகதேவன் என்று கல்வெட்டில் குறிப்பிடப்படுகிறான். இப்பராந்தகனும் இச்சமகாலக் கல்வெட்டுக்களில் 'மஹிமாலைய இருக்குவேளாயின பராந்தக வீரசோழன்' என்று குறிக்கப்பெறும் பராந்தகனும் ஒருவராதல் கூடும்.

மஹிமாலைய இருக்குவேளாயின பராந்தகன் வீர சோழன் இரண்டாம் பராந்தகன் காலத்தவன்; பூதி விக்கிரம கேசரிக்குச் சமகாலத்தவன். கொடும்பாளூர்க் கோவிற் பணிகளை மேற்பார்வையிட்டவன். வீரசோழ இளங்கோ வேள் மகனாகிய ஒற்றி மதுராந்தகன் மகனாகலாம் முதலிய செய்திகளைக் கல்வெட்டுக்கள் புலப்படுத்துகின்றன.

## 5. மதுராந்தக இளங்கோவேளும் இருக்குவேளும்

மதுராந்தக இளங்கோவேள் என்னும் கொடும்பாளூர் இளவரசனை ஒரு கல்வெட்டும், மதுராந்தக இருக்குவேள் என்ற கொடும்பாளூர் வேளரசனைச் சில கல்வெட்டுக்களும் குறிப்பிடுகின்றன. சில சிக்கலான பிரச்சனைகளைக் கடந்து காலம் கணிக்க வேண்டியுள்ளது.

*1. மதுராந்தகன் ஆச்ச (ஆதித்ய) பிடாரன்*

*திருமலாபுரம் - முதல் ராசராசன் - ஆண்டு : 3 - கி.பி. 988.*

*2. மதுராந்தக இளங்கோவேள்*

*அல்லூர் - முதல் இராசராசன் - ஆண்டு : 22 - கி.பி. 997.*

*3. மதுராந்தக இருக்குவேள்*

*1) மதுராந்தக இருக்குவேளாயின ஆதித்தன் விக்கிரமகேசரி*

*குடுமியான் மலை - பரகேசரி - யாண்டு : 21.*

*2) மதுராந்தக இருக்குவேளாயின ஆச்சன் விக்கிரமகேசரி*

*குடுமியான் மலை - பரகேசரி - யாண்டு : 21.*

*3) மதுராந்தக இருக்குவேளாயின ஆதித்தம்பூதி*

*1. திருச்செந்துறை - பரகேசரி - யாண்டு: 22.*

*2. திருச்செந்துறை - பரகேசரி - யாண்டு: 23.*

மேலே கண்ட வேந்தர்களில் இடையில் அமைந்த மதுராந்தக இருக்குவேள் பற்றி கருத்துக்கள் :

1. மதுராந்தக இருக்குவேள் ஆச்சன் விக்கிரமகேசரி, ஆதித்யன் விக்கிரமகேசரி என்றும் குடுமியான்மலைக் கல்வெட்டுக்களில் கூறப்படுவான். இவன் கொடும்பாளூர் மூவர்கோயில் பூதிவிக்கிரமகேசரியின் கல்வெட்டில்

குறிக்கப்படாத சிற்றரசன். ஆதித்தசோழன் (871-907) அவன் மகன் பராந்தகன் (907-953) ஆகியோர் காலத்தில் வாழ்ந்தவன் என்பர். (The cholas by K.A. Neelakanda Sastri. Vol. I Page No. 188, footnote.)

மதுராந்தக இருக்குவேளைப் பரகேசரிவர்மனுடைய 21, 22, 23ஆம் ஆண்டுக் கல்வெட்டுக்கள் குறிப்பிடுகின்றன. மிக அதிக காலம் - கிட்டத்தட்ட 46 ஆண்டுக்காலம் ஆண்ட பரகேசரி என்ற பட்டமுடைய மன்னன் முதல் பராந்தகன். இவர் கருத்துப்படி இக்கல்வெட்டுக்கள் 928, 929, 930 ஆம் ஆண்டுக்குரியனவாகும் என்பதில் ஐயமில்லை.

2. பூதிபராந்தகன் கோனாட்டு அரசன். இவன் இளவல் பூதியாதிச்சபிடாரன் ஆகிய செம்பியன் இளங்கோவேள் - பூதிபராந்தகனுக்குப்பின் அவன் தம்பி ஆட்சி செய்தான். இவன் மகன் மதுராந்தக இருக்குவேளாயின ஆதித்தம்பூதி. இவன் ஆதித்யன் விக்கிரமகேசரி எனவும் கூறப்படுவான். மதுராந்தக இருக்குவேளைக் குறிப்பிடும் பரகேசரிக் கல்வெட்டுக்கள் முதல் பராந்தக சோழன் காலத்தனவாகும். இவன் பராந்தக சோழனுடைய இறுதிக்காலம் வரையிலும் இருந்தான். இரண்டாம் பராந்தகசோழனுடைய காலம் வரை வாழ்ந்தவன். 928-9இல் இருந்து 958வரை இருந்தவன் என்று கருதுவர்.

பரகேசரிக் கல்வெட்டுக்களின் ஆட்சியாண்டுகள் அதிகமாக உள்ள காரணத்தால் இந்தக் கல்வெட்டுக்களை முதற் பராந்தக சோழன் காலத்ததாகக் காட்டுகிற பூதி ஆதித்தபிடாரனின் மகன் என்னும் கருத்துப் பெயரின் அடிப்படையிலே அமைந்தது ஆகும்.

**இராசகேசரியும் பரகேசரியும்**

இராசகேசரி ராசராசனுடைய திருமலாபுரம் வடமொழிக் கல்வெட்டுக் கி.பி. 988க்கு உரியது. வீர சோழ இளங்கோவேளின் (வீரசோழ இளங்கோவேளாயின ஒற்றி

மதுராந்தகன்) மகன் மதுராந்தக ஆச்சபிடாரன் என்று தமிழ்ப் பகுதி குறிக்கிறது. மதுராந்தகன் எனவும் ஆதித்த அல்லது ஆச்ச பிடாரன் எனவும் இவ்வரசன் அழைக்கப் பட்டதனை இக்கல்வெட்டால் அறியலாம்.

அல்லூரில் உள்ள முதல் இராசராசனின் 22ஆம் ஆண்டுக்குக் கி.பி. 997க்கு உரிய கல்வெட்டு "கெ(ா)... மதுராந்தக.... ளங்கோவேளார்" என்ற கொடும்பாளூர் வேளிர் இளவரசனைக் குறிக்கிறது. கொடும்பாளூர்

| | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| மதுராந்தக | ஆ | ச் | ச | பி | டா | ர | | |
| | ஆ | தி | த் | ய | ன் | | இளங்கோ | |

வேளாரைப் பற்றிக் குறிப்பிடும் சாசனம் இது என்று உறுதியாகக் கருதலாம்.

'இம்மதுராந்தக ஆதித்யன்' மதுராந்தக இருக்கு வேளாயின ஆச்சன் விக்கிரம கேசரி ஆயினான் எனல் கூடும். அவ்வாறாயின் பரகேசரிக்குரிய கல்வெட்டுக்கள் அனைத் தும் முதல் இராசேந்திர சோழன் (1012-1044) காலத்தன வாகும். 21ஆம் ஆண்டுக்குச் சமமான கி.பி. 1033க்குரியன ஆகின்றன.

### கல்வெட்டுச் செய்திகள்

#### மதுராந்தக இளங்கோவேள்

இராசராசனின் 22ஆவது ஆட்சியாண்டில் அல்லூர் திருவடகுடிப் பரமேஸ்வரர்க்கு மதுராந்தக இளங்கோ வேளாளர் தேவியார் பிராந்தகன்... அங்காடிக் குடிநைக்கல் லால் 33 கழஞ்சு பொன் தந்தான். கழஞ்சுக்குக் கலநெல்லாக வட்டி பெற்று நிவந்தம் நடத்தினர் என்று அல்லூர்க் கல்வெட்டு அறிவிக்கிறது.

## மதுராந்தக இருக்குவேளாயின ஆச்சன் விக்கிரமகேசரி

*குடுமியான் மலைப் பரகேசரியின் 21ஆவதான கல்வெட்டுக்களில் ஆச்சன் விக்கிரமகேசரி, ஆதித்யன் விக்கிரம கேசரி என்று குறிக்கப்படுவான். வீரசோழ இருக்குவேள் மகன் மதுராந்தக ஆதிச்ச அல்லது ஆதித்ய படாரனின் அரசப் பெயரிதுவெனல் கூடும். இவ்விருக்குவேள் திரு நலக்குன்ற (குடுமியான்மலை)முடைய பரமேஸ்வரர்க்குத் திருச் சந்தன முதலாகவும், திருவமிழ்து, திருவமிர்துக்கு வேண்டுவனவற்றுகாகவ்ம் குன்றியூர் நாட்டு மருதங்குடியை முழுமையாகத் தந்துள்ளான்.*

## மதுராந்தக இருக்கு வேளாயின ஆதித்தம் பூதி

*பரகேசரிவர்மனின் 22, 23ஆம் ஆண்டுக்குரிய திருச்செந்துறைக் கல்வெட்டுக்களில் குறிப்பிடப்படுகிறான். இப் பரகேசரி கல்வெட்டுக்களை முதற் பராந்தகனுக்கும் உரியதாகக் கொள்ளவியல்கிறது. அவ்வாறு கொண்டால் ஆதித்தம்பூதி பெயரியல் அடிப்படையில் வீரசோழ இளங்கோவாயின ஆதித்தம் திருவொற்றியூரடிகளுக்குத் தந்தையா? என்ற ஐயம் நேர்கிறது.*

*மதுராந்தக இருக்குவேளாயின ஆதித்தம்பூதி ஈசான மங்கலத்துத் திருச்செந்துறைப் பெருமானடிகளுக்குக் 'கணக்குடி கோயிலார் தோட்டம்' என்ற பகுதியை இறையிலி தேவதானமாகத் தந்தான், பரகேசரியின் 23ஆவது ஆண்டில் மதுராந்தக இருக்கு வேளாயின ஆதித்தம் பூதி தன் திருநட்சத்திரமான பூரட்டாதி நாளில் நெய்யாடி அருளவும் பயற்றுப் போன்கம் முதலானவற்றுக்காகவும் உறையூர்க் கூற்றத்து வேலி. மங்கலத்தை முழுமையாக இறையிலியாக நீரோடு அட்டிக் கொடுத்தான்.*

## தொகுப்புரை

*வீரசோழ இளங்கோவேளாயின பராந்தகன் குஞ்சர மல்லன், இளவரசுப் பெயராக வீரசோழ இளங்கோ*

வேளான் எனப்பட்ட முதல் பராந்தகன் கால இளவரசன்.

மதுராந்தக இருக்குவேளாயின ஆதித்தம்பூதி என்பவன் பராந்தகன் காலத்தவனாகலாம். ஆதித்தம்பூதி மகன் ஆதித்தன் திருவொற்றியூரடிகள் எனலாம்.

திருவொற்றியூரடிகளின் மகன் ஒற்றி மதுராந்தகன் இவன் இரண்டாம் பராந்தகன் காலத்தவன்.

ஒற்றி மதுராந்தகனுக்கும் பராந்தகன் என்ற மகனுண்டு. இப்பராந்தகன் மஹிமாலைய இருக்கு வேளாயின பராந்தகன் வீரசோழன் ஆதல் உறுதி.

வீரசோழனுக்கு மதுராந்தக ஆச்சபிடாரன் என்ற மகன் இருந்ததாகக் காணப்பெறுகிறது. இவ்வீரசோழன், வீரசோழனான ஒற்றி மதுராந்தகன் ஆவான். இவர் மகன் மதுராந்தக ஆச்சபிடாரன் மதுராந்தக இருக்குவேளாயின ஆச்சன் விக்கிரமகேசரி என்று குறிப்பிடப்பெறுபவன் எனலாம்.

இக்கருத்துக்களின் அடிப்படையில் இவ்வரசர்களைக் கீழ்க்கண்டவாறு வரிசைப்படுத்த இயல்கிறது.

மதுராந்தக இருக்குவேளாயின ஆதித்தம்பூதி

|

வீரசோழ இளங்கோவேளாயின ஆதித்தம்
திருவொற்றியூரடிகள்

|

வீரசோழ இளங்கோவேளாயின ஒற்றி மதுராந்தகன்

|

| | |
|---|---|
| பராந்தகதேவன் மஹிமாலைய இருக்குவேளாயின பராந்தக வீரசோழன் | மதுராந்தக ஆதிச்சபிடாரன் மதுராந்தக இருக்குவேளாயின ஆச்சன் விக்கிரமகேசரி |

**6. செம்பியன் இருக்குவேளாயின பூதிபராந்தகன்**

செம்பியன் இருக்குவேளாயின பூதிபராந்தகன் என்ற கொடும்பாளூர் வேளிர்குல அரசனை குறிப்பிடும் கல்வெட்டுக்கள் பின்வருமாறு:

1. குடுமியான் மலை பரகேசரி ஆறாவது ஆண்டு
2. நங்கவரம் பரகேசரி பத்தாவது ஆண்டு
3. குடுமியான் மலை பரகேசரி பத்தாவது ஆண்டு
4. அந்தநல்லூர் பரகேசரி
5. அந்தநல்லூர் பரகேசரி 13ஆவது ஆண்டு
6. அந்தநல்லூர் பரகேசரி 14ஆவது ஆண்டு
7. அந்தநல்லூர் பரகேசரி 14ஆவது ஆண்டு
8. அந்தநல்லூர் பரகேசரி 19ஆவது ஆண்டு

இக்கல்வெட்டுக்களில் கண்ட பரகேசரி யார்? செம்பியன் இருக்குவேளாயின பூதிபராந்தகன் எக் காலத்தவன் என்பதனை நோக்குவோம்.

**திரு. வெங்கய்யா கருத்து**

பூதிவிக்கிரமகேசரியின் மனைவியார் இருவர். கற்றளி வரகுணை என்பவர் அவர் என்று கொடும்பாளூர்க் கல்வெட்டுக் கூறுகிறது. கற்றளி என்னும் விக்கிரமகேசரியின் மனைவியின் பெயரைப் பரகேசரிவர்மனுடைய ஆறாவ தாண்டுக்குரிய கல்வெட்டு ஒன்று (337 of 1904) குறிப்பிடு கிறது. இதனால் விக்கிரமகேசரி செம்பியன் இருக்குவேள் என்ற பெயருடையவன் என்ற முடிவு ஏற்படுகிறது. (A.R.E. 1909 Part II Paragraph No. 90)

செம்பியன் இருக்குவேளாயின பூதி பராந்தகன் (349 of 1903) என்ற கொடும்பாளூர்க் குல மன்னன் திருச்சி மாவட்ட அந்தநல்லூரில் சிவபெருமானுக்குக் கற்றளி ஒன்று

கட்டியுள்ளான். (358 and 359 of 1903) கொடும்பாளூர்க் கல்வெட்டு பூதிவிக்கிரமகேசரிக்குப் பராந்தகன் ஆதித்ய வர்மன் என்று இரண்டு மக்கள் இருந்ததாகக் கூறுகிறது. செம்பியன் இருக்குவேளாயின பூதிபராந்தகன் விக்கிரமகேசரியின் மகன் பராந்தகன் ஆதல் கூடும், என்று திரு. வெங்கய்யா முதன்முதலில் ஆராய்ச்சி செய்து எழுதினார். (A.R.E. Year 1909. Part II Paragraph 91)

**திரு. எச். கிருஷ்ணசாஸ்த்திரியின் கருத்து**

திரு. வெங்கய்யா, செம்பியன் இருக்குவேளாயின பூதிபராந்தகனைப் பூதிவிக்கிரமகேசரியின் மகனாகக் கருதுகிறார். இக் கருத்தினை மேற்கோளாகக் கொண்டு எச்.கே. சாஸ்திரியவர்கள் கல்வெட்டுக்களை வகைப் படுத்தியுள்ளனர். எச்.கே. சாஸ்திரி South Indian Inscriptions Vol. III கல்வெட்டு எண். 139இன் முன்னுரையில் எழுதி யுள்ளதாவது.

செம்பியன் இருக்குவேளாயின பூதிபராந்தகனைத் திரு. இராவ்பஹதூர் வெங்கய்யா அவர்கள் கொடும் பாளூர்ப் பூதிவிக்கிரமகேசரியின் மகனான பராந்தகனாகக் கருதுகிறார். அக்கருத்துத் தொடர்ச்சியில் பரகேசரியின் 14ஆவது ஆண்டுக்கு உரிய இந்த அந்த நல்லூர்க் கல்வெட்டு உத்தமசோழனுக்கு (970-985) உரிய கல்வெட்டாகும் என்று எழுதியுள்ளார்.

**நீலகண்ட சாத்திரியார்**

அந்தநல்லூரில் உள்ள பதினான்காவதாண்டு கல்வெட்டுப் பரகேசரி உத்தமசோழனுடைய பதினான் காவதாண்டுக்குக் கி.பி. 984க்கு உரியதாக நீலகண்ட சாத்திரியார் ஒப்புக்கொள்கிறார். (The Cholas of Vol. I. P. 471 and Footnote)

**வரகுணாட்டியும் வரகுணையும்**

இலால்குடியில் இருந்து கிடைக்கும் ஒரு கல்வெட்டு நங்கை வரகுணப் பெருமனார் என்பவன் சோழவரசனின் உடன்பிறந்தவன் என்று கூறுகிறது. பராந்தக இளங்கோ வேளார் ஆயின தென்னவன் இளங்கோவேளாரின் மனைவியாக இவன் குறிக்கப்படுகிறான். இவன் விக்கிரமகேசரியே என்று இக்கல்வெட்டை Epigraphia Indian Vol. XX p. 53-இல் பதிப்பித்த கே.வி. சுப்பிரமணிய ஐயர் குறிப்பிடுகிறார்.

பரகேசரிவர்மனின் ஆறாம் ஆண்டுக் குடுமியான் மலைக் கல்வெட்டு ஒன்று வரகுணாட்டிப் பெருமானார் என்பவரைச் செம்பியன் இருக்குவேளாரின் மனைவி எனக் குறிப்பிடுகிறது. இதனால் பூதிவிக்கிரமகேசரிக்கு செம்பியன் இருக்குவேள் என்ற பெயர் இருந்தது என்ற முடிவு ஏற்படுகிறது என்பர். ஆனால் இங்குக் குறிக்கப்பெறும் வரகுணாட்டி சோழ அரசியினின்றும் வேறு ஆனவள். முத்தரையரின் மகள், இதனால் செம்பியன் இருக்குவேள் பராந்தக இளங்கோவேளார் அன்று. நம் கருத்துப்படிச் சோழ இளவரசியைப் பிற்பகுதியில் மணந்தவன் என்பதே சரியானது.

**பூதியின் மகன் அல்லன்**

முத்தரையரின் மகள் விக்கிரமகேசரியின் மனைவி என்றும், விக்கிரமகேசரியின் மூத்த மகனான பராந்தக இளங்கோவேளான் சோழ இளவரசியின் கணவன் என்றும், எண்ண இயல்கிறது. பரகேசரியின் ஆறாம் ஆண்டு முதல் பராந்தகனின் ஆறாம் ஆண்டு ஆகலாம். இவ்வாண்டு வீரபாண்டியனோடு விக்கிரமகேசரி போரிட்ட ஆண்டுக்கு 52 ஆண்டுகள் முற்பட்டது ஆகும். எனவே செம்பியன் இருக்குவேளும் முத்தரையர் மகள் வரகுணையும் கொடும்பாளூர்ச் சாசன மரபில் குறிக்கப்படாதவர் என்று

கருதுவதே சிறந்ததாகும். மதுராந்தக இருக்குவேள், மஹிமாலைய இருக்குவேள் முதலான இருக்குவேளிர் அரசர்க்குக் கொடும்பாளூர்ப் பட்டியலில் இடமில்லை என்று திரு. நீலகண்ட சாத்திரியார் கூறுவர். (The Cholas Vol. I Page 188 FN)

**கே.வி. சுப்பிரமணிய ஐயர்**

பரகேசரிவர்மனின் 6ஆவதாண்டுக் குடுமியான் மலைக் கல்வெட்டுக் குறிக்கும் வரகுணாட்டியை விக்கிரம கேசரியின் மனைவி வரகுணாட்டி எனவும் செம்பியன் இருக்குவேள் விக்கிரமகேசரி எனவும் குறிப்பர். இது பொருத்தப்பாடற்ற சிக்கல் நிறைந்த தீர்வு ஆகும்.

பூதிபராந்தகன் செம்பியன் இருக்குவேள் என்ற பெயரை உடையவன் பரகேசரியின் (முதற் பராந்தகனின்) 6, 10, 13, 19ஆம் கல்வெட்டுக்களில் குறிக்கப்படுகிறான். சுமார் 913-926 வரை கல்வெட்டுக் களால் அறியப்படுகிறான்.

விக்கிரமகேசரியின் மகன் பராந்தகனே பூதிபராந்தகன் ஆவான். இவன் மக்கள் பராந்தகன் வீரசோழனான மஹிமாலைய இருக்குவேளார், பராந்தகன் குஞ்சர மல்லனை வீரசோழ இளங்கோவேள், பராந்தகன் சிறிய வேளார் ஆகியோராவர் எனக் குறிப்பர்.

பூதிவிக்கிரமகேசரியைக் கே.வி. சுப்பிரமணிய ஐயர் முதல் ஆதித்தசோழன் காலத்தவராகக் கொள்வர். விக்கிரமகேசரியின் மகன் பராந்தகன் காலத்தவன் ஆகிறான். ஆனால் பூதிவிக்கிரமகேசரி இரண்டாம் பராந்தக சோழன் காலத்தவன்.

செம்பியன் இருக்குவேளாயின பூதிபராந்தகன் முதல் பராந்தகன் காலத்தவன் என்ற கருத்து உறுதியானது. அதனால் பூதிபராந்தகன் விக்கிரமகேசரியின் மகனாதல் இயலாது.

செம்பியன் இருக்குவேளாயின பூதிபராந்தகன் மக்கள் பற்றிய கருத்துக்கள் சொல்லாய்வு அடிப்படையாக பிறந்தவை ஆகும்.

**கல்வெட்டுக்களின் காலம்**

அந்தநல்லூரில் உள்ள பரகேசரிவர்மனின் 13ஆவது ஆண்டுக் கல்வெட்டு, 'செம்பியன் இருக்குவேளாயின பூதிபராந்தகன்' திருவாலந்துறை பரமேஸ்வரர்க்கு கல்லால் கோவில் கட்டி ஜலசம்ரோஷணம் செய்ததாகக் கூறுகிறது. இங்குள்ள பரகேசரியின் 19ஆவது ஆண்டுக் கல்வெட்டும் இதை உறுதி செய்கிறது. திருவாலந்துறைக் கோயில் கற்றளியாக்கப் பெற்ற செய்தியைத் தரும் அக்கல் வெட்டைப் பரகேசரி உத்தமசோழனுடைய 13ஆவது ஆண்டுக்கு கி.பி. 983க்கு உரியதாக வெங்கய்யா, கிருஷ்ண சாத்திரியார், நீலகண்ட சாத்திரியார் ஆகியோர் கூறுவர்.

திருவாலந்துறை கோயிலில் உள்ள பரகேசரியின் 15ஆவது ஆண்டுக்கு உரிய கல்வெட்டுக் கன்னர தேவனின் மனைவி பூதிமாதேவடிகளைக் குறிப்பிடுகிறது. கன்னரதேவன் முதல் பராந்தகனின் உடன் பிறந்தவன். திருச்செந்துறைக் கோயில் கி.பி. 983இல் கற்றளியாக்கப் பட்டிருப்பதால் இந்தக் கல்வெட்டு கி.பி. 985க்கு உரியதாகும். எனவே இதன் காலம் சிந்திக்கத்தக்கது.

பரகேசரி உத்தமசோழன் (கி.பி. 907-985) 16 ஆட்சியாண்டுகளை உடையவன். பரகேசரியின் 19ஆவது ஆண்டுத் திருவாலந்துறைக் கல்வெட்டு இவனைக் குறிக்கிறது. பரகேசரி உத்தமசோழன் 19ஆம் ஆட்சியாண்டு இல்லாதவன். இக்கல்வெட்டில் அரையன், வீரசோழன் என்பவன் பரகேசரியின் 25ஆவது ஆண்டுக் கல்வெட்டில் கூறப்படுகிறான். பரகேசரி பட்டத்துடன் ஆண்ட சோழர்கள் :

1. முதல் பராந்தகன் 907 - 953. 47 ஆண்டுகள்

2. பரகேசரி அரிஞ்சயன் 156-57. 2 அல்லது 3 ஆண்டுகள்

3. பரகேசரி உத்தமசோழன் 970 - 985. 16 ஆண்டுகள்

4. பரகேசரி இராசேந்திரன் 1012-1044. 33 ஆண்டுகள்

இவர்களுள் முதற் பராந்தகனும் முதல் இராசேந்திரனும் 19 ஆண்டுகளும் அதற்கு மேலும் ஆண்டனர். இவ்விரண்டு 19, 25 ஆண்டுக் கல்வெட்டுக் களும் உறுதியாக முதற் பராந்தகன் காலத்தனவாகும் என்று கூறுதல் பொருந்தமானது ஆகும்.

கே.வி. சுப்பிரமணிய ஐயர் திருவாலந்துறை 15ஆவது ஆண்டு பரகேசரி கல்வெட்டுக் கி.பி. 920க்கு உரியது என்பர். பரகேசரி 14ஆவது ஆண்டுக் கல்வெட்டால் கி.பி. 921இல் திருவாலந்துறை கற்றளியாக்கப்பட்டமை தெரிகிறது. கற்றளியாகும் முன்பே கல்வெட்டு எழுதப்படாது ஆதலின் இக்கல்வெட்டு அடுத்து வரும் பரகேசரிக்கே உரியதேயாகும்.

பூதி பராந்தகனைக் குறிக்கும் பரகேசரி 14, 19க்கு உரிய கல்வெட்டுக்கள் முதற் பராந்தகன் காலத்தவை. 921-926க்கு உரியவை.

பூதி பராந்தகனின் மனைவி புலியூர் நாட்டடிகள் அந்த நல்லூரர் பரகேசரியின் பத்தாமாண்டுக் கல்வெட்டு பரகேசரி உத்தம சோழனின் பத்தாமாண்டுக்கு உரியது ஆகும். (கி.பி. 980)

பிற பரகேசரிக் கல்வெட்டுக்கள் முதல் பராந்தக சோழனுக்கே உரியன எனலாம்.

**பூதிபராந்தகனின் காலம்**

செம்பியன் இருக்குவேளாயின பூதிபராந்தகனைக் கல்வெட்டுக்கள் குறிப்பினும் அவன் மனைவியர் தந்த கொடைச் செய்திகளை அதிகம் தருகின்றன. முதற்

பராந்தகனின் 14, 19ஆம் ஆண்டுக் கல்வெட்டுக்களே இவன் கொடுத்தவற்றைக் குறிக்கின்றன. இவை 921, 936க்கு உரியன. எனவே இவன் பராந்தக சோழன் காலத்திய கொடும்பாளூர் அரசரில் ஒருவன் எனலாம்.

செம்பியன் இருக்குவேளாயின பூதிபராந்தகன் முதல் பராந்தகன் காலத்தவன். பூதிவிக்கிரமகேசரியின் முதுமைப் பருவமும், அவன் மகன் பராந்தகனின் காலமும் இரண்டாம் பராந்தகனான சுந்தரசோழன் காலத்தன. எனவே பூதிபராந்தகனை அவர்களோடு தொடர்பு படுத்தல் இயலாது.

**திருவாலந்துறை கற்றளி எடுத்தமை**

முதல் பராந்தகனின் 14ஆவது ஆட்சி ஆண்டில் அந்தவ நல்லூர்த் திருவாலந்துறைப் பரமேஸ்வரர்க்குச் செம்பியன் இருக்குவேளாயின பூதிபராந்தகன் கல்கோயில் கட்டினான். ஜலசம்ரோஷணம் செய்வித்தான். இதனை,

> **"ஸ்வஸ்திஸ்ரீ நமஸ்ஸிவாய கொப்பரகேஸரிவர்மர்க்கு குயாண்டு 14ஆவது கிளியூர் நாட்டு அந்துவநல்லூர் திருவாலந்துறை பரமேஸ்வரர்க்குச் செம்பியன் இருக்கு வேளாயின பூதிபராந்தகன் கற்றளி எடுத்து ஜலஸம் ரோஷணம் செய்து....**

எனவும்,

> **திருவாலந்துறைப் பெருமானடிகளுக்கு செம்பியன் இருக்கு வேளாயின பூதிபராந்தகன் கற்றளி எடுப்பித்து**

எனவும் இவ்வூர்க் கல்வெட்டுக்கள் உரைக்கின்றன.

**கொடைகள் தந்தமை**

செம்பியன் இருக்குவேளாயின பூதிபராந்தகன் கோயில் எடுத்து ஜலசம்ரோஷணம் செய்து உறையூர்க் கூற்றத்து முள்ளிக்குறும்பில் தேவரது பழந்தேவதானம் ஒரு வேலி நீக்கி ஏழரை வேலி நிலத்தை இறையிலி தேவ தானமாகத் தந்தான். இந்நிலம் திருச்செந்நடை, திருவிளக்கு,

திருமெழுக்குமுற்று திருப்பதியம் பாடல் முதலானவற்றுக் காகத் தரப்பெற்றது.

பூதிபராந்தகன் கற்றளி எடுத்தபின் தேவதானம் செய்வதற்குப் பரகேசரிபன்மற்கு விண்ணப்பம் செய்தான். அந்துவநல்லூர் காணியருகில் நன்செய் மூன்று மாவினைக் குடிநீக்கியதேவதானம் ஆகத் தந்தான். வேலிக்கு 120 கலமாக 3 வேலிக்கு 360 கலம் சூலக்காலால் நெல் அளத்தல் வேண்டும்.. பரகேசரிவர்மனின் அருளிப் பாட்டினால் 'அரையன் வீரசோழன் என்பவனுக்கு குடிநீக்காத் தேவதானம் காணிக்கடைமையாகச் செய்து கொடுக்க' என்று பூதிபராந்தகனுக்கு ஓலை வந்தது. பூதி பராந்தகன் தன் கன்மி உறத்தூர்த் திணையை ஏவினான். அவனும் அப்பணி செய்தான் என்று பரகேசரியின் 19ஆவது ஆண்டுக் கல்வெட்டுக் கூறுகிறது. அரையன் வீரசோழனும் அவன் பெற்ற விதிகளின்படி மதுரை கொண்ட முதற் பராந்தகனு டைய 25ஆவது ஆண்டில் ஊரார்க்கு விட்டுக் கொடுத்ததனை,

> கொப்பரகேசரி பர்மர்க்கு யாண்டு 25ஆவது அரயன் வீரசோழனென் இவ்வூ
> ர்த் தெவதானம் மூவேலி நிலமும் நான் பெற்றுடைய பரிசே அந்தவநல்லூர்றா
> ரார்க்கு விட்டுக் கொடுத்தேன் அந்தவ நல்லூர்ராார்க்கு அரயன் வீரசோழனேன் இது
> பன்மா ஹேஸ்வர ஷை

என்ற கல்வெட்டினால் அறியலாம்.

**மனைவியர்**

பூதிபராந்தகனுக்கு ஐவர் மனைவியர் இருந்ததனைக் கல்வெட்டுக்கள் காட்டுகின்றன. வரகுணாட்டி, பெறனங்கை, நங்கை நந்தேவி, திங்கள நிம்மடிகள், புலியூர் நாட்டடிகள் என்பவர் பூதிபராந்தகனின் மனைவியராவர்.

### வரகுணாட்டி

செம்பியன் இருக்குவேளின் தேவியாகிய வர குணாட்டி முத்தரையர் அரசன் ஒருவனுடைய மகன். இவன் திருநலக்குன்றமுடைய பெருமானுக்குப் பரகேசரி யின் 6ஆவது ஆண்டில் திருவிளக்கு ஒன்றுக்காகத் துளைப் பொன்னும் நிலைவிளக்கொன்றும் கொடுத் துள்ளாள்.

### பெறனங்கை

செம்பியன் இருக்குவேளாரான பூதிபராந்தகனாரின் மனைவியாகிய பெறனங்கை சோழர் குடும்பத்தவன். சோழப் பெருந்தேவியாரான பெறனங்கை என்று கல்வெட்டுக் கூறுகிறது.

அறிஞ்சிகை சதுர்வேதிமங்கலத்து (நங்கவரம்) மறவன் ஈஸ்வரத்துப் பெருமானுக்கு இவள் சூரிய கிரகணத்தன்று தன் பிறந்த நாளில் பெருமானடிகளுக்கு 108 கழஞ்சு செம்பொன் அளித்தான். இப்பொன்னால் அமுது திருவிழா விழா அர்ச்சனைகட்காகப் பெருங்குறிச் சபையினர் பதினாலாயிரம் குழி நிலம் இறையிலியாகத் தந்தனர்.

### நங்கை நந்தேவி

செம்பியன் இருக்குவேளாரின் மனைவியருள் நங்கை நந்தேவி ஒருத்தியாவாள். நங்கை நந்தேவி பரகேசரியின் பத்தாவது ஆண்டில் திருநலக்குன்றத்துத் திருமூலட்டானத்து அடிகளுக்கு ஏழரைக் கழஞ்சு துளைப் பொன் தந்துள்ளாள்.

### திங்கள நிம்மடிகள்

செம்பியன் இருக்கு வேளாரின் மனைவியருள் ஒருத்தித் திங்கள நிம்மடிகள் ஆவாள். கோப்பரகேசரி வர்மனின் பதின்மூன்றாவது ஆண்டில் அந்துவநல்லூர்த் திருவாலந் துறை அடிகளுக்கு ஒரு திருநொந்தா விளக்கிற்காக 30 கழஞ்சு பொன் இவள் தந்தாள். இப்பொன்னை உறையூர்க் கூற்றத்து முள்ளிக் குறும்பின்

ஊரவர் பலிசைக்குத் கொண்டு (வட்டி செலுத்துவதாக ஏற்று) தினந்தோறும் உழக்கு நெய்யினால் விளக்கு எரிப்பித்தனர்.

**புலியூர் நாட்டடிகள்**

செம்பியன் இருக்குவேளாயின பூதி பராந்தகனின் மனைவியருள் புலியூர் நாட்டடிகளும் ஒருத்தி. அந்தநல்லூர் திருவாலந்துறை இறைவற்கு இரவும் பகலும் நொந்தா விளக்கு எரிக்க விடேல்விடுகு கல்லால் 30 கழஞ்சு துளைப் பொன்னை முதற் பொருளாக வைத்தாள். அந்தநல்லூர் ஊரவர் தினந்தோறும் உழக்கு நெய்யால் விளக்கு எரிப்பித்தனர்.

செம்பியன் இருக்குவேளாகிய பூதிபராந்தகன், முதற் பராந்தகன் காலத்தவன்; செம்பியன் இருக்குவேள் எனவும் கூறப்பட்டவன்; ஐவர் மனைவியர்; அந்தநல்லூர்த் திருவாலந்துறைக் கற்றளியினைக் கட்டியவன். பூதிவிக்கிரம கேசரியையே அல்லது பூதியின் மகன் பராந்தகனையே செம்பியன் இருக்குவேளாகிய பூதிபராந்தகனுடன் தொடர்புபடுத்தல் இயலாது என்ற செய்திகளைக் கல்வெட்டுக்களின் வாயிலாக உணரலாம்.

## ஏழாம் பகுதி

# இன்னும் சில இருக்குவேளிர்கள்

### பல்லவர் கல்வெட்டுக்களில்

கொடும்பாளூர்க் கல்வெட்டில் கண்ட வேளிர் அன்றியும் இருக்குவேளிர் குலத்தவராக சிலர் பல்லவர் காலக் கல்வெட்டுக்களால் அறியப் பெறுகின்றனர். இவர்கள் கொடும்பை வேளிர்க்கு உறவினர் ஆதல் கூடும். அரசியல் அலுவல்களில் ஈடுபட்டு இருந்தவர் என்பதனைச் சில கல்வெட்டுக்களால் அறியலாம்.

### 1. விடேல் விடுகு இளங்கோ அதியரையனாயின விக்கிரமபூதி

தென்னார்க்காடு திருக்கோவிலூர் வட்டம் கீழுர்க் கோவிலில் உள்ள நந்திவர்ம பல்லவனின் பதினோராம் ஆட்சி ஆண்டுக்கு உரிய கல்வெட்டு ஒன்றில் இவ்வரசன் குறிக்கப்படுகிறான்.

மலையமான் நாட்டுக் குறுக்கைக் கூற்றத்துத் திருக்கோவலூர்த் திருவீரட்டானத்து மஹாதேவர்க்கு ஒரு பெண் இரவும் பகலும் இரண்டு திருநொந்தா விளக்குகள் எரிப்பிப்பதற்காக விடேல்விடுகு கல்லால் நாற்பத்தெண் கழஞ்சு நிறை பொன் தந்தாள். இவள் விடேல் விடுகு இளங்கோ அதியரையனாயின விக்கிரமபூதி என்பவனு டைய மகள். சாத்தன் மறவன் என்பவனின் தேவி என்று அக்கல்வெட்டுப் புலப்படுத்துகிறது.

### 2. தென்னவன் மா... மற(வம்) பூதி

கீழுரில் உள்ள மற்றொரு கல்வெட்டு மறவம்பூதி என்பவனைக் குறிப்பிடுகிறது. இவன் மூன்றாம் நந்தி வர்மனின் பதினொன்று அல்லது பதினாறாவது ஆட்சி யாண்டுக்குரிய கல்வெட்டில் குறிப்பிடப்படுகிறான்.

திருநொந்தா விளக்கு ஒன்றுக்கு நாள்தொறும் உரிநெய்

பெறுவதற்காக, நகரத்தார் கைவழி மறவம்பூதி விடேல் விடுகு திப்பொக்குச் செம்பொன் இருபத்து நான்கு கழஞ்சு தந்தமையை இக்கல்வெட்டுக் குறிக்கிறது.

**3. மாற்பிடுகு இளங்கோவேளார் சாத்தன்**

திருச்சி மாவட்டம் திருவெள்ளறையில் உள்ள பாடற் கல்வெட்டு ஒன்று மாற்பிடுகு இளங்கோவேளார் சாத்தன் என்னும் அரசனைக் குறிப்பிடுகிறது. இக் கல்வெட்டு மூன்றாம் நந்திவர்மனின் ஆறாவது ஆண்டுக்கு உரியது ஆகும். இக்கல்வெட்டில் அமைந்த பாடல்கள் 'பெருங்கா விதி சடையன்பள்ளி' என்பவனால் பாடப்பெற்றன ஆகும்.

இக்கல்வெட்டுச் 'செல்லிக்கோமான் மல்லவான்' என்பவனைப் புகழ்கிறது. இச்செல்லிக்கோமான் மல்லவான் 'பரசிராமன்' என்பவனுடைய மருகன் ஆவான்; மாற்பிடுகு இளங்கோவேளார் சாத்தன் என்பவனுடைய மாமன் ஆவான்.

திருவெள்ளறைக் கல்வெட்டுத் 'தொன்மறவ(ன்)' எனவும் செல்லிக் கோமானைக் குறிக்கிறது. வேளாளரையர் தங்கள் ...லைநிரவ (யனநந்தி) மங்கைக் கானஉறுதியான் புகழ்வளர்க மண்ணிமேலேப் பிரம்மதேயத்துக் கானஉறுதியான் விழுப்பேரரையன் சாத்தன் மறவன் புகழ்நிற்க என்று கல்வெட்டுக் குறிக்கிறது. சாத்தன்மறவன் மாற்பிடுகு இளங்கோவேளான் ஆவான். இவனைக் கல்வெட்டின் இறுதி விழுப்பேரரையன் சாத்தன்மறவன் எனக் குறிப்பது உற்று நோக்கற்கு உரியது.

'இளங்கோவேள்' என்று கொடும்பாளூர் வேளிரில் இளவரசு நிலைக்குரிய பெயர். 'மாற்பிடுகு இளங்கோ வேளான்' என்னும் இளவரசு நிலைக்குரிய பெயரினன் 'சாத்தன்மறவன்' என்ற பெயருடன் நிலவியவன். 'மறவன்' என்ற பெயர் மறக்குடியினர்க்கு வழங்கிய ஒரு பெயர். ஆயினும் யாதவ குலத்தவராகிய வேளிரும் மறவன் என்ற

பெயருடன் விளங்கினர் என்பதனை இக்கல்வெட்டு உறுதி செய்கிறது. தொன்றவனிவேந்தன் என்பது தொல்லவனி வேந்தன் எனக் கொள்ளுவோமாயின் மாற்பிடுகு இளங்கோவேளான் ஆயின சாத்தன்மறவன் தொல்லவனி வேந்தன் எனப்புகழப் பெற்றான் எனலாம். டாக்டர் ஆரோக்கியசாமி அவர்கள் மாற்பிடுகு இளங்கோ வேளானை முத்தரையர்களுக்கு அடங்கிய வேளிர் அதிகாரியாகக் கருதுகிறார்.

**4. விடேல்விடுகு இளங்கோவேள்**

பல்லவன் நிருபதுங்கவர்மனின் தம்பியாகக் கருதப் பெறுபவன் கம்பவர்ம பல்லவன். திருவொற்றியூரில் உள்ள கம்பவர்ம பல்லவனுடைய கல்வெட்டு ஒன்று விடேல் விடுகு இளங்கோவேள் என்பவனைக் குறிப்பிடுகிறது. இக்கல்வெட்டின் காலம் வெளிப்படையகப் புலனாக வில்லை 13, 11, 16 ஆகிய மூன்றுள் ஏதாவது ஒன்றாதல் வேண்டும்.

வைக்காட்டூர் ஊர்ச் சபையினர் செய்த ஒப்பந்தமாக இக்கல்வெட்டு அமைந்து உள்ளது. திருவொற்றியூர் மகாதேவர்க்கு ஒவ்வொரு சங்கராந்தி தொறும் வேண்டுவன வற்றுக்காகப் பூதிஅறிந்திகை என்பவள் 27 கழஞ்சு முதற்பொருளாக வைத்தாள். இம்முதற்பொருளுக்குரிய வட்டியால் அரிசி, வாழை, அடைக்காய், சர்க்கரை, வெற்றிலை அமுதுக்கு வழி செய்யப்படவேண்டும். ஒரு கழஞ்சுக்கு மூன்று மஞ்சாடிவட்டி என்ற விகிதத்தில் இருபத்தேழு கழஞ்சுகளுக்கும் ஆறு மாதத்துக்கு ஒரு தடவை வட்டி பெறுதல் வேண்டும். அதனைக் கொண்டு சங்கராந்தி நிவேதனம் செய்ய வைக்காட்டூர்ச் சபையார் ஒப்புதல் நல்கினர்.

கோநாட்டுக் கொடும்பாளூர்வேள் மரபினன் விடேல்விடுகு இளங்கோவேளான் இவனுடைய மனைவி

பூதி அறிந்திகை எனக் கல்வெட்டுக் குறிப்பிடுகிறது. இவ்வேளானை விஜயநந்தி விக்கிரபருஷரின் பதினோராம் ஆண்டுக் கீழூர்க் கல்வெட்டில் குறிக்கப்பெற்ற விடேல் விடுகு இளங்கோ அதியரையனுடன் கல்வெட்டின் ஆங்கில முன்னுரை தொடர்புபடுத்துகிறது.

**சோழர் கல்வெட்டுக்களில்**

**1. பரகேசரி வீரசோழஇருக்குவேள்**

கொடும்பாளூர் முச்சுகுண்டேசுவரர் கோவில் கல்வெட்டு ஒன்று பரகேசரி வீரசோழ இருக்குவேள் என்னும் கொடும்பாளூர் அரசனின் ஏழாவது ஆண்டுக்கு உரியது ஆகக் காணப்பெறுகிறது. அழகன் வீரசோழ விஸ்வகர்மாவும் கண்மாளரும் (கொடும்பாளூர்ச்) சபையிற் கூடியிருந்த காலத்து நாயன்மாரை எழுந்தருளப் பண்ணித் திருநாளழிவு, நித்தநிவந்தங்களுக்கு வீரசோழ சோழ மூவேந்திரவேளான் என்னும் ஒருவன் நிலக்கொடை தந்தான். இவ்விருக்குவேள் தனக்கு எனத் தனியாட்சி யாண்டு கொண்டிருந்தமை குறிப்பிடத்தக்கது ஆகும்.

**2. வீரசோழ இளங்கோவேள்**

திருவொற்றியூரில் உள்ள முதற்குலோத்துங்கனின் இரண்டாவது ஆண்டுக் கல்வெட்டு ஒன்று, 'ராஜராஜன் பரநிருபராக்ஷரான வீரசோழ இளங்கோவேளார்' என்பவனைக் குறிக்கிறது. இவன் குலோத்துங்க சோழனுடைய சேனாபதியாக இருந்தவன். சோழநாட்டு உய்யக்கொண்டார் வளநாட்டுத் திரைமூர் நாட்டு நடார் என்ற ஊரின் தலைவன். இவன் திருவொற்றியூர்க் கோவிலில் இருந்த காரணைவிடல் கதேவர் திருச்சாந்து ஆட இருநூற்று நாற்பது காசுகளைத் தந்துள்ளான். 'இளங்கோவேள்' என்னும் பெயரால் இவன் கொடும் பாளூர்க் குலத்திற்கு உரியவன் என்பதும், சோழச் சேனாபதிகளாகப் பணியாற்றியவன் என்பதும் இக்கல்வெட்டால் புலனாகிறது.

### 3. மும்முடிச்சோழ இளங்கோவேள்

பரகேசரி பன்மரின் 4ஆவது ஆண்டுக்குரியதொரு அல்லூர்க் கல்வெட்டில் மும்முடிச்சோழ இளங்கோவேள் குறிப்பிடப்படுகிறான். கல்வெட்டின் இடைப்பகுதி 'மும்முடிச்சோழ இளங்கோவேளாயின ஆதித்தன் முனையாதித்தரையன்' என மொழிவதனால் ஆதித்தன் முனையாதித்தரையனின் இளவரசுப் பெயர் மும்முடிச் சோழ இளங்கோவேள் எனப் புலனாகிறது.

பரகேசரியின் நான்காமாண்டில் மும்முடிச்சோழ இளங்கோவேள் ஓலை போக்கினான். அல்லூர் நீர்நிலத்துக் கீழூர் கந்திரமங்கலம் என்று பேர் கூவப்பட்ட நிலத்தில் ஒரு வேலியைத் திருச்சென்னடைப் புறமாக எல்லைத் தெரிச்சுக் கல்லும் கள்ளியும் நாட்டி அறவோலை செய்து தருக என வந்த ஸ்ரீமுகத்தைத் தொழுது தலைமேல் கொண்டு வாசித்துத் திருமுகத்தில் கண்ட பரிசை அவந்திய கோவப் பல்லவரையனாகிய மயிலைத் திண்டன் ஆணத்தியால் புரிவித்தான்.

### 4. இராசசிங்கன் உத்தமசீலனான மும்முடிச் சோழ இருக்குவேள்

இராசகேசரிவர்மனின் ஏழாவது ஆண்டுக்குரிய கீழத்தானையம் ஈஸ்வரன் கோவில் கல்வெட்டுக் குறிக்கிறது. சிற்றையூர் அக்நீஸ்வரத்துப் பரமேஸ்வரற்கு இராசசிங்கன் உத்தமசீலனான மும்முடிச் சோழ இருக்குவேள் கொடும்பாளூரை அடைந்த பின்னால் தாணையம் கடைய வயலைத் தன் பேரால் தேவதானமாக நிலம் தந்தான். கடையவயலை உத்தமசீல மங்கலம் எனத் தன் பேரால் பெயரிட்டுத் தேவதானமாகக் கொடுத்தான். இவனையும் இராசராசன் காலத்தவன் எனக் கே.வி. சுப்பிரமணிய ஐயர் கூறுவர். சோலைராசசிங்கனும் இவனும் ஒருவரா என்பது ஆராய்வதற்குரியது.

### 5. இராசேந்திரசோழ இருக்குவேள்

கற்குடி உய்யகொண்டார் திருமலை இராசேந்திர சோழனுடைய எட்டாவது ஆண்டுக்கு உரிய கல்வெட்டு இராசேந்திர சோழ இருக்குவேளைக் குறிப்பிடுகிறது. இவனுடைய மனைவி தேவன் பெற்றமை என்பவள். இவனுடைய மகன் சோலை இராசசிங்கன் என்பவன் ஆவன். இவன் தினந்தோறும் கற்குடிப் பரமேஸ்வரர்க்கு உழக்கு நெய்யால் இரவும் பகலும் திருநொந்தா விளக்கு எரிப்பிக்கத் தொண்ணூறு ஆடுகள் தந்துள்ளான்.

### 6. விக்கிரமசோழ இளங்கோவேள்

விக்கிரமசோழ இளங்கோவேள் என்பானும் கொடும்பை இளவரசன் ஒருவன் ஆதல் கூடும்.

விக்கிரமசோழ இளங்கோவேளை முதற் பராந்தகன் காலத்தவனாக டி.ஏ. கோவிந்தராவ் Epigraphica Indica XXV p.50 இல் குறிப்பிடுகிறார். விக்கிரமசோழ இளங்கோவேள் கல்வெட்டை முதல் இராசராசக்குரியதாகக் கருதுகிறார் சாஸ்த்திரியார்.

பழுவேட்டையரின் ஆணையின்படிக் கவுசிங்கன் நக்கன் மாறன் ஸ்ரீகாரியம் ஆராயும் காலத்துப் பழு வேட்டரையர் மகளார் விக்கிரம சோழ இளங்கோவேளார் தேவியார் நம்பிராட்டிகளும் இரு வெள்ளிப் பாத்திரங்களை இராசகேசரியின் மூன்றாமாண்டில் தந்ததாகக் கீழப் பழூர்க் கல்வெட்டுக் கூறுகிறது.

### 7. செம்பியன் இளங்கோவேளாயின பூதி ஆதித்தபடாரன்

திருச்செந்துறையில் உள்ள பரகேசரிவர்மரின் 20, 39ஆவது ஆண்டுக்கு உரிய இரண்டு கல்வெட்டுக்களில் செம்பியன் இளங்கோவேளாயின பூதியாதித்தபிடாரன் குறிப்பிடப்படுகிறான்.

செம்பியன் இருக்குவேளாயின பூதியாதித்த பிடாரன்

திருச்செந்துறைப் பெருமானடிகளுக்குப் பனையூர் வாழ் கழுமலத்தில் எல்லா நன்செய் புன்செய் முழுமையும் தேவதானமாக நீரொடு அட்டிக் கொடுத்தான். உண்ணாழி கையில் திருவிளக்கு நான்கிற்காக நிலம் வேலியும், திங்கள் நக்கத் திகையான உத்திராடத்தன்று நெய்யாடியருளவும் பயற்றுப் போனகம் முதலானவற்றுக்காகவும் கழுமலத்தைத் தந்தான், எனப் பரகேசரியின் 30ஆவது ஆண்டுக் கல்வெட்டு கூறுகிறது.

20ஆவது ஆண்டுக்குரிய பரகேசரியின் மற்றொரு கல்வெட்டும் இவனைக் குறிப்பிடுகிறது.

விக்கிரமகேசரியின் இரண்டாம் மகன் ஆதித்யன். இவனுடைய முழுப் பெயர் பூதியாதித்யபிடாரன். செம்பியன் இருக்குவேள் என்பது இவனுடைய இளவரசுப் பெயர். பரகேசரியின் (முதற் பராந்தகனின்) 20ஆவது ஆண்டுக் கல்வெட்டு இவனைக் குறிப்பதனால் (927) இவன் பராந்தகன் காலத்திலேயே இளவரசன் எனலாம் என வரலாற்றறிந்தோர் கருதுதலும் உண்டு. இக்கருத்துப்படி பூதியின் மகன் ஆதித்தனே இவன் என உறுதி செய்தல் இயலாதது அன்றியும் விக்கிரமகேசரி காலத்தால் பிற்பட்டவன் எனவும் முன்பு நிறுவப்பட்டுள்ளது.

### 8. இராசராச இளங்கோவேள்

திருமையம் தாலூகா கீழத்தானையம் சிவன் கோவிலில் உள்ள இராசகேசரிவர்மனுடைய ஏழாவது ஆண்டுச் சிதைந்த கல்வெட்டு இராசராச இளங்கோ வேளானைக் குறிக்கிறது. கீழத்தானையம் உத்தமதாநீஸ்வரர் கோவிற்குக் குன்றியூர் நாட்டு உப்பிலிக் குடியும் வெள் ஊராகிய மக்கள் பற்றுளாழன் பற்றுக் குறுங்குடியும் இவனால் தேவதானமாக்கப்பட்டன. இவன் முதல் இராசராச சோழன் காலத்தவன் ஆகலாம், எனத் திரு. கே.வி. சுப்பிரமணிய ஐயர் கூறுவர்.

### 9. இராசராசன் செயங்கொண்ட சோழனான சேனாபதி இருக்குவேள்

வீரராசேந்திர சோழனின் மகன் அதிராசேந்திரன் கி.பி. 1070இல் முடி சூடி 200 நாட்களே ஆண்டான். தெள்ளூர் காட்டில் உள்ள ஊர்களில் ஒன்று பனையவரம். இவ்வூரில் உள்ள அதிராசேந்திரன் கல்வெட்டு ஒன்று இருக்குவேள் தென்ஆர்க்காடு மாவட்டம் புறவார்ப்பனங்காட்டூரில் சிவதர்ம மடம் அமைத்ததாகக் கூறுகிறது. ஆலயத்துக்கும் அபூர்விகள் வந்து உண்ணும் மடத்துக்கும் ஆக பரவைப் புரத்து நகரத்தார் (பரவைப்புறம் - பனையவரத்தின் பழம் பெயர் - A.R.E. 1918. Part II, paragraph 32.) இடம், அன்றாடு நற்காசுகள் நாற்பதை விலைத் திரவியமாகக் கொடுத்தான். சிவனடியார்களிடம் பற்றுக் கொண்டுள்ள இவன் இருக்குவேள்பட்டமுடைமையினால் கொடும்பாளூர்க் குறுநில மன்னன் எனலாம். இவன் செயங்கொண்ட சோழன் என்னும் பெயர் உள்ளவன் எனவும் சோழச் சேனாபதியாக இருந்திருத்தல் வேண்டும் எனவும் பெயர் வாயிலாக அறியலாம். அதிராசேந்திரன் காலத்தில் முதுமை எய்தியவனாதல் வேண்டும் என வரலாற்றாய்வாளர் பண்டாரத்தார் கூறுவர்.

### இருங்கோள மரபினர்

தென்னகக் கல்வெட்டுகள் 'இருங்கோளன்' என்ற பெயர் உடையவரைக் குறிப்பிடுகின்றன. கல்வெட்டுகள் காட்டும் அக்குலத்தவர் கீழ்வருமாறு:

1. இருங்கோளக்கோனான புகழ்விப்பிரகண்டன் அவனிமல்லன் - S.S.I. vol. III Ins no. 199

2. இருங்கோளக் கோனான நாராயணன் புகழ் உய்ப்பவர் கண்டன். - A.R.E. No. 240 of 1916

3. ஆடல்வல்லான் கங்கை கொண்டான் ஆன இருங் கோளன் - A.R.E. No. 261 of 1929

4. இருங்கோளன் கங்கைகொண்டான் ஆன வீரசோழன் - A.R.E. No. 261 of 1929

5. சேந்தமங்கலம் உடையான் அரையன் எதிரிலி சோழன் ஆன இருங்கோளன் - A.R.E. No. 305 of 1919

6. சேணை திக்கணை மாடப் ..... ஆன இருங்கோளன் - A.R.E. No. 468 of 1919

7. பிள்ளை சேந்தமங்கலமுடையான் சிவதவனப் பிள்ளை ஆன இருங்கோளர். - A.R.E.

8. இருங்கோளன் குணவன் அபராஜிதன் - A.R.E. No. 384 of 1913

9. இருங்கோள பிரதிவிபதி அவனி மல்லன் - A.R.E. No. 49 of 1918.

10. சுருதிமன் நாயன் சோரன் ஆன இருங்கோளன் - A.R.E. No. 497 and 498 of 1912.

11. சுருதிமன் மதியாண்டான் ஆன இருங்கோளன் - A.R.E. No. 498 of 1912.

12. சுருதிமன் தேவன் பொழிமிகாமன் ஆன இருங்கோளன் - A.R.E. No. 498 of 1912.

இரண்டாம் பராந்தக சோழன் காலத்தில் கொடும்பாளூர்ச் சிற்றரசன் 'பராந்தகன் சிறிய வேளான்' என்பவன் சோழர் படைக்குத் தலைமை தாங்கி இலங்கையின் மீது படை எடுத்தான்; இலங்கையில் யாண்டு 3வது ஈழத்துப்பட்ட கொடும்பாளூர் வேளான் சிறிய வேளான் என்ற கல்வெட்டுத் தொடரால் அறியலாம். கொடும்பாளூர் நேர்க் கால் வழியினன் ஆகிய பூதியின் மகன் பராந்தகன் சிறிய வேளாரைத் திருவிசலூர் வடமொழிக் கல்வெட்டுப் புகழ்கிறது. கொடும்பாளூர் வேளிர் குலத்தினனாகிய சிறிய வேளானை இருங்கோள குலத்தின் விளக்கு என்று கல்வெட்டுச் சிறப்பிக்கிறது.

"ப்ரதாதிருங் கோளகுல ப்ரதீபஹ பிராந்தகஸ்ய ஆத்மஜவர்க வர்யஹ தீபம்முதா ஸ்ரீவிசலூர் தாம்தே ஹராய பப்ருச் சிறுவேளநாமா" என்பது வடமொழிச் சுலோகம். பிராதர் முதலானவரை முதலாக உடைய இருங்கோள குலத்தின் மிகச் சிறந்த அரசன் இவன் என்பது இக்கல்வெட்டுத் தரும் உண்மை.

கொடும்பாளூர் வேளிர் 'இருங்கோளர்' என்று கூறப்பட்டுள்ளனர். (South Indian Inscriptions Vol. III Ins. No. 119-20) இதனால் கொடும்பாளூர் வேளிர்களைக் குறிக்கும். பெயர்களுள் இருங்கோளன் என்பது ஒன்று என்பது உறுதி. கொடும்பாளூர்க் குலத்தினரை, இருக்குவேள், இளங்கோ வேள் இருங்கோளர் (Irungola or Irunkola) என்ற பெயர்கள் குறிப்பிடப்படுகின்றன.

**இருங்கோள அரசர்**

'இருங்கோளன்' என்ற பெயருடன் பலர் காணப் படுவர். இவர்கள் அரச மரபினராகலாம். இவர்கள் சோழ பிற்காலத்து அரசியல் செல்வாக்குடன் நிலவினர். இவர்களுள் அரசர் போலத் தோன்றுபவரை நோக்குவோம். இவர் இவ்வேளிர் குலத்தவராக இடமுண்டு.

**இருங்கோளக்கோனாகிய புகழ்விப்பிரகண்டன் அவனிமல்லன்**

புகழ்விப்பிரகண்டன் அவனிமல்லன் வீரபாண்டியன் தலைகொண்ட பரகேசரியாகிய ஆதித்த கரிகாலனின் 2ஆவது ஆண்டுக்குரிய உய்யக்கொண்டார் திருமலைக் கல்வெட்டில் குறிப்பிடப்படுகிறார். இரண்டாம் பராந்தக னாகிய சுந்தரசோழன் காலத்தவன் திருக்கற்குடி பரமேஸ் வரர்க்குத் திரு நொந்தா விளக்கிற்கு ஆடு 90 தந்துள்ளான்.

**இருங்கோளன் குணவன் அபராசிதன்**

இருங்கோளன் குணவன் அபராசிதன் என்பவன் எருமூரில் முதல் பராந்தகனின் 28ஆம் ஆண்டில் ஸ்ரீவிமானமும், அஸ்டபரிவார ஆலயங்களும் கோபுரமும் அமைத்தான். கற்றளி கட்டினான். சோழப் பெருமான் அடிகள் பராந்தக தேவரின் அனுமதியுடன் உறுமூர் இறைவர்க்குத் திருச்செந்நடை, அர்ச்சனாபோகம், ஸ்ரீபலி கொட்டு, உவச்சர்களுக்குச் சம்பளம் முதலான வற்றுக்காக முக்கால் வேலியைத் தேவதானமாகத் தந்துள்ளான். (A.R.E. 384 of 1901)

**இருங்கோள பிரதிபதி அவனிமல்லன்**

முதல் இராஜராஜ சோழனுடைய 7வது ஆண்டுக்குரிய விருத்தாசலம் கல்வெட்டு ஒன்றில் குறிக்கப்படுகிறான். பொத்தப்பிச் சோழனுடைய மகளும் இருங்கோள பிரதிபதி அவனிமல்லனின் மனைவியுமாகிய அரசி மலையவ்வை தேவியார் திருவிளக்கு ஒன்றுக்கு 90 ஆடுகளும் விளக்குத் தண்டும் நந்தவனத்திற்கு 2 மா நிலமும் தந்தாள். (49 of 1918)

**ஆடல்வல்லான் கங்கை கொண்டான் ஆன இருங்கோளன்**

ஆடல்வல்லான் கங்கை கொண்டான் ஆன இருங் கோளன் இருங்கோள வளாகம் சிற்றூரைக் கோபுரப் பணிகளுக்காகவும், விளக்கிற்காகவும் தந்தான் என்று குலோத்துங்கனின் 27ஆவது ஆண்டு பிரம்மதேசம் கல்வெட்டுக் கூறுகிறது.

சித்தூர் மாவட்டம் பொங்கனூரு வட்டம் இலாடிங்கம் என்ற ஊரில் உள்ள நீலகண்டேஸ்வரர் கோவில் கல்வெட்டு ஒன்று இவனைக் குறிப்பிடுகின்றது. இந்தக் கல்வெட்டு முதல் குலோத்துங்கனுடைய 16வது ஆண்டுக்கு உரியது ஆகும். (553 of 1906)

இரட்டப்பாடி கொண்ட சோழ மண்டலத்தில் புலி நாட்டில் (கங்கைகொண்ட சோழநல்லூரில்) இருந்த மாதமங்கலம் என்னும் சிற்றூரரை இதே நாட்டில் கொற்றி யூர் ஆன உத்தமசோழபுரத்தில் தன்னால் கட்டப்பட்ட இருங்கோளீஸ்வரம் உடைய நாயனார் கோவிலுக்குத் தேவதானமாக ஆடல்வல்லான் கங்கை கொண்டானான இருங்கோளன் தந்தான். நிலத்திற்கு ஊர் வரிகள் நீக்கப் பெற்றன. பல அரசியல் அலுவலர் இக் கல்வெட்டில் கையொப்பம் இட்டு உள்ளனர். முதல் குலோத்துங்க சோழனுடைய வடநாட்டுப் படை எடுப்புகளுக்காக இவன் ஆந்திரம் சென்றவன் ஆதல் கூடும்.

**இருங்கோளக் கோன்ஆன நாராயணன் புகழ் உய்ப்பவர் கண்டன்**

ஸ்ரீமுஷ்ணத்தில் உள்ள கலியப்தம் 4060க்கு (கி.பி. 959) உரிய ஒரு கல்வெட்டு இருங்கோளக்கோனைக் குறிக்கிறது. இருங்கோளக்கோனாகிய நாராயணன் புகழ் உய்ப்பவர் கண்டன் விந்த மஹாதேவிப் பேரேரி என்னும் பெயரால் வேளாண்மை பாசன நீர்த் தேக்கம் (Irrigation tank) அமைத்தான். இதன் நடுப்பகுதியில் விஜயாதித்யன் என்னும் பெயரால் கலிங்கு (Sulice with many went ways) ஒன்றினையும் அமைத்தான் எனக் கல்வெட்டுக் கூறுகிறது.

**இருங்கோள இளவரசர் வெற்றியடைய**

மூன்றாம் இராசராச சோழன் காலக் கல்வெட்டுக்கள் இரண்டு (195, 196 of 1908) சோழப் பெருமானடிகளுக்கு நன்றாகவும் இருங்கோள இளவரசர் (Prince Irungola) வெற்றி கொள்ளவும் நிவந்தங்கள் செய்யப்பட்டதனைக் காட்டுகின்றன. இக்கல்வெட்டுக்கள் தஞ்சை மாவட்டம் கோவிலூரில் உள்ளன.

இளவரசர் புரோசைக் குடையார் எழுந்தருள்வித்த திருக்காமக் கோட்டமுடைய நாச்சியார்க்கு இராசேந்திர

*சோழ நாட்டுப்புறங் கரம்பை நாட்டுப் பெருவாழ்வு தந்தான் சதுர்வேதிமங்கலத்துச்* (*பெருவாழ்வான்*) *சபையினர் இராசராசனின் 20ஆம் ஆண்டிலும்* (5th January Ad. 1237? Epigraphica Indica V. XI) *தூவல்லி சதுர்வேதி மங்கலகிராம காரியமாய்வார் 21ஆம் ஆண்டிலும் நிலதானம் செய்தனர். இவ்விரண்டு அறச் செயல்களும் அரசருக்கு நன்றாகவும் இருங்கோள இளவரசர் வெல்லவும் செய்யப் பட்டதாகக் கல்வெட்டுகள் கூறுகின்றன.*

## எட்டாம் பகுதி

# இருக்குவேளிரின் அரசியல்

**கொடும்பாளூர் வேளிரின் அரசியல் - சோழர் வரலாறு வெற்றிமிக்க வரலாறாக எழுதப்படக் காரணமாக அமைந்தது. முதல் ஆதித்தன் காலம் முதல் இரண்டாம் பராந்தகன் காலம் வரை சோழர் பெருமை வேளிர் குலத் தூண்களால் நிறுவப் பெற்றது.**

### அரசாண்ட பகுதி

'கோனாடு என்று சொல்லப்படுகின்ற பகுதியை ஆண்ட அரசர்கள் இருக்குவேளிர்' என்பதனைக் கல்வெட்டு மற்றும் இலக்கியங்கள் வாயிலாக அறிகிறோம். கோனாட்டுத் தலைநகரமாக விளங்கிய நகரம் கொடும்பாளூர் நகரம் ஆகும். இருங்கோவேள் கோனாட்டுத் தலைநகரமாகிய கொடும்பாளூரில் இருந்து அரசாண்டானா? என்பது உறுதியாகத் தெரியவில்லை. என்றாலும் கபிலர் பறம்பு மலையின் நீங்கிய உடன் அருகில் உள்ள வேந்தரிடம் மணம் புரிந்துகொள்க என வேண்டியிருக்கிறார் ஆதலின் இருங்கோவேள் கோனாட்டை ஆண்டவன் ஆதல் கூடும். புறநானூற்றில் 54, 61, 167ஆவது பாடல்களைப் பாடிய மாடவன் மதுரைக்குமரனது நாடு இது என்பது அறியப்படுவதனால் இந்நாட்டின் சங்க காலத் தொன்மை புலனாகும்.

### அரசனும் இளவரசனும்

கோனாட்டுக் கொடும்பாளூர் கல்வெட்டினைக் கொண்டே இவர்களுடைய நிலையை அறியலாம். இருங்கோவேள் பெயர் அரசர்க்கு உரியது. 'இளங்கோ வேள்' என்ற பெயர் இளவரசுக்கு உரியது ஆகும். கொடும் பாளூர் அரசர் தம்மை அரசியலில் முற்றும் ஈடுபடுத்திக்

கொண்டது போலவே தம்மக்களையும் - இளவரசு ஆக இருப்பவரையும் போர்களிலும் பிறவற்றிலும் ஈடுபடுத்திப் பயிற்சி நல்கினர். 'பராந்தகன் சிறியவேள்' ஈழத்துப் போரில் பங்கேற்று இறந்தமை இவன் தந்தை பூதிவிக்கிரமகேசரியின் காலத்தில் நிகழ்ந்த செயலாகும்.

இளவரசன் அரசன் ஆகுங்காலத்துப் பட்ட மேற்கும் காலத்தில் புதுப்பெயரை அபிடேகப் பெயராகச் சூடினர். ஒவ்வொருவரும் ஒன்றுக்கு மேற்பட்ட பலபெயர்களை உடையவராக இருந்தனர். சில அரசரும் இளவரசரும் தந்தையின் பெயரைத் தம் பெயரோடு இணைத்தே வழங்கி வந்தனர்.

**சோழர் உறவு**

பாண்டியரின் எதிர்ப்பு உட்படப் பலதிறப்பட்டார் படைஎடுப்புகளைச் சமாளிக்கச் சோழர்களுக்குக் கொடும்பாளூர் வேளிரின் பேருதவி தேவையாக இருந்தது. இருக்குவேளிர்கள் மூவேந்தர்க்கும் பெண் கொடுக்கும் உரிமை படைத்த பழைய வேளிருள் ஒரு குடியினர். இவர்களுக்குப் பேரரசரான சோழர் பெண் கொடுப்பது வழக்காறு அல்ல. ஆனால் ஆதித்த சோழன் அவ் வழக்காற்றினை மாற்றினான்; தன் பெண்ணை இருக்குவேளிருக்கு மணம் செய்து கொடுத்தான். பராந்தகன் காலத்தவனாகிய பூதிபராந்தகனுடைய மனைவியருள் ஒருத்திச் சோழப் பெருமானடிகள் பெறன் நங்கை என்பவள் ஆவாள். முதற்பராந்தக சோழன் தன் மகள் அநுபமாவைச் சமராபிராமன் என்பவனுக்குத் திருமணம் செய்து கொடுத்தான்; பூதிவிக்கிரமகேசரியின் மனைவி, 'சோழப் பெருமானடிகள் திருவுடைப் பிறந்தார் வரகுணப் பெருமானார்' என்று குறிப்பிடப் பெறுகிறாள். இவ்வாறு சோழப் பேரரசரால் பெண் கொடுத்துச் சிறப்பிக்கப் பெற்றமை அல்லாமல் பெண் எடுத்தும் சிறப்பிக்கப்

பட்டனர். 'பூதிமாதேவடிகள்' என்னும் கொடும்பாளூர் குலக்கொடி முதற் பராந்தக சோழனுடைய மகன் கன்னரதேவனுக்கு மணம் செய்து கொடுக்கப் பெற்றாள்; பூதிவிக்கிரமகேசரியின் மகளாகிய 'பூதிஆதிச்சப் பிடாரி' அரிகுல கேசரிக்கு மணம் செய்து கொடுக்கப் பெற்றாள். இவ்வாறு சோழரும் இருக்கு வேளிரும் பெண் கொடுத்தும் எடுத்தும் பேருறவு உடையவராக நிலவினர்.

இம்மரபினர் சோழரோடு உறவு நெருக்கம் உடையவராக இருந்ததோடு சோழர்க்கு அடங்கிய சிற்றரசராகவும் காணப்படுகின்றனர். முதல் காலப் பாண்டியப் போர்களில் கலந்து கொண்டமையும், ஈழப்போரில் பராந்தகன் குஞ்சர மல்லனான வீரசோழன் கலந்துகொண்டமையும், இரண்டாம் பராந்தகனின் வீரப் போரில் கலந்து கொண்டமையும், பராந்தகன் சிறிய வேளான் போரில் கலந்து கொண்டமையும் போர்க் காலங்களில் பேருதவி புரிந்த நிலையைப் புலப்படுத்தும் சான்றாகும். சேனாதிபதி ஜெயங்கொண்ட சோழ இருக்குவேள் அதிராஜேந்திரன் காலத்தில் சோழர்க்குப் படைப் பணி புரிந்தவராக இருந்ததனைப் புலனாக்கு கின்றவன். இருக்குவேளிர்கள் தம் அரசுநிலை இழந்த பின்னரும் சோழர்களுடைய சேனைத் தலைவர்களாக இருந்துள்ளமையை இக்கல்வெட்டுச் சான்று விளக்குவது ஆகும்.

**முத்தரையர் உறவு**

வரலாற்று ஆசிரியர் சிலர் முத்தரையருடன் இருக்கு வேளிர் வழிவழிப் பகைமையுடையவர் என்று கூறியுள் ளனர். இக்கருத்துக்குச் சான்றேதுமில்லை. பூதிபராந்தக னுடைய மனைவி வரகுணாட்டி முத்தரையர் குடும்பத் தைச் சேர்ந்தவள். பெரும்பிடுகு முத்தரையரின் மணவாட்டி ஒருத்தி முத்தரையரின் தம்பி மகள், ஏருவக் கோமகளா

ருடைய தங்கை (பூதி) விக்கிரமகேசரியானின் ஆச்சி எனப் படுகிறாள். இவள் விக்கிரமகேசரியின் தாய் எனப்படுவது நோக்குவதற்குரியது. கொடும்பையை வேளிர் மீது கொண்ட பகைமையால் பெரும்பிடுகு முத்தரையன் ஆயின சுவரன் மாறன் அழிக்கவில்லை. பாண்டியனிடம் இருந்து மீட்கும் போது அழிவுநேர்ந்தது என்பது முன்னர் விளக்கப்பட்டுள்ளது.

**பல்லவ உறவு**

கொடும்பாளூர் வேளிர் பல்லவப் பேரரசருடன் கொண்டிருந்த உறவு அத்தனை நெருக்கம் உடையது அல்ல; சோழரினும் குறைந்த அளவு உறவு நெருக்கமே உடையது எனலாம். பாண்டியனும் பல்லவனும் போரிடும் காலத்தில் முதல் இராஜசிம்மனால் கொடும்பாளூர் நகரம் கைப்பற்றப்பட்டது என்னும் வேள்விகுடிச் செப்பேட்டுக் குறிப்பு ஒன்றே கொடும்பாளூர் வேளிர் பல்லவருக்கடங்கிய சிற்றரசராகத் துணைபுரிந்தமையைப் புலப்படுத்துகிறது. பரதுர்க்கமர்த்தனின் வாதாபி வெற்றி பல்லவருடன் சேர்ந்து பெற்ற வெற்றியாகவே கொள்ளத்தக்கது ஆகும்.

**வேளிரின் இனம்**

இருக்குவேளிர் 'யாதவ குலத்தினர்' என்பதனைப் புறநானூற்றுப் பாடலும், கொடும்பாளூர்க் கல்வெட்டும் புலனாக்குகின்றன. இக்குல அரசர் யதுவம்சகேது, யாதவமன்னன் என்று குறிப்பிடப் பெறுகின்றனர். இவர்களைக் கள்ளர் இனத்தினர் எனக் கருதுவதற்குச் சான்றாக, மதுரை கொண்ட பரகேசரியின் 17ஆவது ஆண்டுக்கு உரிய திருப்பழனம் கல்வெட்டுக் கூற்று அமைகிறது. உறத்தூர்க் கூற்றத்துக் கொடும்பாளூர் ஆச்சபிடாரி என்ற பெண் இதில் குறிப்பிடப்படுகிறாள். பழு வேட்டரையரோடு இருந்த மணவினைத் தொடர்பால்

இக்குல அரசர் 'மறவன்' என்ற பெயரைப் பூண்டனர். 'மறவம்பூதி' என்று பூதிவிக்கிரமகேசரி கூறப்பெற்றமைக்குக் காரணம் இத்தொடர்பே எனலாம்.

**பழுவேட்டரையருடன் தொடர்பு**

முதல் பராந்தக சோழன் கால இருக்குவேளிர் குல இளவரசு நிலையினரில் ஒருவன் 'விக்கிரமசோழ இளங்கோவேள்' ஆவான். இவனுடைய மனைவி 'நம்பிராட்டி' எனப்படுவாள். இவள் பழுவேட்டரையர் (கண்டன் மறவன்) மகள் விக்கிரமசோழ இளங்கோவேளார் மனைவி எனக் கீழைப்பழூர்க் கல்வெட்டு ஒன்று கூறுகிறது. கொடும்பாளூர் அரசன் மஹிமாலைய இருக்குவேளைக் கீழைப்பழூர்க் கல்வெட்டு கூறுகிறது. இவற்றை நோக்கும் காலத்தில் மறவர் ஆகிய பழுவேட்டரையரும் யாதவ மரபினர் ஆகிய கொடும்பாளூர் வேளிரும் மணவுறவும் பிணைப்பும் உடையவராக இருந்தமை புலனாகும்.

**கன்னடமும் இருக்குவேளிரும்**

பதினெண் வேளிர் கன்னட நாட்டுத் துவரைநகரில் இருந்து வந்தனர் என்பதனை நச்சினார்க்கினியர் புலப்படுத்தி உள்ளார். திருக்கோகர்ணம் குலோத்துங்க சோழனுடைய கல்வெட்டுத், 'துவரை மாநகர் நின்று போந்த தொன்மை பார்த்துக் கிள்ளிவேந்தன் நிகரில் தென்கவிர் நாடுதன்னில் நிகழ்வித்த நிதியாளர்' என்று கூறுவது இதனைக் கூறும் கல்வெட்டுச் சான்று ஆகும். இவ்வாறு வந்த பதினெண் வேளிருள் பழைய ஐந்து வேளிருள் கொடும்பாளூர் வேளிருள் முன்னவன் ஆகிய இருங்கோவேள் 'உவரா ஈகைத் துவரை ஆண்டு நாற்பத்தொன்பது வழிமுறை வந்த வேளிருள்வேள்' எனக் கூறப்படுகிறான். துவரையிலிருந்து வந்த மரபினர் கன்னட நாட்டோடு தொடர்புடன் இலங்கினர் எனலாம்.

கொடும்பாளூர் முச்சுகுண்டேசுவரர் கோவிலின் முன்புறத்தில் உள்ள குளத்துள் வைத்துக் கட்டப்பட்டுள்ள கற்கள் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்தவை. இவற்றில் பழங்கன்னட எழுத்தில் கல்வெட்டுக்கள் உள்ளன.

இங்குள்ள மூன்று கற்களில் உள்ள பழங்கன்னடக் கல்வெட்டுச் சிதைந்துள்ளது. அரசனுடைய பெயர் தெரியவில்லை. கொடும்பாளூரையும் (விக்கிரம) கேசரி சுவரத்தையும் குறிப்பிடுகிறது. மற்றொரு சிதைந்த கல்வெட்டின் தொடக்கம் அரசமரபு கூறுவதுபோல அமைந்திருக்கிறது 'அத்ரி' என்பவன் குறிப்பிடப்படுகிறான். இவ் விரண்டு கன்னடக் கல்வெட்டுகளும் கன்னட நாட்டோடு வேளிருக்கு இருந்த தொடர்பைக் காட்டும் சான்றுகள் எனலாம்.

**உங்சங்கிப் பாண்டியரும் இருக்குவேளிரும்**

கன்னட மாநிலக் கல்வெட்டுக்களில் குறிக்கப் பெறும் சிற்றரசர்களில் அலுப வேந்தரும் ஒருவர். மற்றொரு இனமாக நோக்கத் தக்கவர் உச்சங்கி பாண்டியர். இவ்வீரினத்தாரும் பாண்டியரோடு தொடர்புடையவர் போலத் தோன்றுகின்றனர். தொடர்பு எவ்வாறு அமைத்தது என்பது புலன் ஆகாத புதிராகவே உள்ளது.

உச்சங்கிப் பாண்டியர்கள் மைசூர் மாநிலத்தின் வடகோடியில் இருந்த நுளம்பாடிப் பன்னீராயிரத்தை ஆண்டவராவர். இவர்கள் உச்சங்கிப் பாண்டியன் அல்லது நுளம்ப பாண்டியர் என்று தம்மைக் கூறிக் கொள்கின்றனர். உச்சங்கிப் பாண்டியர்கள் 12ஆம் நூற்றாண்டின் தொடக்கம் முதல் காணப்படுகின்றனர். திரு. ரைசு எழுதியுள்ள Mysore and Coorg of... Inscriptions என்னும் நூலின் 150ஆவது பக்கத்தினால் உள்ள பாண்டியர் யாதவ வம்சத்தவர் என்பது புலனாகிறது. 1124க்கு உரிய திரு புவனமல்ல பாண்டியன்

என்பவன் இருக்குவேள் என்ற பட்டத்தைச் சூடிக் கொள்கிறான். கொடும்பாளூர் யாதவ வம்சத்தவர் என்பதும் அவர்களுக்கே இருக்கு வேளிர் பட்டம் உரியது என்பதும் கல்வெட்டுக்களாலும், இலக்கியத்தாலும் புலனாகும் செய்தி யாகும். இவன் இருக்குவேள் எனப்பட்டுள்ளதால் கொடும் பாளூர் வேளிர்க்கும், உச்சங்கிப் பாண்டியருக்கும் நெருங் கிய தொடர்பு இருந்து இருத்தல் வேண்டும் எனக் கருத லாம். அத்தொடர்பு வாதாபி, வடநாட்டுப் படை எடுப்புக் களால் நிகழ்ந்திருக்குமா? அல்லது உச்சங்கி வேந்தர் பதினெண்வேளிர்களோடு தொடர்புடையவரா என்பது புலனாகவில்லை.

**சிற்றரசர்**

கொடும்பாளூர் வேளிர் பெருவேந்தருக்கு அடங்கிய சிற்றரசராகத்தான் ஆட்சி நடாத்தினர். இவரைக் குறிப்பிடும் கல்வெட்டுக்கள் பரகேசரி அல்லது இராசகேசரிக் கல்வெட்டுக்களே ஆகும். சோழருடைய ஆட்சியாண்டே கல்வெட்டுக்களிலும் குறிக்கப்பட்டு இருக்கும். கொடும்பாளூர் வேளிர் தமக்கென்று தனி ஆட்சி யாண்டுகள் கொண்டதில்லை. 'பரகேசரி வீரசோழ இருக்குவேள்' மட்டும் ஆட்சியாண்டு குறித்துக் கொள்வ தனைக் கொடும்பாளூர்க் கல்வெட்டால் அறியலாம்.

**கலைப்பாணி**

பூதிவிக்கிரமகேசரி கொடும்பாளூரில் மூன்று கோயில் களை எடுப்பித்தான். இதுபற்றிக் கலையியல் அறிஞர் எஸ்.ஆர். பாலசுப்ரமணியம் பின்வருமாறு விளக்குகிறார்.

மூவர் கோயிலின் கருவறைகள் 21 அடி பக்கமுடைய சதுரங்களாக உள்ளன. அர்த்தமண்டபம் 18 அடி பக்கமு டைய சதுரமானது, அர்த்தமண்டபத்துக்குத் தற்போது கூரையில்லை. முகமண்டபத்தின் அடித்தளம் 91 அடி

நீளமும் 41 அடி அகலமுமுடையது. அதுபோலவே நந்தி மண்டபம், பலிபீடம், கொடிமரம் இவற்றின் அடித்தளத்தைக் காணலாம். 15 சுற்றுக் கோயில்களும் திருமதிலும் இரு கோபுரவாயில்களும் இருந்த சுவடுகள் தென் படுகின்றன. அதிஷ்டானத்தில் உபபீடம், பத்மம், குமுதம் என்ற படைகளையும், கோடியில் திறந்த வாயையுடைய மகரங்களோடு கூடிய யாளிவரிசையும் காணலாம்.

மூன்று வெளிச் சுவர்களிலும் தேவ கோஷ்டங்கள் உள்ளன. ஒவ்வொரு தேவகோஷ்டத்தையும் அரைத் தூண்களும் முழுத்தூண்களும் மேலே மகர தோரணமும் அலங்கரிக்கின்றன. தூண்களின் முக்கியப் பகுதிகளான கால், கலசம், பத்மம், கும்பம், பலகை, போதிகை என்பன சிறப்பாக அமைந்துள்ளன. கொடுங்கையின் அடியில் பூதவரிசையும், மேலே இரு கோடிகளிலும் மகரங்களோடு கூடிய யாளி வரிசையும் உள்ளன. கொடுங்கையில் இரட்டைக் கூடுகளும் நுனிப்பகுதியில் வட்டங்களும் (Circles) திகழ்கின்றன.

இவ்விருதளக் கற்றளியின் இரண்டாவது தளத்தில் சாலைகளையும் கூடங்களையும் காணலாம். சாலையின் நடுவில் நேர்த்தியான சிலைகள் உள்ளன. இரண்டாம் தளத்துச் சுவர்மீது கூடுகளால் அலங்கரிக்கப்பட்ட கொடுங்கையும் அதன் மேல் யாளி வரிசையும் உள்ளன.

கிரீவமும் சிகரமும் சதுரவடிவானவை. கிரீவத்தின் அடித்தளத்தில் நான்கு கோடியிலும் ரிஷபங்கள் காணப்படுகின்றன. மத்தியில் விமான தேவதைகளோடு கூடிய கோஷ்டங்கள் உள்ளன. கோஷ்டங்களின் மீது சிங்கத் தலையால் அலங்கரிக்கப்பட்ட கூடுகள் காணப்படுகின்றன. சிகரம் நடுவில் பிதுங்கியும் கீழே உள்ளடங்கியும் உள்ளது. இதன் கோடியில் கொடிக் கருக்குகள் உள்ளன. பத்ம பட்டியல் மீது சதுரமான ஸ்தூபி

உள்ளது. இம் மூவர் கோயில் சிகரம் மாமல்லபுரத்தில் உள்ள துர்க்கை ரதத்தின் சிகரத்தை ஒத்திருக்கிறது.

விமான தேவதைகள் அக்காலக் கலைத்திறனைக் காட்டும் செல்வங்களாக மிளிர்கின்றன.

நடுத்தளி விமானத்தின் கிழக்குப் பக்கத்தில் கருவறையில் அர்த்தநாரீசுவரரும் இரண்டாம் தளத்தில் சிவனும் பார்வதியும் கிரீவத்தில் இந்திரனும் காணப் படுகின்றனர். வடக்குப் புறத்தில் கருவறையில் நின்ற திருக் கோலத்திலுள்ள சிவபெருமானையும் இரண்டாம் தளத்திலும் கிரீவத்திலும் இருந்த திருக்கோலச் சிவ பெருமானையும் காணலாம். தெற்குப் புறக் கருவறைச் சுவரில் சிலையேதும் இல்லை. இரண்டாம் தளத்தில் தட்சிணாமூர்த்தியும் மூன்றாம் தளத்தில் வீணாதரதட்சிணா மூர்த்தியும் காட்சியளிக்கின்றனர். மேற்குப்புறக் கிரீவத்தில் சிவ ஆலிங்கன மூர்த்தியின் சிலை காணப்படுகிறது.

தென் தளி விமானத்தின் கிழக்குப்புறக் கருவறைச் சுவரில் கங்காதரரும் இரண்டாம் தளத்தில் காலாரி மூர்த்தியும் கிரீவத்தில் அந்தகாசுரவத மூர்த்தியும் காட்சியளிக்கின்றனர். வடக்குப் புறத்தில் நின்ற திருக்கோலத்திலுள்ள சிவபெருமானும் இரண்டாம் தளத்தில் சங்கரநாராயணரும் காணப்படுகின்றனர். கிரீவத்தின் வடபுறத்திலும் மேற்குப்புறத்திலும் இப்போது சிலைகள் காணப்படவில்லை.

தென்புறத்துக் கருவறைச் சுவரில் வீணாதரதட்சிண மூர்த்தியும் மேல்தளத்தில் காலாரி மூர்த்தியும் கிரீவத்தில் கஜசம்ஹார மூர்த்தியும் காணப்படுகின்றனர். மேல்புறச் சுவரில் தற்போது சிலைகளே காணப்படவில்லை.

இவைகளைத் தவிரப் பரிவாரக் கோயிலைச் சேர்ந்த ஜேஷ்டாதேவியின் சிலை, வீரசுப்பிரமணியர், பிக்ஷாடனர்

ஆகியோருடைய சிலைகள் கிடைத்துள்ளன. இவை புதுக் கோட்டை, சென்னை ஆகிய நகர்களிலுள்ள கண்காட்சி சாலைகளில் காணப்படுகின்றன. கலையேணியின் உச்சிப் படியில் உள்ள வெகு நேர்த்தியான இச் சிலைகள் பத்தாம் நூற்றாண்டில் சிற்பக்கலை எய்தியிருந்த சீரிய நிலைக்கு எடுத்துக்காட்டாக இலங்குகின்றன. மூவர் கோயிலுக்கு அருகில் அண்மைக் காலத்தில் தோண்டியெடுக்கப்பட்ட திரிபுராந்தகர், திரிபுரசுந்தரி என்ற சிலைகள் தற்போது சென்னைக் கண்காட்சி சாலையை அலங்கரிக்கின்றன.

—

## எமது வெளியீடுகள் !

| | | |
|---|---|---|
| தென் தமிழ் நாட்டுக் குடைவரைகள் தொகுதி – 1 | | |
| | *மு. நளினி, இரா. கலைக்கோவன்* | 100. |
| வரலாற்றில் மதகடிப்பட்டு | *புலவர் ந. வேங்கடேசன்* | 53. |
| தேவாரத்தில் இசைக் கருவிகள் | *புலவர் ந. வேங்கடேசன்* | 45. |
| வரலாற்றில் வில்லியனூர் | *புலவர் ந. வேங்கடேசன்* | 50. |
| வரலாற்றில் திருவாண்டார் கோயில் | *புலவர் ந. வேங்கடேசன்* | 35. |
| பொன்பரப்பின வாணகோவரையன் | *புலவர் ந. வேங்கடேசன்* | |
| | *மா. சந்திரமூர்த்தி* | 85. |
| வரலாற்றில் பெண்ணாகடம் | *ச. கிருஷ்ணமூர்த்தி* | 50. |
| தொல்லியல் சுடர்கள் | *கு. இராஜவேலு* | 125. |
| கல்வெட்டுகளும் சுவடிகளும் | *என். நாச்சிமுத்து* | 75. |
| கல்லெழுத்தில் காலச் சுவடுகள் | *கு. சுவாமிநாதன்* | 100. |
| வரலாற்றில் திருப்பாதிரிப்புலியூர்க் கோவில் | | |
| | *அனந்தபுரம் கோ. கிருட்டிணமூர்த்தி* | 110. |
| செஞ்சிப் பகுதியில் சமணம் | *அனந்தபுரம் கோ. கிருட்டிணமூர்த்தி* | 80. |
| கல்வெட்டில் தேவார மூவர் | *பேராசிரியர் கா. ம. வேங்கடராமையா* | 28. |
| கலைவரலாற்றுப் பயணங்கள் | *மு. ஸ்ரீநிவாசன்* | 150. |
| வரலாற்று ஆவணங்கள் | *சி.எம். கணபதி* | 80. |
| தமிழர் பண்பாட்டுப் பதிவுகள் | *முனைவர் சொ. சாந்தலிங்கம்* | 110. |
| தமிழ்ச் சுவடிகளும் பதிப்பும் | *பாலகவி மு. கோ. ராமன்* | 75. |
| அரங்கப்பத் திருவேங்கடம் பிள்ளை நாட் குறிப்பு | | |
| | *முனைவர் எஸ். ஜெயசீலன் ஸ்டீபன்* | 90. |
| குமரிக் கண்டம் மூழ்கவில்லை | *முனைவர் கொடுமுடி. சண்முகன்* | 46. |
| பதிப்பியல் சிந்தனைகள் | *பேராசிரியர் இ. சுந்தரமூர்த்தி* | 100. |

| | | |
|---|---|---|
| தமிழாய்வில் கண்ட உண்மைகள் | *முனைவர் இரா. மதிவாணன்* | 100. |
| கடைக் கழக நூல்களின் காலமும் கருத்தும் | *முனைவர் இரா. மதிவாணன்* | 75. |
| தொல்காப்பியர் காலம் | *முனைவர் இரா. மதிவாணன்* | 65. |
| சொல்லாய்வுக் கட்டுரைகள் | *முனைவர் இரா. மதிவாணன்* | 85. |
| சிலம்பின் காலக் கணிப்பு | *முனைவர் இரா. மதிவாணன்* | 80. |
| சிலம்பின் காலம்? | *டாக்டர் செல்லன் கோவிந்தன்* | 80. |
| சிலம்பின் காலம் மீண்டும் ஒரு விளக்கம் | ” | 35. |
| கண்ணகி வழிபாடு – தென்னகத்திலும் இலங்கையிலும் | *டாக்டர் செல்லன் கோவிந்தன்* | 70. |
| மலையமான் திருமுடிக்காரி | *–ராஜேந்திரன்* | 90. |
| நெடுநல்வாடை | *நலங்கிள்ளி* | 18. |
| இங்கர்சால் கட்டுரைகள் | *நலங்கிள்ளி* | 50. |
| நந்திக் கலம்பகம் (மூலமும் உரையும்) | *புலவர் ம. அய்யாசாமி* | 60 |
| தேனினும் இனிய தேவாரம் | *அ. வெ. சுப்ரமணியன்* | 65. |
| தமிழன் கண்ட இலட்சிய இல்லறம் | *அ. வெ. சுப்ரமணியன்* | 50. |
| சங்கத் தமிழ் இன்பம் | *முனைவர் கா.பெ. சந்திரசேகரன்* | 42. |
| அன்பு சிவம் தொண்டு | *முனைவர் கா.பெ. சந்திரசேகரன்* | 65. |
| வளர்தமிழ்ச் சிந்தனைகள் | *முனைவர் மு. முத்துவேலு* | 65. |
| இராமாயணச் சிந்தனைகள் | *பேராசிரியர் செ. வேங்கடராமன்* | 54. |
| சிவப்பிரகாசர் சிந்தனைகள் | *பேராசிரியர் செ. வேங்கடராமன்* | 56. |
| இலக்கியச் சிந்தனைகள் | *பேராசிரியர் செ. வேங்கடராமன்* | 50. |
| திறனாய்வுச் சிந்தனைகள் | *பேராசிரியர் செ. வேங்கடராமன்* | 65. |
| முன்னும் பின்னும் | *உவமைக் கவிஞர் சுரதா* | 90. |
| தமிழ் இலக்கியத்தில் சமுதாயச் சிந்தனைகள் | *முனைவர் ச. முருகேசன்* | 65. |
| தொல்காப்பியம் வேற்றுமைக் கோட்பாடு | *சு. பாலுசாமி, சு. லலிதா பாலுசாமி* | 65. |

மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்
முத்துக்குமாரசுவாமி பிள்ளைத் தமிழ்—ஒப்பாய்வு *சு. பாலுசாமி* 80.
அமிர்த சாகரர் எழுதிய யாப்பருங்கலக் காரிகை
மூலமும் – குணசேகர் உரையும் *முனைவர் கு. கண்ணன்* 60.
அணியில் சிந்தனைகள் *ம. கருணாநிதி* 85.
புறத்திணை விருந்து *பொ. சுந்தரமகாலிங்கம்* 45.
இலக்கணப் பார்வைகளும் பதிவுகளும் *முனைவர் சு. அழகேசன்* 50.
இலக்கியமும் இலக்கணமும் *பீ. டாக்டர் நசீம்தீன்* 42.
இலக்கியம் ஒப்பிலக்கியம் சமுதாயம் *பீ. டாக்டர். நசீம்தின்* 77.
புறநானூற்றில் விழுமியங்கள் *டாக்டர். கு. சிவப்பிரகாசம்* 100.
இலக்கியம் காட்டும் வாழ்வில் *டாக்டர். கு. சிவப்பிரகாசம்* 60.
ஆழ்வார்த் தாலாட்டு *–அ. பிரஸில்லா* 100.
திருக்குறள் காமத்துப் பால் - உரை விளக்கம்
*கி.சு.வி. இலட்சுமி அம்மாள்* 60.
வழக்கிழந்த தமிழ்ச் சொற்கள் *அனந்தபுரம் கோ. கிருட்டினமூர்த்தி* 25.
பழமொழித் தொகுப்பு வரலாறு *ம. லோகநாதன்* 75.
குமாரன் ஆசான்—பாரதிதாசன் ஓர் ஒப்பாய்வு *முனைவர் காஞ்சனா* 100.
தனித்தமிழ் இயக்கங்களும் இதழ்களும் *மா. வேதகிரி* 50.
இதழுலகில் திரு. வி. க. *மா. ரா. இளங்கோவன்* 80.
எழுச்சி முழக்கம் *டாக்டர் சா. சகத்ரட்சகன்* 45.
இருபெரும் புலவர்கள் *டாக்டர் சா. சகத்ரட்சகன்* 70.
மனோன்மணீயம் சுந்தரனார் *பி. குமரேசன்* 80.
புதுவை இலக்கணச் செம்மல் சி. இரமேஷ் 36.
தமிழும் ஞானியாரடிகளும் *மேலைச் சிவபுரி முத்துராமன்* 36.
பட்டினத்தார் கதை *வெள்ளையாம்பட்டு சுந்தரம்* 60.
தாயுமானார் கதை *வெள்ளையாம்பட்டு சுந்தரம்* 25.
பாவேந்தர் படைப்பில் அங்கதம் *கவிஞர் முருகு. சுந்தரம்* 70.



## நூலாசிரியர் பற்றி

பேராசிரியர் கா.ம.வேங்கடராமையா - அன்னபூரணி தம்பதியருக்கு நான்காம் புதல்வராக 09.02.1950-இல் திருப்பனந்தாளில் பிறந்தவர். திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரியில் வித்துவான் பட்டம் பெற்றவர். ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம் பற்றி ஆய்வு செய்து திருச்சி பாரதிதாசன் பல்கலைக்கழகத்தில் எம்.பில் பட்டம் பெற்றவர்.

ஆடுதுறை ஸ்ரீகுமரகுருபர சுவாமிகள் மேல்நிலைப் பள்ளியில் முதுகலைத் தமிழாசிரியராகப் பணிபுரிந்து தன்னார்வ ஓய்வு பெற்றவர். சென்னையில் இதழியலாளராகப் பணியாற்றி வருபவர்.

சென்னை செண்டினேரியன் டிரஸ்ட் சார்பில் முன்னாள் ஜனாதிபதி வெங்கட்ராமன் அவர்களால் சேவா ரத்னா விருது பெற்ற சிறப்புக்குரியவர். மதுரை ஆதீனகர்த்தரால் சைவ ஞான பானு எனவும், பனசைப் புலவர் குழுவினர் சார்பில் திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடம் அதிபரால் சைவத் தமிழ்மணி எனவும் பட்டமளித்துப் பாராட்டப் பெற்றவர்.

காமகோடி ஆய்வு மையத்தின் இயக்குனராகவும், தெய்வத்தமிழ் எழுத்தாளர் பேரவை பொதுச்செயலாளராகவும் இயங்கும் இவர் 15க்கும் மேற்பட்ட நூல்களை ஆக்கி அளித்துள்ள கல்வெட்டாய்வாளர் ஆவார்.

இவர் மணிவிழா 20.01.2009 முதல் நடைபெற்று வருகிறது. மணிவிழாவை ஒட்டி மாதந்தோறும் நூல் மலர்கள் மலர உள்ளன. நிறைவு நாளில் இவரால் தொகுக்கப்பட்டு வரும் சோழ மாமன்னர் செப்பேடுகள் என்ற நூல் வெளியிடப்பட இருக்கிறது.


ISBN 819076583
9788190765583